

# தமிழ்த்தாய் வாழ்த்து

## புதுச்சேரி அரசின் தமிழ் வாழ்த்துப்பாடல்.

வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே!
மாண்புகள் நீயே என் தமிழ்த் தாயே!
வீழ்வாரை வீழாது காப்பவள் நீயே
வீரனின் வீரமும், வெற்றியும் நீயே!

தாழ்ந்திடு நிலையினில் உனை விடுப்பேனோ?
தமிழன்எந் நாளும் தலைகுனி வேனோ?
சூழ்ந்தின்பம் நல்கிடும் பைந்தமிழ் அன்னாய்
தோன்றுடல் நீஉயிர் நான்மறப் பேனோ?

செந்தமிழே! உயிரே! நறுந்தேனே!
செயலினை மூச்சினை உனக்களித்தேனே!
நைந்தா யெனில்நைந்து போகுமென் வாழ்வு
நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே!

முந்திய நாளினில் அறிவும் இலாது
மொய்த்தநன் மனிதராம் புதுப்புனல் மீது
செந்தாமரைக் காடு பூத்தது போலே
செழித்தஎன் தமிழே ஒளியே வாழி!

— புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்








# தமிழ்த்தாய் வாழ்த்து

## தமிழ்நாடு அரசின் தமிழ் வாழ்த்துப்பாடல்.

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ் பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே! தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!! வாழ்த்துதுமே!!!

— மனோன்மணியம் சுந்தரனார்





# மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் வாழ்த்துச் செய்தி

**ஜெ ஜெயலலிதா**
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009.

தேதி 30.1.2016

**வாழ்த்து மடல்**

அன்புடையீர்,

வணக்கம்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் **31.1.2016** அன்று சேலம் மாநகரில் செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணியும், மாநாடும் நடைபெற உள்ள விபரம் அறிந்தேன். மிக்க மகிழ்ச்சி.

தமிழகமெங்கும் பரவலாக வாழ்கின்ற நெசவாளர் சமூக மக்கள் ஒன்று கூடி மக்கள் நலன் குறித்து கலந்துரையாட இந்தப் பேரணியும், மாநாடும் உதவும் என்பது திண்ணம்.

மாநாடு வெற்றி பெறவும், அதையொட்டி வெளியிடப்பட இருக்கின்ற மலர் சிறப்புற அமைந்திடவும் என் உளப்பூர்வமான நல்வாழ்த்துகள் உரித்தாகுக.

தங்கள் அன்புள்ள,

**ஜெ ஜெயலலிதா**





வாழ்க வாழ்க
செங்குந்தர்!

வெல்க வெல்க
செங்குந்தம்!

# செங்குந்தர் உறுதிமொழி

**நாம் செங்குந்த குலக்கடவுள் அருள்மிகு முருகப்பெருமான் ஆணையாக, மனசாட்சியுடன் கீழ்க்கண்டவாறு உறுதி பூணுகிறோம்.**

1. நாம் இந்தியக் குடிமக்களாய் இருப்பதை, பெருமையாகக் கருதுகிறோம். நமது நாட்டின் அரசியல் அமைப்புச் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு, நாட்டின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபடுவோம்.
2. நாம், செங்குந்தர் என்ற உணர்வுடன் ஒன்றுபட்டு, நமது சங்கத்தின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு சமூக, பொருளாதார, கல்வி, தொழில், கலாச்சார முன்னேற்றத்திற்குப் பாடுபடுவோம். சமூக நலம் காப்போம்.
3. நாம் மற்ற இனத்தவரிடம், மனித நேயம் கொண்டு, நட்புடனும், அன்புடனும் பழகுவோம்.
4. நாம், நமது உரிமைகளைப் பாதுகாக்க எப்பொழுதும் விழிப்புடன் செயல்படுவோம்.
5. நாம் நமது சங்கம் நிறுவிய சான்றோர்களை நினைவில் கொண்டு, சங்கத்தை நாளும் வளர்த்திடுவோம்.





வாழ்க வாழ்க செங்குந்தர்!

வெல்க வெல்க செங்குந்தம்!
















# 19 வது

# செங்குந்தர் மாநில மாநாடு

## செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணி

## அழைப்பிதழ்

| 31-01-2016<br>ஞாயிற்றுக்கிழமை | தியாகி திருப்பூர் குமரன் திடல்<br>(போஸ் மைதானம்) - **சேலம்** |
|---|---|

செங்குந்த சொந்தங்கள் அனைவரும் அலைகடலென அணிதிரண்டு வாரீர்! வாரீர்

என, அன்புடன் வரவேற்கும்

**தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்**

31-01-2016
ஞாயிறு
காலை
9.00 மணி

## வள்ளல் சபாபதி கலையரங்கம்

மாங்கள இசை

அறிஞர் அண்ணா கொடி மேடையில் குலக்கொடியேற்றுதல்:

**கைத்தறிக் கதிரவன் திரு. K.P.K.செல்வராஜ்**

தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

குத்துவிளக்கு ஏற்றுதல்

### காலை 09.05 மணி - பரதநாட்டியம் - உமா கலைக்கூடம், பழனி

தலைமை : திரு.V.சிவா, துணைத் தலைவர், தெ.செ.ம.சங்கம்.

முன்னிலை : திரு.A.K.பழனியப்பன்
தலைவர், மார்கழி பெருவிழா கமிட்டி.
திரு.A.லோகநாதன்
துணைத் தலைவர், செ.ம.ச., சேலம்
திரு.M.சிவக்குமார்
ஆடிட்டர் அணி

வரவேற்புரை : திரு.ப.இராஜாக்கண்ணு, செயலாளர், தெ.செ.ம.சங்கம்.

### காலை 09.35 மணி - கவியரங்கம்

தலைமை : திரு.மெட்டல் M.மணி
துணைத் தலைவர், தெ.செ.ம.சங்கம்.

முன்னிலை : திரு.K.ராஜப்பன்
செயலாளர், சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம்.
Dr.S.பன்னீர்செல்வம்
நிர்வாக இயக்குநர், சண்முகா மருத்துவமனை.
திரு.K.P.மகாலிங்கம்
உபதலைவர், சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம்.

வரவேற்புரை : திரு.K.கருணாநிதி
செயலாளர், தெ.செ.ம.சங்கம்.

தலைப்பு:
**இவர்கள் பேசினால்...**

திருமுருக கிருபானந்த வாரியார் - கவிஞர்.க.தியாகசீலன்
அறிஞர் அண்ணா - கவிஞர்.க.சந்திரசேகரன்
கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் - கவிமாமணி.சேலம் பாலன்
நெசவாளர் நேசன் J.சுந்தானந்தன் - கவிமாமணி. மழை மகன்
பாவேந்தர் பாரதிதாசன் - புலவர். ப.பார்த்திபன்

### காலை 10.30 மணி - புத்தக வெளியீடு

தலைமை : திரு.வெ.தண்டபாணி,
துணைத் தலைவர், தெ.செ.ம.சங்கம்.

முன்னிலை : திரு.M.லோகநாதன்,
சேர்மன், சேலம் இன்ஜினியரிங் காலேஜ்.
திரு.S.சரவணன்,
தலைவர், சேலம் மாவட்ட உள்ளூர் குழுத் தலைவர்.
திரு.T.இராஜாமணி
செயல் தலைவர், கடலூர் மாவட்ட செ.ம.சங்கம்.

வரவேற்புரை : திரு.க.பாலசுப்ரமணியம்
செயலாளர், தெ.செ.ம.சங்கம்.

**செங்குந்தர் வரலாறு - அனிதா கு.கிருஷ்ணமூர்த்தி**
வெளியிடுபவர் : திரு. A.S.வெங்கடாசலம், ஆடிட்டர் அணி
பெற்றுக்கொள்பவர் : திரு. S.N.சரவணன், மாநில செய்தித் தொடர்புக்குழு

**சிஎஸ்ஆர் வித்தக வாழ்க்கை - விஜய் சண்முகம்**
வெளியிடுபவர் : கவிமாமணி திரு. V.G.T.வேலு, மாநில ஆன்மீக அணி
பெற்றுக்கொள்பவர் : திரு. S.ராஜகம்பீரன், மாநில விவசாயஅணி

**பதின்மரைப் போற்றுவோம் - வாரியார்தாசன்**
வெளியிடுபவர் : திரு. K.பாரதி, மாநில வழக்கறிஞர் அணி
பெற்றுக்கொள்பவர் : Dr.S.தாங்கவேல், திருப்பூர் குமரன் சிலை அமைப்புக்குழு

## சிறப்பு அழைப்பாளர்கள்

திரு. சி.பி.திருநாவுக்கரசு
முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர், புதுச்சேரி

திரு. S.P.மணவாளன்
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர், திருப்பத்தூர்

திரு.மு.பாலசுப்ரமணியன்
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர், புதுச்சேரி

திரு. P.S.நடராஜன், உப தலைவர்,
ஈரோடு செங்குந்தர் பொறியியல் கல்லூரி

Jansons T.S.நடராஜன்
எழுகரை செங்குந்தர் பாவடி பஞ்சாயத்து நாட்டாமைக்காரர்

திரு. Rtn. MPPH R. ராதா
ராஜ்இண்டியா ஸ்பின்னர்ஸ் (பி) லிட்.

திரு. K.K.பாலுசாமி
இந்து கல்வி நிலையம்

திரு. யாழி மதிவாணன்
யாழி சிட்பண்ட்ஸ் (பி) லிட்.

திரு. R.கந்தசாமி
தலைவர், செங்குந்த மகாஜன சங்கம், கர்நாடகா

திரு. C.கார்த்திகேயன்
தலைவர், செங்குந்த மகாஜன சங்கம், கேரளா

திரு. P.G.செல்வராஜ்
தலைவர், செங்குந்த மகாஜன சங்கம், ஆந்திரா

திரு. K.கணேசன்
தலைவர், செங்குந்த மகாஜன சங்கம், அந்தமான்

திரு. P.T.இராஜன்
உறுப்பினர், மாநில சொத்துப் பாதுகாப்புக்குழு

திரு. M.கைலாசம்
துணை அமைப்பாளர், மாநில ஆன்மீக அணி

திரு. K.K.ராமச்சந்திரன்
சேர்மன், ஷார்ப் நிறுவனங்கள்

திரு.S.சிவானந்தம், செயலாளர்,
ஈரோடு செங்குந்தர் பொறியியல் கல்லூரி.

திரு. A.சந்திரசேகரன்
உறுப்பினர், மாநில சொத்துப் பாதுகாப்புக்குழு

திரு. P.L.ஜெகநாதன், தலைவர்,
செங்குந்தர் முன்னேற்ற சங்கம், சங்கரன்கோவில்

திரு. ஜீனா. அ.லோகநாதன்
தியாகி திருப்பூர் குமரன் நினைவு அறக்கட்டளை

ஆண்டவர் திரு. A.ராமசாமி,
அமைப்பாளர், மாநில வர்த்தகர் அணி

திரு. A.D.இளங்கோ @
ஆதியூர் மணி, தொழிலதிபர்

திரு. P.M.கோபாலன்
கீதாஞ்சலி ஆல் இண்டியா பப்ளிக் ஸ்கூல்

திரு. N.கிருஷ்ணன்
லட்சுமி டெக்ஸ்டைல்ஸ் பிரிண்டிங் மில்ஸ்

திரு. T.அரங்கண்ணல், சேர்மன்,
ஞானமணி எஜுகேஷனல் இன்ஸ்டிடியூசன்ஸ்

திரு. S.லக்ஷ்மணன்
தொழிலதிபர், அபுதாபி

திரு. A.துரைசாமி BABL,
வழக்கறிஞர், சேலம்.

திரு. S.தேவராஜன்
சம்பந்தம் ஸ்பின்னிங் மில்ஸ்

திரு. R.செல்வராஜ்
ஸ்ரீ கந்தகிரி ஸ்பின்னிங் மில்ஸ்

திரு. S.P.கனகராஜ்
S.P. ஸ்பின்னிங் மில்ஸ்

திரு. K.கைலாசம்
AVS, சக்தி கைலாஷ் குரூப்

திரு. M.தங்கவேல்
கணேஷ் இன்ஜினியரிங் கல்லூரி

திரு. P.அருள்செல்வம்
Volga Tech, திருப்பூர்.

## பகல் 11.00 மணி - மாநாட்டுச் சிறப்பு மலர் வெளியீடு

தலைமை : திரு.M.K.S.உத்தண்டி,
துணைத் தலைவர், தெ.செ.ம.சங்கம்.

முன்னிலை : திரு.P.வேலுச்சாமி,
தலைவர், செங்குந்தர் கல்யாண மண்டபம், அம்மாபேட்டை.

திரு. M.சுப்ரமணியம் @ ராஜூ
தலைவர், ஸ்ரீ காமாட்சியம்மன் கல்யாண மண்டபம், திருப்பூர்.

திரு.P.சுந்தரம் & பிரதர்ஸ்
நிர்வாக இயக்குநர், கோல்டன் ஸ்பின்னிங் மில்ஸ்.

வரவேற்புரை : உடுமலை திரு. மு.சிவசண்முகம்,
செயலாளர், தெ.செ.ம.சங்கம்

வெளியிடுபவர் :

திரு. V.P.சிவக்கொழுந்து
தலைவர், புதுவைச் செங்குந்தர் கல்விச் சங்கம்

பெற்றுக்கொள்பவர்கள்:

திரு. S.K.C.குப்புசாமி
கௌரவத் தலைவர், செங்குந்த மகாஜன சங்கம், திண்டுக்கல்.

திரு. P.கோவிந்தசாமி
செயலாளர், கடலூர் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம்.

திரு. K.P.N.முத்து வேலாயுதம்
செயலாளர், திருப்பூர் தெற்கு மாவட்ட செ.ம.சங்கம்.

## பகல் 11.30 மணி - பட்டிமன்றம்

தலைமை : திரு.R.P.குமரகுருபரன்,
துணைப் பொதுச் செயலாளர், தெ.செ.ம.சங்கம்.

முன்னிலை : திரு.T.புகழனார்
துணை அமைப்பாளர், மாநில ஆன்மிக அணி

திரு.P.P.மாதேஷ்வரன், தலைவர்,
துர்க்கையம்மன் வார வழிபாட்டுக்குழு, சேலம்.

திரு.M.சிங்காரவேல், வழக்கறிஞர்.

வரவேற்புரை : திரு.P.K.குருநாதன்
சங்க அமைப்புச் செயலாளர், தெ.செ.ம.சங்கம்.

நடுவர்: பேரா. A.பாலதண்டபாணி

தலைப்பு:

சமூக அங்கீகாரம் பெற
பெரிதும் துணை நிற்பது

| அரசியல் பணியா? | அறப்பணியா? |
|---|---|
| சோ.காசிநாதன் | S.சோலைமுத்து. |
| வே.செந்தில்குமரன் | பேரா.அரசு பரமேஸ்வரன் |
| P.S.ஜெய்கணேஷ் | திருமதி. திலகவதி சண்முகசுந்தரம் |

**மதியம் 2.00 மணி**

# செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணி

தொடங்கும் இடம்: செங்குந்தர் திருமண மண்டபம், அம்மாபேட்டை, சேலம்.

### தலைமை ஏற்று பேரணியை துவக்கிவைப்பவர்

கைத்தறிக் கதிரவன்
**திரு. K.P.K.செல்வராஜ்**
தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

### முன்னிலை

திருமதி. வசந்தா சுத்தானந்தன்
அமைப்பாளர், மாநில மகளிர் அணி

திரு.K.தேவகிருஷ்ணன்,
அமைப்பாளர், மாநில நெசவாளர் அணி

திரு.M.உமாபதி
மாநில சொத்துப் பாதுகாப்புக்குழுத் தலைவர்

### பேரணித் தளபதிகள்

திரு. P.மாரிமுத்து,
அமைப்பாளர், மாநில இளைஞர் அணி

துணை அமைப்பாளர்கள்:

திரு.பொ.சக்திமோகன், திரு.சு.முத்துமாரி, திரு.V.பழனி, திரு.து.ப.புனிதம், திரு.M.மணிகண்டன், திரு.வ.இராமதாஸ், திரு.M.A.முருகன், திரு.B.தினேஷ்குமார், திரு.B.மதிவாணன், திரு.M.செந்தில்நாதன், திரு.A.கணேசன், திரு.A.அறிவழகன், திரு.G.ஆறுமுகம்

**இளைஞர் அணியினர் முன்செல்ல, நாதஸ்வரம், தேவாரப் பாடல்கள், கோலாட்டம், சிலம்பாட்டம், ஒயிலாட்டம், கரகாட்டம், டிரம்ஸ், தாரை தப்பட்டை, செண்டை மேள தாளத்துடன் சொந்தங்கள் புடைசூழ தியாகி திருப்பூர் குமரன் திடல் நோக்கி புறப்படுதல்**

31-01-2016
ஞாயிறு
மாலை
6.01 மணி

# 19வது செங்குந்தர் மாநில மாநாடு

நெசவாளர் நேசன் J.S.அரங்கம், தியாகி திருப்பூர் குமரன் திடல்

- மாநாட்டு ஜோதி பெறுதல்
- வாணவேடிக்கை
- அமைதிப் புறா பறக்க விடுதல்
- இறைவணக்கம்
- செங்குந்தர் உறுதிமொழி

## தலைமை

கைத்தறிக் கதிரவன்
**திரு. K.P.K.செல்வராஜ்**
தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

## முன்னிலை

**திரு. M.S.ரெங்கையா**
புரவலர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

**பெண்ணாடம் திரு.ஆ.ராஜவேலு**
முன்னாள் தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

**திரு. K.பரஞ்ஜோதி**
புரவலர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்.

**திரு.S.ராமகிருஷ்ணன்**
தலைவர், சமுதாயப் பொருளாதாரத் தொண்டு மன்றம்.

**திரு. P.S.நடராஜன்**
உபதலைவர், ஈரோடு செங்குந்தர் பொறியியல் கல்லூரி

**Jansons T.S.நடராஜன்**
எழுகரை செங்குந்தர் பாவடி பஞ்சாயத்து நாட்டமைக்காரர்

**திரு. ந.கோவிந்தசாமி**
தலைவர், புதுச்சேரி மாநிலம்

**திரு.வை.ஆனந்தன்**
தலைவர், கடலூர் மாவட்டம்

**திரு. K.K.ராமச்சந்திரன்**
சேர்மன், ஷார்ப் நிறுவனங்கள்

**திரு. S.லக்ஷ்மணன்**
தொழிலதிபர், அபுதாபி

**கோல்டன் திரு.P.தங்கவேல்,**
மாநாட்டுப் பொருளாளர்.

**திரு.P.P.ராஜகோபால்**
தலைவர், நண்பர்கள் குழு, சேலம்.

## வரவேற்புரை:

**திரு.U.V.சடையப்பன்,** தலைவர், மாநாட்டு வரவேற்புக்குழு

## வாழ்த்துரை :

**திரு. மு.வைத்தியநாதன்**
சட்டமன்ற உறுப்பினர், புதுச்சேரி

**திரு.ம.விஸ்வேஸ்வரன்**
சட்டமன்ற உறுப்பினர், புதுச்சேரி

## சிறப்பு அழைப்பாளர்கள்

**திரு.H.ராஜா**
தேசியச் செயலாளர், பாரதிய ஜனதா கட்சி

**திரு. R.K.செல்வமணி**
பொதுச்செயலாளர், தமிழ்நாடு திரைப்பட இயக்குநர்கள் சங்கம்

## கௌரவ விருந்தினர்

மாண்புமிகு திரு. **பொன். இராதாகிருஷ்ணன்** அவர்கள்
இணை அமைச்சர், சாலைப்போக்குவரத்து, நெடுஞ்சாலைகள் மற்றும் கப்பல் போக்குவரத்துத் துறை

## சிறப்புரை

நீதியரசர் **S.ஜெகதீசன்** அவர்கள்

## மாவட்டத் தலைவர்களை கௌரவித்தல்

## மாநாட்டுத் தீர்மானங்கள் வாசிப்பவர்

**S.திருமாவளவன்,**
பொதுச் செயலாளர், தெ.செ.ம.சங்கம்

## நன்றியுரை

**தாரை அ.குமரவேலு,**
பொருளாளர், தெ.செ.ம.சங்கம்,

ஒருங்கிணைப்பாளர்:
**K.P.நக்கீரன்,**
மாநாட்டு வரவேற்புக்குழு

நிகழ்ச்சி தொகுப்பாளர்:
**பேரா. A.பாலதண்டபாணி,**
அமைப்பாளர், மாநில இலக்கிய அணி

நிகழ்ச்சி நெறியாளர்கள்:
**R.காந்தி,** தலைவர், மதுரை மாவட்டம்
**A.R.செல்வராஜ்,** தலைவர், திருப்பூர் மாவட்டம்

மேடை நிர்வாகம்:
**G.ஸ்ரீனிவாசன்,**
மாநாட்டு வரவேற்புக்குழு உறுப்பினர்

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின்
# 19வது மாநில மாநாட்டிற்கு

## வருகைதரும் செங்குந்த சொந்தங்கள் அனைவரையும் அன்புடன் வரவேற்கும் மாநில மற்றும் மாவட்ட நிர்வாகிகள்

தலைமைச் சங்கத் துணைத் தலைவர்கள்

**V.சிவா** E.L.C. **மெட்டல் M.மணி** **வெ.தண்டபாணி** **M.K.S.உத்தண்டி**

பொதுச் செயலாளர்
**S.திருமாவளவன்**

துணைப் பொதுச் செயலாளர்
**R.P.குமரகுருபரன்**

சங்கப் பொருளாளர்
**தாரை அ.குமரவேலு**

சங்கச் செயலாளர்கள்

**ப.இராஜாக்கண்ணு** **K.கருணாநிதி** **க.பாலசுப்ரமணியம்** **உடுமலை மு.சிவசண்முகம்**

அமைப்புச் செயலாளர்: **P.K.குருநாதன்**

### சென்னை மாவட்டம்

| D.ஆறுமுகம் | T.V.சரவணன் | T.K.விஜயபாரதி |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.திருமாவளவன் M.குழந்தைவடிவேல் T.T.திருபாகரன்

### காஞ்சிபுரம் மாவட்டம்

| புலவர் க.சந்திரசேகரன் | பா.குமரேசன் | த.ப.கண்ணன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

D.தணிகாசலம் பூ.இரவிச்சந்திரன் வ.இராமதாஸ்

### வேலூர் கிழக்கு மாவட்டம்

| A.சுப்பிரமணியம் | N.D.பாஸ்கரன் | T.K.P.செல்வம் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

G.சரவணன் N.ஏழுமலை S.V.பாலன்

### வேலூர் மேற்கு மாவட்டம்

| S.அருணோதயம் | G.சீனிவாசன் | N.மாணிக்கவாசகம் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.தேவராஜ் C.N.தட்சணாமூர்த்தி எம்.பி.சாம்பசிவம்

### திருவண்ணாமலை மாவட்டம்

| V.சிவா | A.D.R.காந்திராஜன் | P.T.சம்பந்தம் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

T.K.பொன்னுசாமி சீனி.கார்த்திகேயன் G.அண்ணாமலை

### புதுச்சேரி மாநிலம்

| ந.கோவிந்தசாமி | வி.பி.சிவக்கொழுந்து | க.தனகோடி |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

ப.இராஜாக்கண்ணு ஆ.அர்மாப்பாமகன் பி.எம்.பாபுஜி இராஜேந்திரன்

### திருவள்ளூர் மாவட்டம்

| N.K.நரசிம்மன் | G.N.சுந்தரவேல் | M.A.முருகன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

P.N.மாணிக்கம் C.உமாபதி N.D.பொன்னுசாமி

### ஆந்திர மாநிலம்

| P.G.செல்வராஜ் | J.K.அண்ணாமலை | K.C.நீலமேகம் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

V.S.பானுமூர்த்தி S.G.பாண்டுரங்கன் M.S.கருணாகரன்

### அந்தமான்

| K.கணேசன் | P.J.சேகர் | B.தினேஷ்குமார் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

P.S.ஆறுமுகம் A ONE சங்கர்

### கடலூர் மாவட்டம்

| வை.ஆனந்தன் | P.கோவிந்தசாமி | P.K.இரத்தினசபாபதி |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

ஆ.ராஜவேலு T.ராஜாமணி P.T.இராஜன்

## விழுப்புரம் மாவட்டம்

| R.P.குமரகுருபரன் | V.பழனி | K.கருணாநிதி |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

C.மாணிக்கம் N.அரங்கநாதன் K.வேலு

## திருச்சி மாவட்டம்

| வட்டல் M.மணி | A.சுப்ரமணியன் | V.செல்வம் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

M.பிச்சுமணி M.சுந்தரராஜ² S.P.சித்தன்

## அரியலூர் மாவட்டம்

| V.R.பழனியப்பன் | து.ப.புனிதம் | S.கார்த்திகேயன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.சுப்ரமணியன் S.K.செல்வம் A.ஞானசேகரன்

## பெரம்பலூர் மாவட்டம்

| ச.மீனாட்சிசுந்தரம் | பெ.பச்சமுத்து | N.சரவணன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

இரா.பழனியப்பன் ஆ.இராஜேந்திரன் N.சீனிவாசன்

## கரூர் மாவட்டம்

| பகவான் P.T.பரமேஸ்வரன் | R.ஸ்டீபன் பாபு | C.பாஸ்கர் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

U.S.தர்மசேனன் க.இளமுருகு D.செந்தில்குமார்

## தஞ்சாவூர் மாவட்டம்

| V.S.மணி | V.S.கலியபெருமாள் | சோ.காசிநாதன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.ஞானசேகரன் D.வைரவேல் S.K.N.சீனிவாசன்

## திருவாரூர் மாவட்டம்

| RM.P.R.S.சுந்தரமூர்த்தி | C.கணபதி | C.கோவிந்தராஜ² |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

T.S.K.தில்லைவிநாயகம் N.S.பாலசுப்ரமணியன் S.ராஜகம்பீரன்

## நாகப்பட்டிணம் மாவட்டம்

| அரு.சச்சிதானந்தம் | சீ.ஆறுமுகம் | வீ.பாலசுந்தரம் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

க.பாலசுப்ரமணியன் M.G.இராஜேந்திரன் N.முருகேசன்

## புதுக்கோட்டை மாவட்டம்

| A.பச்சைமுத்து | S.நாகராஜன் | G.நடராஜன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

Dr.S.எழில்அரசன் M.முத்துராமலிங்கம் Dr.V.S.கோவிந்தராஜன்

## மதுரை மாவட்டம்

| R.காந்தி | C.ரெங்கராஜ் | N.பேச்சிமுத்து |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.இரத்தினசபாபதி K.S.நாகமணி S.சோமசுந்தரம்

## இராமநாதபுரம் மாவட்டம்

| இ.தனசீலன் | அ.ராசசேகரன் | P.பாலகிருஷ்ணன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

செ.மோகன் இல.மு.பாலகிருஷ்ணமூர்த்தி சு.முத்துமாரி

## சிவகங்கை மாவட்டம்

| Lion.வே.செல்வராஜன் | க.பாலசுப்ரமணியம் | P.S.பாண்டியன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.முருகேசன் அண.தெட்சிணாமூர்த்தி A.எழில்மாறன்

## திண்டுக்கல் மாவட்டம்

| வெ.தண்டபாணி | இரா.நடராஜன் | கே.மேகநாதன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.K.C.குப்புசாமி வி.சுப்பிரமணி

## திருநெல்வேலி மாவட்டம்

| P.மாரிமுத்து | பழ.மாணிக்கவாசகம் |
|---|---|
| செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

K.சக்திவேல் S.N.சரவணன்

## கன்னியாகுமரி மாவட்டம்

| நா.செந்தூரான் | ப.இராசவேல் | M.முருகன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.பாலமுரளிகிருஷ்ணன் M.ராமசுப்பு க.ஜீவானந்தம்

## கேரள மாநிலம்

| C.கார்த்திகேயன் | M.ராமன் | S.சுந்தரராஜன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

N.நாகப்பன் V.சுந்தரமோகன் C.நடராஜன்

## விருதுநகர் மாவட்டம்

| ச.அண்ணாதுரை | பொ.சக்திமோகன் |
|---|---|
| செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

G.தில்லைகோவிந்தன் ஆ.கோட்டீஸ்வரன் அ.பாலு(எ)சுப்பிரமணியம்

## தூத்துக்குடி மாவட்டம்

| ச.சங்கரநாராயணன் | மா.இராமலிங்கம் | R.சுப்பிரமணியன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

S.சுந்தரமுத்துசாமி (எ) K.S.செல்வராஜ் சி.கா.முத்தையா S.பாக்யராஜ்

## சேலம் மாவட்டம்

| U.V.சடையப்பன் | K.ராஜப்பன் | கோல்டன் P.தங்கவேல் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

தாரை அ.குமரவேலு K.P.மகாலிங்கம் M.செந்தில்நாதன்

## நாமக்கல் மாவட்டம்

| M.மாதேஷ் | A.கேசவன் | B.மதிவாணன் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

K.ராஜாராம் A.சண்முகசுந்தரம் S.கார்த்திகேயன்

## தர்மபுரி மாவட்டம்

| M.K.S.உத்தண்டி | P.சச்சிதானந்தம் | V.M.கோபால் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

N.செல்வராஜ் N.சண்முகம் P.தேவராசன்

## கிருஷ்ணகிரி மாவட்டம்

| T.S.திருநாதன் | K.S.T.கோவிந்தராஜ் | T.ரவிசங்கர் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

R.பாபு சிவக்குமார் M.S.ஜெகநாதன் A.கணேசன்

## ஈரோடு மாவட்டம்

| சி.மா.இராமலிங்கம் | S.A.சிவசாமி | P.துரைசாமி |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

K.லோகநாதன் திருமதி.வசந்தா சுத்தானந்தன் S.V.பழனியப்பன்

## கோவை மாவட்டம்

| N.R.பாலகிருஷ்ணன் | A.S.வெங்கடாசலம் | A.மணி |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

K.R.கந்தகுமார் A.சந்திரமோகன் K.தயாளன்

## திருப்பூர் மாவட்டம்

| A.R.செல்வராஜ் | உடுமலை மு.சிவசண்முகம் | K.P.K.செல்வராஜ் |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

K.ராமகிருஷ்ணன் S. அங்குராஜ் M.A.குப்புசாமி

## கர்நாடகா மாநிலம்

| R.கந்தசாமி | V.ஆசைதம்பி | D.சந்திரசேகரா |
|---|---|---|
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

செயற்குழு உறுப்பினர்கள்

V.T.பிச்சாண்டி N.திருவேங்கடம் M.J.சிவபாண்டியன்

## காரைக்கால் மாவட்டம் (தற்காலிக நிர்வாகக்குழு)

பொன்.தட்சிணாமூர்த்தி N.விநாயகமூர்த்தி

V.K.இராமதாஸ் S.ஜெகநாதன்

T.சம்பந்தம் N.சௌரிராஜன்

## நியமன செயற்குழு உறுப்பினர்கள்

N.கச்சபாலயம் A.மருதாசலம் P.P.ராஜகோபால்

R.T.கண்ணன் ஸ்ரீநகர் C.வேலுச்சாமி

M.K.சுந்தரமூர்த்தி N.பெருமாள் S.R.கலைமணி

திருமதி. குப்பம்மாள் மாணிக்கம்



# மலர்க்குழு





பேரா. A.பாலதண்டபாணி
நாமக்கல்



பேரா. K.முருகேசன்
சென்னை



திரு. S.உத்தண்டி
தருமபுரி



P.கோவிந்தசாமி
கடலூர்



திரு. S.A.சிவசாமி
ஈரோடு



திரு. A.R.செல்வராஜ்
திருப்பூர்



திரு. G.தில்லைகோவிந்தன்
சிவகாசி



திரு. K.P.நக்கீரன்
சேலம்



திரு. S.பிரகாஷ்
திருப்பூர்

# குலத் தலைவர்கள்



**கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர்**

கி.பி.12ஆம் நூற்றாண்டு

# மலர்க்குழு அணிந்துரை

"செய்யுந் தொழிலைச் சீர்தூக்கிப் பார்க்குங்கால்
நெய்யுந் தொழிலுக்கு நிகரில்லை – வையகத்தில்" என்ற பெருமைமிக்க பாடலுக்கு சொந்தக்காரர்களாகிய செங்குந்த சொந்தங்களுக்கு, வணக்கம்.

சேலம் மாநாடு தலைவரின் முயற்சியாலும் பலரின் ஆற்றலினாலும் செயற்குழு உறுப்பினர்கள் மற்றும் செங்குந்த சொந்தங்களின் பங்களிப்பாலும் சிறப்பாக நடைபெற்றது.

அதைப் போலவே மாநாடு மலரையும் மிகச் சிறப்பாக செய்து முடிக்க வேண்டிய கட்டாயம் மலர்க் குழுவிற்கு ஏற்பட்டது. அதன் விளைவாக அனைத்துச் செயற்குழு உறுப்பினர்களுக்கும் அவர்களின் மாவட்டம் சார்ந்த குறிப்புகளும், நன்கொடையாளர்களின் புகைப்படமும் கேட்டு 9 முறை தபாலிலும், தொலைபேசியில் 7 முறையும், நமது செங்குந்தமித்திரன் புத்தகத்தில் விளம்பரத்திற்காக 12 மாதங்கள் வெளியிட்டும் ஒரு சில மாவட்டங்கள் மட்டுமே விளம்பரங்களையும், நன்கொடையாளர்கள் போட்டோக்களையும் எங்களுக்கு அனுப்பி வைத்தனர்.

மாநாடு மலர் கலர் பக்கங்களில் சிறப்பாகவும் , வாழ்நாள் முழுவதும் போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டிய பொக்கிஷமாகவும் இருக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு, அனைத்து மாவட்டங்களின் பங்களிப்பும் அம்மலரில் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தோடும் திட்டமிட்டு செயலாற்றினோம்.

சேலம் மாநாடு மலரின் விளம்பரக் கட்டணம் பாவேந்தர் பாரதிதாசன் அறக்கட்டளை கணக்கில்தான் விளம்பரதாரர்கள் கட்டி இருக்கின்றனர். விளம்பரத்திற்காக யாரிடமும் பணம் நேரடியாகப் பெறவில்லை. விளம்பரதாரர் பட்டியல் மற்றும் வரவு - செலவு விபரங்கள் இறுதிப் பக்கங்களில் இணைக்கப்பட்டுள்ளது.

ஆனால், விளம்பரங்களின் எண்ணிக்கை குறைந்த அளவே வந்ததால் நமது இலக்கை குறிப்பிட்ட நாட்களில் முடிக்க முடியவில்லை.

நன்கொடையாளர் பட்டியலும், போட்டோக்களும் முழுமையாக கிடைக்க தாமதமானதால், இந்த சேலம் மாநாடு மலர் வெளிவருவதற்கு ஏற்பட்ட காலதாமதத்திற்கு மலர்குழு சார்பாக வருந்துகின்றோம். இருந்தாலும் இந்த தாமதத்தில் பல அரிய செய்திகளைத் தேடித் தொகுத்துள்ளோம். குறைகள் இருப்பின் பொறுத்தருள வேண்டுகின்றோம். நிறைகள் இருப்பின் தலைமைச் சங்கத்திற்கு வாழ்த்துகளை வழங்க வேண்டுகின்றோம்.

சேலம் மாநாடு மலர் சிறப்பாக வெளிவர உதவிய தெ.செ.ம.சங்கத்தின் தலைவர் திரு. K.P.K.செல்வராஜ் அவர்களுக்கு மலர்க்குழுவின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

**மலர்க்குழு**

# குலத் தலைவர்கள்



## தில்லையாடி வள்ளியம்மை

தோற்றம்: 22-02-1898 மறைவு: 22-02-1914

# குலத் தலைவர்கள்



**கொடிகாத்த திருப்பூர் குமரன்**

தோற்றம்: 04-10-1904 மறைவு: 11-01-1932

## குலத் தலைவர்கள்



### திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

தோற்றம்: 25-08-1906 மறைவு: 07-11-1993



## அருட்தந்தை வேதாத்ரி மகரிஷி

தோற்றம்: 14-08-1911 மறைவு: 28-03-2006

## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தோன்றிய நாள் முதல் இந்நாள் வரையிலான தலைவர்கள்.

1. முதலாவது தலைவர்
   அமரர். பி.வி. நடராஜ செங்குந்தர் பி.ஏ.,பி.எல்.,
   சென்னை இந்து சமய அறநிலையத் துறை ஆணையர்.
   29.04.1927 முதல் 19.01.1929 வரை

2. இரண்டாவது தலைவர்
   அமரர். ஆ.வே. முத்தையா செங்குந்தர் பி.ஏ.,பி.எல்.,
   புதுவை பிரெஞ்ச் அரசாங்கத்தின் இந்திய அமைச்சர்
   20.01.1929 முதல் 23.02.1936 வரை

3. மூன்றாவது தலைவர்
   அமரர். திருவாரூர் வள்ளல் தி.நா. சபாபதி செங்குந்தர்
   23.02.1936 முதல் 24.09.1953 வரை

4. நான்காவது தலைவர்
   அமரர். மஞ்சகொல்லை. இராம. சம்பந்தமூர்த்தி செங்குந்தர்
   25.09.1953 முதல் 1955 வரை

5. ஐந்தாவது தலைவர்
   அமரர். திருப்பத்தூர். கே.ஏ. சண்முக செங்குந்தர்
   1955 முதல் 25.12.1976 வரை

6. ஆறாவது தலைவர்
   அமரர். பத்மஸ்ரீ M.P. நாச்சிமுத்து செங்குந்தர், பி.ஏ.,பி.எல்.,
   சென்னிமலை
   26.12.1976 முதல் 26.06.1987 வரை

7. ஏழாவது தலைவர்
   அமரர். J. சுத்தானந்தன் செங்குந்தர், பி.எஸ்சி.,
   சென்னிமலை.
   27.06.1987 முதல் 25.06.2010 வரை

8. எட்டாவது தலைவர்
   திரு. கடலூர். பெண்ணாடம் ஆ. ராஜவேலு செங்குந்தர்
   6-02-2011 முதல் 23-02-2014 வரை

9. ஒன்பதாவது தலைவர்
   திரு. K.P.K. செல்வராஜ் செங்குந்தர், திருப்பூர்
   23-02-2014 முதல் ........



## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## முதல் தலைவர்



**திரு. பி.வி.நடராஜ முதலியார்,** பி.ஏ., பி.எல்.,

தண்டையார்பேட்டை, சென்னை.

24-4-1927 முதல் 19-1-1929 வரை

## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் முதல் தலைவர்

# திரு. பி.வி.நடராஜ முதலியார், பி.ஏ., பி.எல்.,

### சென்னை இந்து மத அறநிலையத்துறை ஆணையர்.

வண்ணக்களஞ்சியம் காஞ்சிபுரம் நாகலிங்க முதலியார் அவர்கள் மயிலாப்பூரில் அக்கவுண்டண்ட் ஆபீஸில் கண்காணிப்பாளராக இருந்த கா.வேலு முதலியார் உதவியுடன் 1912ஆம் ஆண்டு டிசம்பர் 30ல் காஞ்சிபுரம் கச்சபேசர் ஆலய மண்டபத்தில் செங்குந்தர்கள் கூட்டம் ஒன்றை கூட்டினார். அக்கூட்டத்தில் செங்குந்தர் சங்கம் ஒன்று நிறுவப்பட்டு, அதற்கு காஞ்சிபுரம் உயர்திரு. ம.த.சாமிநாத முதலியார் அவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காஞ்சி நாகலிங்க முதலியார் 1921ல் ஆரம்பித்து நடத்தி வந்த "செங்குந்தன்" எனும் வார இதழிலும், 1927ல் "செங்குந்தமித்திரன்" மாத இதழிலும் அவரும் திருவாளர்கள் தி.நா.சபாபதி முதலியாரும், எஸ்.பி.சிங்காரவேலு முதலியார் பி.ஏ.,எல்.டி., அவர்களும் எழுதிய கட்டுரைகளின் பயனாகவும், மேலும் அவர்களின் பெருமுயற்சியாலும், காஞ்சிபுரம், திருவாரூர், மஞ்சக்கொல்லை முதலிய ஊர்களைச் சேர்ந்த செங்குந்தர்கள் பலரின் சிறப்பு ஏற்பாட்டின் பேரிலும் 29.4.1927ல் வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு, சென்னை கோவிந்தப்ப நாயக்கன் வீதியில் உள்ள "சௌந்தர்ய மஹால்" என்னும் மண்டபத்தில் தமிழகமெங்கும் இருந்து வந்திருந்த சுமார் 200 பேர் கலந்துகொண்ட கூட்டத்தில் "தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்" தோன்றியது.

அக்கூட்டத்திற்கு மயிலாப்பூர் பிங்கர் பிரிண்ட் மேனேஜர் திரு. எஸ்.குழந்தைவேலு அவர்கள் தலைமை பூண்டார்கள். திரு. தி.நா.சபாபதி முதலியார் அவர்கள் கூட்டத்தின் நோக்கம் பற்றியும், கிளைச் சங்கங்கள் தொடங்குவது பற்றியும், பத்திரிக்கைகள், பிரசாரங்கள் என்னும் சாதனங்கள் மூலம் முன்னேறுவதற்கான வழிமுறைகளை இனிது எடுத்து விளக்கினார். திரு. ம.சண்முகசுந்தர முதலியார் அவர்கள் செங்குந்த மக்கள் முன்னேறுவதற்கான வழிகளை விளக்கி அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அதன் பின்னர் சங்க அலுவல் குழுவினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தில்லை சிதம்பர ரகசியம் என்னுமிடத்தில் தொங்கவிடப்பட்டிருக்கும் திரைச்சீலையை நெடு நாட்களாக நெய்து கொடுத்து வந்த குடும்பத்தின் குலமகன்தான் நம் குலச்சங்கத்தின் முதல் தலைவர் திரு. P.V.நடராஜ முதலியார் அவர்கள் ஆவார்.

திரு. P.V.நடராஜ முதலியார் அவர்கள் சென்னை பச்சையப்பன் கல்லூரி டிரஸ்ட் போர்டில் ஒரு உறுப்பினர். சென்னை கார்ப்பரேஷனில் ஒரு கவுன்சிலராகவும் இருந்துள்ளார். அதன் மூலம் சிறந்த கல்வித் தொண்டும், மக்கட் தொண்டும் செய்துள்ளார். கிண்டியில் உள்ள ஒரு என்ஜினியரிங் கல்லூரியில் செலக்ஷன் கமிட்டியில் ஒரு உறுப்பினர் ஆக இருந்துள்ளார். அந்தக்காலத்தில் இராயபுரம் மணியகார் சத்திரத்தின் டிரஸ்டியாக இருந்துள்ளார். ஜஸ்டிஸ் பார்ட்டியில் ஒரு முக்கிய உறுப்பினராக இருந்துள்ளார். கட்சி தேர்தல், மாநகராட்சி தேர்தல் வந்தால் அவர் வீடு ஒரு சத்திரம் போல் ஆகிவிடும். அவற்றிற்கான செலவுகள் எல்லாம் அவரது சொந்த செலவே, கல்விக்காக அவர் சிறந்த சேவை செய்துள்ளார். 29-4-1927 முதல் 19-1-1929 வரை தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவராக இருந்த போது அரசு அலுவலர்களை எல்லாம் சந்தித்து, பெரும்பணி ஆற்றியுள்ளார். இவர் 1938ல் இறைவனடி சேர்ந்தார்.



### தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் இரண்டாவது தலைவர்

## திரு. ஆ.வே.முத்தைய முதலியார், பி.ஏ., பி.எல்.,

ஆலப்பாக்கத்திலும் புதுவையிலும் பல்வேறு அறப்பணிகள் நிறுவிய ஆனந்த முதலியாரின் பேரனாக - வேலாயுத முதலியார் மகனாக, ஆ.வே.முத்தைய முதலியார் 7-10-1879ல் புதுவையில் பிறந்தார்.

இவர் சட்டக் கல்வி பயின்றார். பிரெஞ்ச், தமிழ், ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் சிறந்த புலமை பெற்று விளங்கினார். அன்னிபெசண்ட் அம்மையாரின் தியோசாபிகல் சொஸைட்டியின் தென்னகப் பிரிவின் செயலாளர்; அரவிந்தரின் நெருங்கியத் தொண்டர். ரமண மகரிஷியுடனும், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் அடிகளுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். தாம் எடுத்துச் சொல்லும் கருத்துக்களை தம் வாழ்க்கை நெறியாக செயல்படுத்திக் காட்டினார். உயிர்க் கொலையை விரும்பாதவர். தம் காலணிகளாக தோல் செருப்புக்களை அணியாமல் மரத்தால் ஆன மதியடிகளையே பயன்படுத்தினார்.

தமிழ்ப்பற்று மிக்கவர். பாவேந்தர் பாரதிதாசனுடன் மிகவும் நெருங்கிப் பழகினார். பாவேந்தரின் சமுதாயத் தொண்டிற்கு உறுதுணையாய் விளங்கினார். அவர் இவரைத் தமது அரசியல் ஆசானாகவே கருதினார். இவர் பிரெஞ்ச் அரசின் தலைமைச் செயலாளராக இருந்து மிகச்சிறப்பாகப் பணியாற்றி வந்தார். திரு.முத்தைய முதலியார் அவர்களின் அரசு நிர்வாகத் திறனையும், சமுதாயத் தொண்டினையும் பாராட்டும் முறையில், பிரெஞ்ச் அரசு அவருக்கு Chevalier De Lalegion DP Honour என்ற மிக உயர்ந்த விருதினை ('சர்' பட்டம் போன்ற விருது) வழங்கிற்று. இவர் தலைவர் பதவியேற்ற போது தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் முதலாவது மாநில மாநாடு 19, 20-01-1929ல் ஈரோட்டில் மிகச்சிறப்பாக நடைபெற்றது.

முன்னாள் தலைவர் திரு.ஜெ.எஸ். அவர்களின் பாட்டனார் திரு.மொட்டையப்ப முதலியார் அவர்கள், மாநாடு வெற்றி பெற மிகச் சிறப்பாகத் தொண்டாற்றினார். இம்மாநாட்டுக்கென்றே, சென்னையிலிருந்து ஈரோட்டுக்கு "செங்குந்தர் ஸ்பெஷல்" என்று ஒரு தனி ரெயிலே விடப்பட்டது குறிப்பிடத்தக்கது.

புதுவை ஆ.வே.முத்தைய முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் சங்க தலைமைப் பொறுப்பிலிருந்த காலத்தில் 16,17-5-1931-ல் காஞ்சிபுரத்தில் இரண்டாவது மாநாடும் 26-12-1931ல் மயிலாப்பூரில் மூன்றாவது மாநாடும், 12, 13-03-1933ல் திருவாரூரில் நான்காவது மாநாடும் 2, 3-2-1935ல் திருவத்திபுரத்தில் ஐந்தாவது மாநாடும் சிறப்பாக நடைபெற்றது

அவர் 1935ல் தாமே விரும்பி, அரசின் தலைமை செயலாளர் பதவியிலிருந்து விலகி, அரவிந்த் ஆசிரமவாசியாக மாறினார். 23-05-1936ல் தலைமை சங்கத் தலைவர் பதவியை துறந்தார். முத்தைய முதலியாரின் ஒரு புதல்வர் டாக்டர். இளைய புதல்வர் பிரெஞ்ச் பேராசிரியர். ஒரு மகள் தமிழ்நாடு மின்வாரிய பொறியாளர்.

பிரெஞ்ச் ஆட்சியினின்று புதுவை மாநிலம் விடுபட்டு இந்தியத் தாயகத்துடன் இணைந்தபின், நடக்க இருந்த பொதுத் தேர்தலில் மக்கள் முன்னணி வேட்பாளராக முத்தைய முதலியார் வேட்பு மனு கொடுத்தார். ஆனால் இடையில் 23-06-55ல் இயற்கை எய்தினார். அவருக்குப் பதிலாக அவருடைய சீடர் பாரதிதாசன் போட்டியிட்டு வெற்றிப்பெற்று, புதுவைச் சட்டப்பேரவை உறுப்பினரானார் என்பது குறிப்பிடத்தக்கது.





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## இரண்டாவது தலைவர்



**திரு. ஆ.வே.முத்தைய முதலியார்,**
பி.ஏ., பி,எல்.,

(புதுவை பிரெஞ்ச் அரசாங்கத்தின் இந்திய அமைச்சர்)

**20-1-1929 முதல் 23-2-1936 வரை**





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் நான்காவது தலைவர்

## சைவ சமயக்காவலர், மஞ்சக்கொல்லை

# திரு. இராம.சம்பந்தமூர்த்தி முதலியார்

நாகப்பட்டினம் அருகில் மஞ்சக்கொல்லை எனும் பேரூரில் திரு.இராமசாமி முதலியார் - திருமதி.தைலம்மையார் ஆகியோருக்கு 19-11-1909 அன்று மூத்த புதல்வராகத் தோன்றினார் திருவாளர் சம்பந்தமூர்த்தி முதலியார் அவர்கள்.

தொடக்கக் கல்வியை மஞ்சக்கொல்லையில் பயின்றார், தொடர்ந்து நாகைப்பட்டினம் தேசீய உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து மெட்ரிகுலேஷன் தேர்வு பெற்றார். அப்போது மஞ்சக்கொல்லையில் வாழ்ந்த பெரும்புலவர் சாமிநாதப்பண்டிதர் அவர்களிடம் இலக்கிய இலக்கணப் பாடல்களை கேட்டு அறிந்தார்; தேர்ந்தார். அதோடு ஆங்கிலம் கற்றார்.

நமது மதராஸ் பாளையகாட் கம்பெனி. பெரும் புகழும் பெருமையும் கொண்டது. அதன் வளர்ச்சிக்குப் பாடுபட்ட உத்தம சான்றோர் பலர். அவர்களுள் சம்பந்தமூர்த்தி அவர்களும் ஒருவர். திருவாரூர் வள்ளல் தி.நா.சபாபதி முதலியார், முருகைய முதலியார், அமிர்தலிங்க முதலியார், முத்துக்குமாரசாமி முதலியார் போன்றவர்களை வழிகாட்டியாகக் கொண்டு செயல்பட்டார். திரு.அண்ணாமலை முதலியார் அவர்களை தோழமையாகக் கொண்டார்.

திருவாரூர் வள்ளல் தி.நா.சபாபதி முதலியாரும் சான்றோர்களாலும் நிறுவப் பெற்ற தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் முன்னேற்றத்தில் பல்வேறு நிலைகளில் பங்கு கொண்டு உழைத்தார்.

செங்குந்தமித்திரன் அச்சகத்தின் வளர்ச்சிக்கும் உறுதுணையாக இருந்தார். தலைமைச் சங்கச் செயலாளராக இருந்து பல்லாண்டுகளாகப் பணியாற்றியுள்ளார். திருவாரூரில் நடைபெற்ற மாநில செங்குந்தர் மாநாட்டின் போது வள்ளல் சபாபதி முதலியாருக்கு உடன் இருந்து பணியாற்றினார். குறிஞ்சிப் பாடியில் நடைபெற்ற மாநில மாநாட்டுக்கு இவரும், திருவாரூர் வள்ளல் மகன் தட்சிணாமூர்த்தி முதலியாரும் முன்கூட்டியே சென்று அம்மாநாட்டின் சிறப்பான முன்னேற்றத்திற்கு அயராது உழைத்தார்.

25.9.1953ல் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்கும்போது, அதுவரை அப்பொறுப்பில் இருந்து வந்த வள்ளல் சபாபதி முதலியார் அவர்கள் சம்பந்தமூர்த்தி அவர்களின் அரிய செயல்களைப் போற்றி "நற்செயல்கள் பலவற்றை இனிதே ஆற்றிட உம்மிடமே எல்லாவகை ஆற்றலும் அமைந்துள்ளது. நான் செய்த செயல்களை தொடர்ந்து செய்து நம் செங்குந்த சமூகத்தை உயர்த்துக!" என்று பாராட்டி வாழ்த்துக்களை வழங்கி, மாநிலத்தலைமைப் பொறுப்பினை ஒப்படைத்தார்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்திற்கு இவருக்கு அடுத்த தலைவராகக் குடியாத்தம் திரு.கா.அ.சண்முக முதலியார் அவர்கள் தலைமைப் பொறுப்பினை ஏற்கும்போது, திரு.சம்பந்தமூர்த்தி அவர்களைப் பார்த்து, "நீங்கள் துணைத் தலைவராக இருந்தால், நான் தலைமைப் பொறுப்பினை ஏற்பேன்." என்று கூறி அவருடைய சம்மதத்தின் பேரில் மாநில சங்கத் தலைவராகப் பொறுப்பேற்றார், இது அவர் பேரில் சான்றோர்கள் வைத்துள்ள பாசம், நட்பு எந்த அளவுக்கு இருந்தது என்பது தெளிவாகிறது!

சிவபூசைச்செல்வர், நாநிலம் போற்றும் நல்லவர்; தமிழ்ச் சைவப் பெருந்தகையாளர்; நல்லிதயம் பெற்றவர்; எல்லோரும் போற்ற வாழ்ந்த சம்பந்தமூர்த்தி முதலியார் அவர்கள் 27-7-1987 அன்று இறைவன் திருவடிகளை அடைந்தார்.





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## நான்காவது தலைவர்



சைவ சமயக்காவலர், மஞ்சக்கொல்லை

### திரு. இராம.சம்பந்தமூர்த்தி முதலியார்

25-9-1953 முதல் 1955 வரை





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## ஆறாவது தலைவர்



கைத்தறி காவலர், பத்மஸ்ரீ

### திரு. எம்.பி.நாச்சிமுத்து முதலியார்

பி.ஏ., பி.எல்.,

26-12-1976 முதல் 26-6-1987 வரை





### தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் ஆறாவது தலைவர்
### கைத்தறி காவலர், பத்மஸ்ரீ
## திரு. எம்.பி.நாச்சிமுத்து முதலியார் பி.ஏ., பி.எல்.,

ஈரோடு மாவட்டம் சிரகிரி எனச்சிறப்புடன் வழங்கப்படும் சென்னிமலையில் 28-4-1913ல் மு.பழனியப்ப முதலியார் அவர்களுக்கும் பாப்பாயம்மாள் (எ) சடையம்மாள் அவர்களுக்கும் ஒரே புதல்வராகத் தோன்றினார் எம்.பி.என். என்று அழைக்கப்படும் பத்மஸ்ரீ எம்.பி.நாச்சிமுத்து முதலியார் அவர்கள்.

நடுநிலைப்பள்ளி வரை சென்னிமலையில் கல்வி பயின்ற இவர், ஒரு வருடம் கோவை சர்வஜன உயர்நிலைப் பள்ளியிலும், பள்ளி இறுதி வகுப்பை திருப்பூரிலும் இண்டர்மீடியர் வகுப்பை கோவை அரசினர் கல்லூரியிலும், பி.ஏ. வகுப்பினை திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரியில் சட்டப்படிப்பை சென்னையிலும் படித்து முடித்து, 1938ல் செங்குந்த சமூகத்தின் முதல் சட்ட பட்டதாரியானார்.

சில ஆண்டுகளே வழக்கறிஞராகத் தொழில் நடத்தினார், கல்வியாளர்களிடமும் வணிகப் பெருமக்களிடமும் தொடர்புகொண்ட இவர் சிறந்த குணநலன்களுடனும் உயர் பண்பாடுகளுடனும் விரும்பி பொது வாழ்வில் ஈடுபட்டார்.

நலிந்த கைத்தறி நெசவாளர்கள் நல்வாழ்வு பெற்றிட 07-04-1941ல் எம்.பி.நாச்சிமுத்து முதலியார் அவர்கள் சென்னிமலை கூட்டுறவு நெசவாளர் சங்கத்தைத் தொடங்கி உறுப்பினர்களின் வேண்டுகோளின்பேரில், தலைமைப் பொறுப்பையும் ஏற்றார். வாழ்நாள் முழுவதும் இச்சங்கத் தலைவராகவே இருந்தார். இச்சங்கத்தில் புதிய ரகங்களை உற்பத்தி செய்யச் செய்து நெசவாளர் வாழ்வு வளம் பெறச் செய்தார். இச்சங்கத்திற்கு "சென்டெக்ஸ்" என்ற வணிகக் குறியீட்டை உருவாக்கி புகழ் பெறச் செய்தார்.

நமது செங்குந்த சமுதாய இயக்கத்தில் பற்று கொண்டு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தில் 26-05-1947 முதல் 13-02-1952 வரை பொதுச் செயலாளராகவும் 26-12-1976 முதல் 27-06-1987 வரை தலைவராகவும் இருந்தார், வள்ளல் சபாபதி செங்குந்தர் நினைவாகக் கட்டத் தொடங்கி முற்றுப் பெறாமல் இருந்த பள்ளிக் கட்டடத்தை பெருமுயற்சி எடுத்து மீண்டும் கட்டித் தொடங்கி வைத்தார்.

முன்பு ஆந்திரா, கேரளா, தமிழ்நாடு மூன்றும் சேர்ந்திருந்த சென்னை மாநில நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் துணைத் தலைவராகவும், பின்னர் தனித்து இயங்கி வரும் தமிழ்நாடு நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் (கோ-ஆப் டெக்ஸ்) தலைவராகவும் பொறுப்பேற்று தமிழக நெசவாளர் பெரிதும் நலம்பெற அரும்பணி ஆற்றினார். அகில இந்திய கைத்தறி நிறுவனத்தின் துணைத் தலைவராகவும் இருந்து கைத்தறித் தொழிலுக்குப் பல்வேறு வகையான உதவிகளை மத்திய அரசிடமிருந்து பெறுவதற்கு உறுதுணை புரிந்தார்.

இவரைப் பல ஊர்களிலும் வரவேற்று "கைத்தறித் தந்தை" என்றும் "கைத்தறிக் காவலர்" என்றும் போற்றிப் பாராட்டினார்கள். இவர் கூட்டுறவுத் துறைக்கும் கைத்தறி நெசவாளர்களுக்கும் ஆற்றிய தொண்டினைப் பாராட்டி இவருக்கு மத்திய அரசு "பத்மஸ்ரீ" பட்டம் வழங்கியது.

சென்னிமலை செங்குந்தர் உயர்நிலைப்பள்ளியின் தாளாளராக 17 ஆண்டுகளும், கலைமகள் கல்வி நிலையத்தின் பொருளாளராகவும், ஈரோடு செங்குந்தர் மேல்நிலைப்பள்ளித் துணைத் தலைவராகவும், ஈரோடு கலைக் கல்லூரி உறுப்பினராகவும் இருந்தபோது இவர் ஆற்றியப் பணிகள் குறிப்பிடத் தகுந்தது.

எம்.பி.என். அவர்கள் 27-06-1987ல் விண்ணுலகை எய்தினார். இவரது காலத்தில் 25,26-12-1976ல் ஈரோட்டில் 13வது மாநாடும், 4,5-2-1984ல் காஞ்சிபுரத்தில் 14வது மாநாடும் சிறப்பாக நடைபெற்றன.





### தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் ஏழாவது தலைவர்

### நெசவாளர் நேசன், உத்யோக் ரத்னா

# திரு. ஜெ.சுத்தானந்தன் செங்குந்தர்

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுரையும்**
**தெய்வத்துள் வைக்கப்படும்."**

ஈரோட்டில் ஜெகநாத முதலியாருக்கும், முத்துலட்சுமி அம்மையாருக்கும் 1944ம் ஆண்டு செப்டம்பர் 21ம் நாள் பிறந்தார். இவர் வாழ்வில் பெரும்பகுதி சமுதாய பணிகளே பின்னிபிணைந்துள்ளன.

சிறுவயதிலேயே தாய் தந்தையரை இழந்ததால் தன்னுடைய 3 தம்பிகளையும் 1 தங்கையையும் பாதுகாக்கும் சூழலுக்கு தள்ளப்பட்டார். ஆதலால் தன் குடும்ப சுமையை ஏற்க 1969 ம் ஆண்டு தன் அத்தை மகள் வசந்தாவை திருமணம் செய்து கொண்டார்.

1975 ம் ஆண்டு முதல் 1996 ம் ஆண்டு வரை 21 ஆண்டுகள் Erotex தலைவராக சிறப்பாக செயல்பட்டார். அதன்பிறகு முழுமூச்சாக பொது வாழ்வில் ஈடுபட்டார் என்றே சொல்லலாம். Erotex க்கு தமிழ்நாடு முழுவதும் 10 கிளைகள் ஆந்திராவில் 2 கிளைகள் திறந்தார். இதன் மூலம் உலகம் முழுவதும் Erotex தயாரிப்புகள் பிரபலமானது. சிங்கப்பூர், மலேசியா ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா, தாய்லாந்து மற்றும் இலங்கை ஆசிய நாடுகளில் கைத்தறி துணி ஏற்றுமதி மற்றும் தொழிற்கல்வி தொடர்பான பயணம் மேற்கொண்டார்.

"உத்யோக ரத்னா விருது" கைத்தறி நெசவாளர்களுக்காக இவர் ஆற்றிய அரும் பணியைப் பாராட்டி 1985 ல் "புதுடெல்லி இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் எக்னாமிக்ஸ் ஸ்டடீஸ்" என்ற நிறுவனத்தின் சார்பில் அன்றைய ஜனாதிபதி கியானி ஜெயில் சிங் அவர்கள் வழங்கினார். நெசவாளர்களது கோரிக்கைகளை டில்லி வரை எடுத்துச் சென்றார். அவர் மறையும் வரை நெசவாளர் நலனுக்காக பாடுபட்டார்.

தறி குழியில் இருந்து வெளியே வாருங்கள். நம் இன மக்களுக்கு கல்வியை கொடுங்கள் என பட்டி தொட்டியெல்லாம் சென்று முழங்கினார்.

புது டில்லியை தலைமையிடமாகக் கொண்டு செயல்படும் அகில இந்திய கைத்தறி விற்பனை கூட்டுறவு சங்கத்தில் 1999 முதல் 2002 வரை இயக்குநர் பொறுப்பு. 1997 முதல் 2001 மற்றும் 2005 முதல் 2006 வரை தமிழக அரசால் அமைக்கப் பெற்ற கைத்தறி ஆலோசனைக்குழு உறுப்பினராக பொறுப்பு வகித்தவர்.

பத்ம ஸ்ரீ M.P. நாச்சிமுத்து முதலியார் மறைவுக்கு பிறகு 1987ல் செங்குந்தர் மகாஜன சங்க தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். அதுமுதல் அவர் மறையும் வரை 23 ஆண்டுகளாக தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவராகத் திறம்பட செயல்பட்டார்.

அவர் தலைவராக இருந்தபோது செங்குந்தர் சமுதாயத்தை உயர்த்த அரும்பாடுபட்டார். தமிழ்நாடு மட்டுமல்லாமல் கேரளா, ஆந்திரா, கர்நாடகா, ஸ்ரீலங்கா, அந்தமான் போன்ற இடங்களில் செங்குந்தர் சங்கத்தை நிறுவினார். அப்போது இருந்த 60 இலட்சம் செங்குந்தர்களை உயர்த்துவதே என் லட்சியம் எனக் கருதி அதற்காக அரும்பாடுபட்டார். சென்னை, கும்பகோணம், குடியாத்தம், மதுரை போன்ற ஊர்களில் 4 மகாநாடு நடத்தி நம் செங்குந்தர்களின் வலிமையைக் காட்டினார்.

பட்டி தொட்டிக்கெல்லாம் சென்று குழந்தைகளை படிக்க வையுங்கள் என்று கூறியதோடு மட்டுமல்லாமல் ஈரோட்டிற்கு அருகில் 2 பொறியியல் கல்லூரிகளை நிறுவினார். 8 பள்ளிகளில் நிர்வாகத்தை ஏற்றார். இதன் மூலம் பல்லாயிரக்கணக்கான நம் மாணவர்கள் படித்து வெளிவந்தார்கள். இன்று நல்ல நிலையில் இருக்கிறார்கள். 1975 முதல் நெசவாளர் நலனோடு நம் செங்குந்தர் சமுதாயத்தையும் தன் கையில் எடுத்துக் கொண்டார்.

இப்படிப்பட்ட மாமனிதனின் பயணம் 2010-ம் ஆண்டு ஜூன் 25-ம் தேதி மதுரையில் இருந்து ஈரோடு காரில் வரும் போது முடிவுற்றது.





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் எட்டாவது தலைவர்

# பெண்ணாடம் திரு. ஆ. இராஜவேலு செங்குந்தர்

திருமிகு.பெண்ணாடம் ஆ.ராஜவேலு அவர்கள் சிறப்புமிக்க செங்குந்தர் குலத்தில், கடலூர் மாவட்ட பெண்ணாடம் ஊரில், 08-07-1943 அன்று திரு.ரா.ஆறுமுகம் செங்குந்தர், விருத்தாம்பாள் அவர்களுக்கு இரண்டாவது மகனாகத் தோன்றியவர்.

தொழிற்கல்வி பயின்றார், மாணவத் தலைவராகத் திகழ்ந்தார், மேலும், தொழிற்கல்வி நிறைவுக்குப் பின்பு, பெண்ணாடம் அருணா சர்க்கரை ஆலையில் சேர்ந்து, 39 ஆண்டுகாலம் பொதுப் பணிமனை கண்காணிப்பாளராக பணியாற்றினார், ஆலையின் தொழிலாளர் முன்னேற்றச் சங்கத்தின் பொதுச்செயலாளராக 15 ஆண்டு காலம் சிறப்பாக தொண்டாற்றினார், அனைத்து தொழிற்சங்கமும் ஏற்றுக்கொள்ளும் தலைவராகத் திகழ்ந்தார்,

பத்மஸ்ரீ M.P.நாச்சிமுத்து முதலியார் அவர்கள் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவராக இருந்த போது, 1977-ஆம் ஆண்டில், சங்கத்தில் இணைந்தார். 1980-ல் சங்கத்தின் இளைஞரணி அமைப்பாளராக வளர்ச்சி கண்டார். 1981ம் ஆண்டில் சேலம் அம்மாபேட்டையில் நடைபெற்ற தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் பொன்விழா மகாநாட்டில், பெரும் பணியாற்றினார்,

1984ல் காஞ்சிபுரத்தில் நடந்த மகாநாட்டிற்காகவும், சிறப்பாக தொண்டாற்றினார். சென்னை சேத்துப்பட்டு, வள்ளல் சபாபதி மெட்ரிகுலேசன் பள்ளியின் இடம் தக்கவைக்க கடுமையாக போராடினார், பள்ளிக் கட்டிடம் தொடங்க உறுதுணையாக இருந்து, நமது சங்கத்தில் முதன் முதலாக பெரும் நிதியை வசூல் செய்து கொடுத்தார்.

தலைவர் திரு.M.P.நாச்சிமுத்து முதலியார் அவர்கள் இயற்கை அடைந்த பிறகு, திரு.J.சுத்தானந்தன் அவர்களை, பல மாவட்ட நிர்வாகிகளின் ஒத்துழைப்புடன், தலைவராக்கிட பெரிதும் பாடுபட்டார்.

1988ல் நமது சங்கத்தின் துணைப் பொதுச்செயலாளராக தேர்வு செய்யப்பட்டார். 1990ல் சென்னையில் நடைபெற்ற 15ம் மகாநாட்டில் பெரும் பணியாற்றினார். 1991-ல் தஞ்சை மாவட்டம் கும்பகோணத்தில் நடைபெற்ற 16வது மகாநாட்டிற்கு பெரும் நிதி திரட்டி கொடுத்தது மட்டுமல்லாமல் இளைஞரணி மகாநாட்டிற்கு தலைமை ஏற்று மகாநாடு சிறப்பாக நடத்தினார். தலைமைச் சங்கத்தின் பெரும் நம்பிக்கைக்குரிய பொறுப்பாளராக இருந்து 1993ல் குடியாத்தத்தில் நடைபெற்ற 17வது மாநாட்டிற்கும், 1995ல் மதுரை தமுக்கம் மைதானத்தில் நடைபெற்ற 18வது மாநாட்டிற்கும் சிறப்பாக பணியாற்றினார்.

செங்குந்தமித்திரன் இதழ் நிலைக்கவும், வளர்ச்சி காணவும், எண்ணற்ற சந்தாதாரர்களை கடலூர் மாவட்ட சங்கத்துடன் இணைந்து ரூபாய் நான்கு இலட்சத்திற்குமேல் நிதி வசூல் செய்து தந்தார், சென்னையில் செங்குந்தர் மாளிகை கட்டுவதற்காக, கடலூர் மாவட்டச் சங்க பொறுப்பாளர்களும் இணைந்து ரூபாய் ஆறு இலட்சம் ரூபாய்களை வசூலித்து தந்துள்ளார்.

பத்மஸ்ரீ M.P.நாச்சிமுத்து முதலியார் அவர்களின் நல்லாசியுடன் சங்கத்தில் இணைந்த இவர், நம் சங்கத்திற்கும், மாநாடுகளுக்கும், உதவியதல்லாமல், நம் மாணவர்களை தொழில்நுட்பக் கல்லூரிகளிலும், பொறியியல் கல்லூரிகளிலும் இணைவதற்கு பெரிதும் உதவியுள்ளார், தலைவர், திரு.J.சுத்தானந்தன் அவர்கட்கு உண்மையாக தொண்டாற்றினார்.

06-02-2011 அன்று தெ.செ.ம.சங்கத்தின் தலைவராகப் பொறுப்பேற்று 23-02-2014 வரை சிறப்பாக நமது சங்கத்தை நடத்தினார்.





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## ஏழாவது தலைவர்



நெசவாளர் நேசன், உத்யோக் ரத்னா

# திரு. ஜெ.சுத்தானந்தன் செங்குந்தர்

27-6-1987 முதல் 25-6-2010 வரை





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## எட்டாவது தலைவர்



பெண்ணாடம்

**திரு. ஆ.இராஜவேலு செங்குந்தர்**

06-02-2011 முதல் 23-02-2014 வரை

## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் ஒன்பதாவது தலைவர்

## கைத்தறி கதிரவன்

# திரு. K.P.K.செல்வராஜ் செங்குந்தர்

சிறப்புமிக்க செங்குந்தர் குலத்தில் கருவலூரார் குலவம்சத்தில் திரு.K.P.கிருஷ்ணன் - K.கமலம்மாள் தம்பதியர்களின் முதல் மகனாக 09-10-1957ல் திரு.K.P.K.செல்வராஜ் அவர்கள் பிறந்தார். இளம்வயதிலிருந்தே, தந்தையுடன் தொழிலில் ஈடுபட்டும், ஆர்வமுடன் பள்ளி மற்றும் கல்லூரி படிப்பை முடித்தார். நூல் வியாபாரத்தில் முன்னோடியாகத் திகழ்ந்தார். "லைக்ரா" என்னும் செயற்கை இழைநூல் இறக்குமதி செய்தும் தொழில்புரிந்து வருகின்றார்.

திருப்பூரைச் சார்ந்த திரு.A.S.கந்தசாமி - K.தனலட்சுமி தம்பதியரின் திருமகளான வெண்தாமரை ராணி அவர்களை 01-07-1984ல் திருமணம் செய்து கொண்டார். தம்பதியருக்கு, திரு.S.பிரனேஷ், M.B.A., (U.K.), Dr.S.சண்முகேஷ், M.B.B.S., ஆகிய இருமக்கள் உள்ளனர்.

ஸ்ரீ பழனி ஆண்டவர் குழுமம் என்ற குடும்ப பெயரோட்டத்துடன், கூட்டு குடும்பமாக வாழ்ந்து, ஜவுளி, நூல், ஏற்றுமதி, இறக்குமதி, மொபைல் போன் வணிகம் செய்து, வணிக வளாகம் நிறுவி, ஊரில், தொழிலில் முன்னோடியாக விளங்கி வாழ்ந்து வருகிறார். தொழில் நிமித்தமாக உலகில் பல நாடுகள் சென்று வருகிறார்.

நற்குணங்களின், நற்பண்புகளின் மொத்த உருவகமாகத் திகழ்பவர். வேகமும், விவேகமும் மிக்கவர். திருப்பூரில் K.P.K. நேஷனல் மெட்ரிகுலேஷன் பள்ளியை தாளாளராக இருந்து திறம்பட நடத்தி வருகிறார். திருப்பூர் ஸ்ரீ காமாட்சி அம்மன் மெட்ரிக் பள்ளியை நமது சமுதாயத்திற்காக சிறந்த முறையில் வளர்ச்சி காண வைத்தவர்.

திருப்பூரில் "முத்தமிழ்ச்சங்கம்" நிறுவி, இயல், இசை, ஆன்மீகப் பணிகள் செய்துவருகிறார். வட அமெரிக்கத் தமிழ்ச் சங்கப் பேரவையின் ஒருங்கிணைப்பாளராக திகழ்கிறார். பிரதி ஆண்டும் U.S.A. சென்று, முன் வரிசையாளராக கலந்துகொண்டு வருகின்றார். நமது முதலியார் இன மக்களுக்கு உதவும் வகையில் கணினி வழி "முதலியார் மேட்ரி.காம்" என்ற இணைய தளத்தை அமைத்து, வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருக்கிறார்.

சென்னையில் தலைமைச் சங்கம் இயங்கிவரும் செங்குந்தர் மாளிகை புதிதாகக் கட்டுவதற்காக முதலில் ரூ. ஒரு லட்சம் நன்கொடையளித்து கட்டடப் பணி தொடங்க வழிவகுத்தவர். அதேபோல, J.S. அவர்களின் கல்வி அறக்கட்டளைக்காக ரூ. ஒரு லட்சம் முதலில் கொடுத்து அறக்கட்டளை நிறுவச் செய்தவர். சமுதாயப் பொருளாதாரத் தொண்டு மன்றத்தின் ஆரம்ப கால உறுப்பினராக இணைந்து இன்று வள்ளலாக திகழ்கிறார். தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு 2007ஆம் ஆண்டில் கோவை மாவட்ட மாநாட்டை திறம்பட நடத்தினார். நெசவாளர் அணி தலைவராக சிறப்பாக செயல்பட்டார்.

செங்குந்தர் குலத் திலகமாக விளங்கிய தலைவர், நெசவாளர் நேசன் திருமிகு.J.சுத்தானந்தன் அவர்களின் அடியொற்றி கடந்த 23-02-2014 அன்று நடைபெற்ற, தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் நிர்வாகிகள் தேர்தலில் பெருவாரியான வாக்குகள் பெற்று, தென்னிந்திய மகாஜன சங்கத்தின் "தலைவராக" தேர்வு செய்யப் பட்டார். செங்குந்த சமுதாய மக்களுக்கு பொது நலத் தொண்டாற்றிட தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டுள்ளார்.

சங்க உறுப்பினர் சேர்த்தல், அடையாள அட்டை வழங்குதல், சங்க சொத்துக்களைப் பராமரித்தல், சமுதாய மக்களின் சொத்துக்களை உரிமைப்படுத்துதல், பாதுகாத்தல், உலகளவில் உள்ள ஒரு கோடி செங்குந்த சொந்தங்களை ஒன்றிணைத்தல் போன்ற திட்டங்களை வகுத்துள்ளார். மாவட்ட, நகர கிளைச் சங்கங்களின் வரவேற்பினை ஏற்று அனைத்து விழாக்களுக்கும், குடும்ப நிகழ்ச்சிகளுக்கும் சென்று வருகின்றார்.

சுமார் 20 ஆண்டு காலத்திற்கு பிறகு, 31-01-2016 அன்று சேலத்தில் இலட்சக்கணக்கான செங்குந்தர்கள் கலந்து கொண்ட பேரணியும், மாநாடும், இவரின் உழைப்பிலும், அனைவரின் ஒத்துழைப்பாலும், தமிழகம் மற்றும் இந்தியத் திருநாடு போற்றும் வகையில் மிகச் சிறப்பாக நடந்தது. தலைமைச் சங்க வரலாற்றில் தனக்கென ஓரிடத்தை நிலையாகப் பெற்றுள்ளார்.





தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
ஒன்பதாவது தலைவர்



கைத்தறி கதிரவன்

## திரு. K.P.K.செல்வராஜ் செங்குந்தர்

23-02-2014 முதல்...



# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## தலைமைச் சங்க நிர்வாகிகள் (2014-17)

## புரவலர்

திரு. M.S.ரெங்கையா





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## தலைமைச் சங்க நிர்வாகிகள் (2014-17)
## புரவலர்



மாண்புமிகு நீதியரசர்
**திரு. S.ஜெகதீசன்**



# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## தலைமைச் சங்க நிர்வாகிகள் (2014-17)

## புரவலர்

**திரு. K.பரஞ்ஜோதி**





## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## தலைமைச் சங்க நிர்வாகிகள் (2014-17)

### தலைவர்



கைத்தறிக் கதிரவன்

**திரு.K.P.K.செல்வராஜ்**

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## தலைமைச் சங்க நிர்வாகிகள் (2014-17)

### பொதுச் செயலாளர்



திரு.S.திருமாவளவன்

### பொருளாளர்



திரு.தாரை அ.குமரவேலு

### துணைப் பொதுச் செயலாளர்



திரு.R.P.குமரகுருபரன்

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
## தலைமைச் சங்க நிர்வாகிகள் (2014-17)

### துணைத் தலைவர்கள்



திரு. V.சிவா



திரு. மெட்டல் M.மணி



திரு. வெ.தண்டபாணி



திரு. M.K.S.உத்தண்டி

## திருவண்ணாமலை மாவட்டம்


V.சிவா
தலைவர்


A.D.R.சந்திரராஜன்
செயலாளர்


P.T.சம்பந்தம்
பொருளாளர்


T.K.பொன்னுசாமி


சீனி.கார்த்திகேயன்


G.அண்ணாமலை

செயற்குழு உறுப்பினர்கள்

## புதுச்சேரி மாநிலம்


ந.கோவிந்தசாமி
தலைவர்


வி.பி.சிவக்கொழுந்து
செயலாளர்


க.தனகோடி
பொருளாளர்


ப.இராஜாக்கண்ணு


ஆ.[illegible]


[illegible] இராஜேந்திரன்

செயற்குழு உறுப்பினர்கள்

## திருவள்ளூர் மாவட்டம்


N.K.நரசிம்மன்
தலைவர்


G.N.சுந்தரவேல்
செயலாளர்


M.A.முருகன்
பொருளாளர்


P.N.மாணிக்கம்


C.உமாபதி


N.D.பொன்னுசாமி

செயற்குழு உறுப்பினர்கள்

## ஆந்திர மாநிலம்


P.G.செல்வராஜ்
தலைவர்


J.K.அண்ணாமலை
செயலாளர்


K.C.நீலமேகம்
பொருளாளர்


V.S.பானுமூர்த்தி


S.G.பாண்டுரங்கன்


M.S.கருணாகரன்

செயற்குழு உறுப்பினர்கள்

## அந்தமான்


K.கணேசன்
தலைவர்


P.J.சேகர்
செயலாளர்


B.தினேஷ்குமார்
பொருளாளர்


P.S.ஆறுமுகம்


A ONE சங்கர்

செயற்குழு உறுப்பினர்கள்

## கடலூர் மாவட்டம்

|  |  |  |  |  |  |
| --- | --- | --- | --- | --- | --- |
| வை.ஆனந்தன் | P.கோவிந்தசாமி | P.K.இரத்தினசாபதி | ஆ.ராஜவேலு | T.ராஜாமணி | P.T.இராஜன் |
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் | செயற்குழு உறுப்பினர்கள் | | |

## விழுப்புரம் மாவட்டம்

|  |  |  |  |  |  |
| --- | --- | --- | --- | --- | --- |
| R.P.குமரகுருபரன் | V.பழனி | K.கருணாநிதி | C.மாணிக்கம் | N.அரங்கநாதன் | K.வேலு |
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் | செயற்குழு உறுப்பினர்கள் | | |

## திருச்சி மாவட்டம்

|  |  |  |  |  |  |
| --- | --- | --- | --- | --- | --- |
| மெட்டல் M.மணி | A.சுப்ரமணியன் | V.செல்வம் | M.பிச்சுமணி | M.சுந்தரராஜ் | S.P.சித்தன் |
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் | செயற்குழு உறுப்பினர்கள் | | |

## அரியலூர் மாவட்டம்

|  |  |  |  |  |  |
| --- | --- | --- | --- | --- | --- |
| V.R.பழனியப்பன் | து.ப.புனிதம் | S.கார்த்திகேயன் | S.சுப்ரமணியன் | S.K.செல்வம் | A.ஞானசேகரன் |
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் | செயற்குழு உறுப்பினர்கள் | | |

## பெரம்பலூர் மாவட்டம்

|  |  |  |  |  |  |
| --- | --- | --- | --- | --- | --- |
| ச.மீனாட்சிசுந்தரம் | பெ.பச்சமுத்து | N.சரவணன் | இரா.பழனியப்பன் | ஆ.இராஜேந்திரன் | N.சீனிவாசன் |
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் | செயற்குழு உறுப்பினர்கள் | | |

## கன்னியாகுமரி மாவட்டம்








நா.செந்தூரான் — தலைவர்
ப.இராசவேல் — செயலாளர்
M.முருகன் — பொருளாளர்
S.பாலமுரளிகிருஷ்ணன், M.ராமசுப்பு, க.ஜீவானந்தம் — செயற்குழு உறுப்பினர்கள்

## கேரள மாநிலம்








C.கார்த்திகேயன் — தலைவர்
M.ராமன் — செயலாளர்
S.சுந்தரராஜன் — பொருளாளர்
N.நாகப்பன், V.சுந்தரமோகன், C.நடராஜன் — செயற்குழு உறுப்பினர்கள்

## விருதுநகர் மாவட்டம்







ச.அண்ணாதுரை — செயலாளர்
பொ.சக்திமோகன் — பொருளாளர்
G.தில்லைகோவிந்தன், ஆ.கோட்டீஸ்வரன், அ.பாலு(எ)சுப்பிரமணியம் — செயற்குழு உறுப்பினர்கள்

## தூத்துக்குடி மாவட்டம்








ச.சங்கரநாராயணன் — தலைவர்
மா.இராமலிங்கம் — செயலாளர்
R.சுப்பிரமணியன் — பொருளாளர்
S.தங்கமுத்துசாமி (எ) K.S.செல்வராஜ், சி.கா.முத்தையா, S.பால்ராஜ் — செயற்குழு உறுப்பினர்கள்

## சேலம் மாவட்டம்








U.V.சடையப்பன் — தலைவர்
K.ராமப்பன் — செயலாளர்
கோல்டன் P.தங்கவேல் — பொருளாளர்
தாரை ஆதாரவேலு, K.P.மகாலிங்கம், M.செந்தில்நாதன் — செயற்குழு உறுப்பினர்கள்

## நாமக்கல் மாவட்டம்


M.மாதேஸ் – தலைவர்


A.கேசவன் – செயலாளர்


B.மதிவாணன் – பொருளாளர்


K.ராஜாராம்


A.சண்முகசுந்தரம்


S.கார்த்திகேயன்

செயற்குழு உறுப்பினர்கள்

## தர்மபுரி மாவட்டம்


M.K.S.உத்தண்டி – தலைவர்


P.சச்சிதானந்தம் – செயலாளர்


V.M.கோபால் – பொருளாளர்


N.செல்வராஜ்


N.சண்முகம்


P.தேவராசன்

செயற்குழு உறுப்பினர்கள்

## கிருஷ்ணகிரி மாவட்டம்


T.S.திருநாதன் – தலைவர்


K.S.T.கோவிந்தராஜ் – செயலாளர்


T.ரவிசங்கர் – பொருளாளர்


R.பாபு சிவக்குமார்


M.S.ஜெகநாதன்


A.கணேசன்

செயற்குழு உறுப்பினர்கள்

## ஈரோடு மாவட்டம்


சி.மா.இராமலிங்கம் – தலைவா


S.A.சிவசாமி – செயலாளர்


P.துரைசாமி – பொருளாளர்


K.லோகநாதன்


[illegible]


S.V.பழனியப்பன்

செயற்குழு உறுப்பினர்கள்

## கோவை மாவட்டம்


N.R.பாலகிருஷ்ணன் – தலைவர்


A.S.வெங்கடாசலம் – செயலாளர்


A.மணி – பொருளாளர்


K.R.கந்தகுமார்


A.சந்திரமோகன்


K.தயாளன்

செயற்குழு உறுப்பினர்கள்

## மாநில சொத்துப் பாதுகாப்புக் குழு


M.உமாபதி
தலைவர்
சென்னை


P.T.இராஜன்
உறுப்பினர்
கடலூர்


A.சந்திரசேகரன்
உறுப்பினர்
கோயம்புத்தூர்

## செங்குந்தமித்திரன் ஒருங்கிணைப்புக் குழு


C.கார்த்திகேயன்
தலைவர்
கேரளா


புலவர்.க.சந்திரசேகரன்
உறுப்பினர்
காஞ்சிபுரம்


G.தில்லைகோவிந்தன்
உறுப்பினர்
சிவகாசி

## மாநில கொள்கை பரப்புச் செயலாளர் மற்றும் துணைச் செயலாளர்கள்


கு.ப.கண்ணன்
செயலாளர்
காஞ்சிபுரம்


சோ.காசிநாதன்
துணைச் செயலாளர்
தஞ்சாவூர்


M.இராமச்சந்திரன்
துணைச் செயலாளர்
தென்காசி


கவிஞர் கு.கிருஷ்ணமூர்த்தி
துணைச் செயலாளர்
திருப்பூர்


வே.செந்தில்குமரன்
துணைச் செயலாளர்
சேலம்


P.S.ஜெய்கணேஷ்
துணைச் செயலாளர்
சின்னசேலம்

## மாநில நெசவாளர் அணி


K.தேவகிருஷ்ணன்
அமைப்பாளர்
கோயம்புத்தூர்


பூ.ரவிச்சந்திரன்
துணை அமைப்பாளர்
காஞ்சிபுரம்


M.R.ஜோதி
துணை அமைப்பாளர்
கடலூர்


S.கார்த்திகேயன்
துணை அமைப்பாளர்
அரியலூர்


G.காமராஜ்
துணை அமைப்பாளர்
கரூர்


S.வைரவேல்
துணை அமைப்பாளர்
திருநாகேஸ்வரம்


R.K.செல்வக்கனி
துணை அமைப்பாளர்
மதுரை


K.குணசேகரன்
துணை அமைப்பாளர்
இராமநாதபுரம்


A.துரைசாமி
துணை அமைப்பாளர்
கோயம்புத்தூர்


K.P.சீனிவாசன்
துணை அமைப்பாளர்
நாமக்கல்

## மாநில இலக்கிய அணி



பேரா.அ.பாலதண்டபாணி
அமைப்பாளர்
நாமக்கல்



R.C.ராமசாமி
துணை அமைப்பாளர்
கோயம்புத்தூர்



பா.குமரேசன்
துணை அமைப்பாளர்
காஞ்சிபுரம்



S.சோலைமுத்து
துணை அமைப்பாளர்
கும்பகோணம்

## மாநில விவசாய அணி



S.ராஜகம்பீரன்
அமைப்பாளர்
திருவாரூர்

## மாநில ஆன்மீக அணி



V.G.T.வேலு
அமைப்பாளர்
ஈரோடு



R.தண்டபாணி
துணை அமைப்பாளர்
பழனி



T.புகழனார்
துணை அமைப்பாளர்
காங்கேயநல்லூர்



M.கைலாசம்
துணை அமைப்பாளர்
உடுமலை



D.தனிகாசலம்
துணை அமைப்பாளர்
காஞ்சிபுரம்



V.K.இராமதாஸ்
துணை அமைப்பாளர்
காரைக்கால்



K.சரவணன்
துணை அமைப்பாளர்
பாபநாசம்



A.சங்கரன்
துணை அமைப்பாளர்
தென்காசி

## மாநில வழக்கறிஞர் அணி



K.பாரதி
அமைப்பாளர், கோபி



M.S.மருதுபாண்டியன்
துணை அமைப்பாளர், பாண்டிச்சேரி

## மாநில வர்த்தகர் அணி



ஆண்டவர் A.இராமசாமி
அமைப்பாளர், திருப்பூர்



P.ராஜா
துணை அமைப்பாளர், குடியாத்தம்

## மாநில செய்தித்தொடர்பு அணி



S.N.சரவணன்
அமைப்பாளர்
திருநெல்வேலி



S.K.சுரேஷ்
துணை அமைப்பாளர்
நெய்வேலி



சா.ஆனந்தகுமார்
துணை அமைப்பாளர்
திருப்பூர்



S.அசோக்குமார்
துணை அமைப்பாளர்
விழுப்புரம்



M.ராஜ்குமார்
துணை அமைப்பாளர்
கரூர்



T.தாமரைக்கண்ணன்
துணை அமைப்பாளர்
திருப்பூர்

# செங்குந்தர்

## சமூக வரலாறு

இந்தியாவில் பல ஆயிரக்கணக்கான சாதிகள் இருக்கின்றன. அவ்வாறே தென்னிந்தியா விலும் பல சாதிகள் இருக்கின்றன. ஒரு சாதிக் குள்ளேயும் பல பிரிவுகளிருக்கின்றன. இத்தகைய சமூகங்கள் நூற்றுக்கணக்கில் தென்னிந்தியாவில் இருக்கின்றன. ஆயிரக்கணக்கான சாதிகளிருப்பினும், தென்னிந்தியாவில் சில சாதியினர் மட்டும் பெருங் கூட்டமாக வசிக்கின்றனர். அவ்வாறு பெருங் கூட்டமாகத் தென்னாடு முழுவதும் செங்குந்தர்கள் பரவியிருக்கின்றனர்.

செங்குந்தர்கள், கைக்கொள்வோர் என்றும் கைக்கோளர் என்றும் அழைக்கப்படுவர். செங்குந்தர் களுக்குள்ளே சாதிப்பிரிவு கிடையாது. எல்லோரும் சிவ சேர்ந்தவர்கள். வடாற்காடு, தஞ்சை, செங்கற்பட்டு ஜில்லாக்களில் வசிக்கும் ஒரு சில வைணவக் குடும்பத்தினர் தவிர ஏனையோர் சிவ மதத்தைச் சேர்ந்தவர்களே. இக்குடும்பத்தினர் களும் சுமார் இரண்டு நூற்றாண்டுகளுக்குள்ளாகவே வைணவ மதத்தைத் தழுவியதாகத் தெரிகின்றது. தென்னிந்தியா முழுவதிலும் உள்ள செங்குந்தர்களில் பலர் வீரசைவர்களாக இருந்து கொண்டு லிங்க தாரணம் செய்து கொண்டு இருக்கின்றனர். காலம் மாற மாற வீர சைவ குடும்பத்தைச் சேர்ந்த பலர் லிங்க புராணம் செய்து கொள்வதை நிறுத்திவிட்ட போதிலும் அவர்கள் குடும்பங்களில் நடக்கும் சடங்குகள் லிங்காயத்து முறையில் நடைபெறுகின்றன.

புதுச்சேரியிலும் திருநெல்வேலி மாவட்டத்திலும் சங்கரநயினார் கோயில் சுப்புலாபுரம், சாம்பவர் வடகரை முதலிய இடங்களில் சில செங்குந்தர்கள் கிறிஸ்தவர்களாக இருக்கின்றனர். இவர்களுக்கும் அருகிலுள்ள ஹிந்து செங்குந்தர்களுக்கும் பெண் கொடுத்தல் வாங்கல் உண்டு. திருமணத்தன்று மணமகள் மதமாற்றம் நடைபெற்ற பிறகு திருமணம் நடைபெறுகின்றது.

தென்னிந்தியாவில் செங்குந்தர்கள் தமிழ் நாட்டின் பெரும் பகுதிகளிலும் கேரள நாட்டில், பாலக்காடு, கொல்லங்கோடு, முதலிய தென் மலையாள பிராந்தியத்திலும், கோட்டாறு, நாகர்கோயில் முதலிய திருவாங்கூரைச் சேர்ந்த சில பகுதிகளிலும், ஆந்திராவில் சித்தூர் மாவட்டத்திலும் பெருவாரியாக செங்குந்தர்கள் வசித்து வருகின்றனர்.

செங்குந்தர்களில் பலர் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர், திருநெல்வேலி மாவட்டத் திலிருந்து இலங்கைக்குக் குடியேறினார்கள். அவ்வாறு குடியேறினவர்களில் பெரும்பாலோர் யாழ்ப்பாணத்தில் தங்கினர். அதன் காரணமாக யாழ்ப்பாணத்திலும் நம்மவர்கள் வசிக்கும் பகுதிக்கு திருநெல்வேலி எனப் பெயர் வழங்கப்படுகின்றது.

தென்னாப்பிரிக்காவில் உள்ள டிரான்ஸ்வால், பேனோனி, பிரிடோரியா முதலிய இடங்களிலும் தஞ்சை ஜில்லாவிலிருந்து பல செங்குந்தர்கள் குடி யேறியிருக்கின்றனர். சிலர் அங்கேயே நிலைத்து இதர சமூகத்தினருடன் பெண் கொடுக்கல் வாங்கல் செய்து வருகின்றனர். தென்னாப்பிரிக்காவில் தமிழ் நாட்டைச் சேர்ந்த பல சமூகத்தவர்களும் தமிழர் என்ற ஒரே சாதியாகத் தங்களைக் கருதுவதினால் அங்கே குடியேறியுள்ள தமிழர்களிடம் எவ்வித வித்தியாசமும் இல்லை.

சென்னைக்கு அருகிலுள்ள சில ஊர்ச் செங்குந்தர்கள் அந்தமானிலும் குடியேறியுள்ளனர். தவிர, செங்குந்த வியாபாரிகள் இலங்கை, மலேசியா, பர்மா முதலிய இடங்களில் வியாபார ஸ்தலங்கள் நிறுவி வியாபாரம் செய்து வருகின்றனர்.

தமிழ்நாட்டில் வசிக்கும் பல சமூகத்தினரின் தோற்றம் தெய்வீகம் வாய்ந்திருப்பது போல் செங்குந்தர் சமூகத்திற்கும் புராண வரலாறு இருக்கின்றது. செங்குந்தர்கள் சூரபன்மனை அழிக்க ஸ்ரீ சுப்ரமணியக்கடவுள் அவதரித்த சமயம் அவருடன் தோன்றிய நவ வீரர்கள் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்பது கந்த புராண வரலாறு. இத் தோற்றத்தின் காரணமாகச் செங்குந்தர்கள் ஆரியர்களைச் சேர்ந்தவர்கள்; வடநாட்டிலிருந்து தென்னாட்டிற்கு வந்தவர்கள் என்பதும் ஒரு சாராரின் கருத்து. சரித்திர சம்பந்தமான வரலாற்றைப் பார்த்தால் செங்குந்தர்கள் முற்காலத்தில் தமிழ் மன்னராகிய சேர, சோழ, பாண்டிய மூவேந்தரால் வரிசைகள் பல தந்து நன்கு போற்றப்பட்டு வந்தனர். இவர்கள் அக்காலத்தில் கல்வி, கேள்வி, நாகரிகம், ஒழுக்கம், செல்வம், கொடை, வீரம் முதலியவற்றில் மேம்பாடு பெற்றிருந்தமை பண்டைய காலக் கல்வெட்டுகள் மூலம் நன்கு அறியலாம்.

இவர்களுக்குள்ளே பெரும்பான்மையோர்

இராசராசன் காலத்தில் சிற்றரசர்களாகவும் குறுநில மன்னர்களாகவும், மந்திரிகளாகவும் சேனாபதிகளாகவும், போர் செய்யும் வீரர்களாகவும் இருந்ததாக இக்கால ஆராய்ச்சியுடைய மேன்மக்கள் பலரும் தாங்கள் எழுதிய சரித்திரப் பகுதியுள் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கின்றனர்: அக் குறிப்பினுள் ஒன்றான மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் 'செந்தமிழ்" முதற்பகுதி.

கி. பி. 850-880, நூற்றாண்டில் காஞ்சிபுரத்தை ஆண்டுவந்த பல்லவராஜன் காலத்திலே செங்குந்தர் என்னும் மரபினர், குறுநில மன்னராகவும், படைத்தலைவராகவும் மிகுந்த செல்வந்தராகவும் இருந்தார். கரிகாற் சோழன் பண்டைய வேளாளரைத் தமிழருக்குள்ளே முதன்மையாக வைத்ததுபோல, பல்லவராஜன் செங்குந்தருக்கும் "முதலியார்" என்று பெயர் கொடுத்திருந்தான்.

இது காரணமாகவே பல்லவர்களுக்குத் தலைநகரான காஞ்சிபுரம் செங்குந்தர்களுக்கு இன்றும் தலைநகராக இருக்கின்றது.

பழைய காலத்துக் கல்வெட்டுக்களுள் விசையாலயன், பராந்தகன், கோப்பரகேசரி, இராசேந்திரன், இராசராசன், சுந்தரசோழன், திரிபுவனதேவன், வீரராசேந்திரன், குலோத்துங்கன், விக்கிரம சோழன், இராசநாராயணன், வீரசம்பன்னன், அனபாயன், அபய குலசேகரன், கோப்பெருஞ் சிங்கன், சுந்தரபாண்டியன், வல்லாள தேவன், வாணாதராயன் முதலிய அரசர்களது அரும்பெறும் செய்திகள் எழுதப்பட்டுள்ள இடங்கள்தோறும் கைக் கோளக் குல மக்கள் பெரும்புகழ் குறிப்பிடாத இடங்களே கிடையாது.

தமிழ்நாட்டு மூவேந்தர்களும், பல்லவர்களும் மறைந்த பிறகு செங்குந்தர் போர்த் தொழிலை விட்டு நெய்தல் தொழிலில் ஈடுபட்டனர்.

சரித்திர காலமுதல் செங்குந்தர்களின் தாய் மொழி தமிழ் மொழியென்பது உறுதி. இப்போது கேரளாவில் மலையாளம், ஆந்திராவில் தெலுங்கு, கர்நாடகாவில் கன்னடம் முதலிய பிற மொழிகள் பெரும்பாலாகப் பேசும் 12 இடங்களிலுள்ள செங்குந்தர்களுக்கும் தமிழ் மொழியே தாய்மொழியாகும்.

செங்குந்தர்கள் அனைவருக்கும் முதலியார் என்பது ஒன்றே பட்டப் பெயராகும். நாளடைவில், தஞ்சை ஜில்லா திருநாகேஸ்வரத்தில் உள்ள, திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தைச் சேர்ந்த சில வீரசைவச் செங்குந்தர்களும், செங்கற்பட்டு - செம்பாக்கத்தில் இருக்கும் வீரசைவச் செங்குந்தர்களும் 'பக்தர்' என்ற பட்டமும், மேற்படி திருநாகேஸ்வரத்தில் சிலரும் குறிஞ்சிப் பாடியில் கோயில் பூஜையில் ஈடுபட்டிருக்கும் குடும்பத்தினர்களும் 'ஐயர்' என்ற பட்டத்தையும், இலங்கையிலிருக்கும் சில செங்குந்தர்கள் முதலி யாருக்கு முன்னால் அந்நாட்டு வழக்கத்தையொட்டி பிள்ளை முதலியார் என்றும் (உதாரணம்: வேலு பிள்ளை முதலியார்) பட்டத்தையும் உபயோகித்து வருகின்றனர்.

செங்குந்தர்களுக்குள்ளே அவர்கள் சுப அசுப சடங்குகளைச் செய்வதில் ஈடுபட்டுள்ள குடும் பத்தினருக்குத் தேசிகர் என்னும் பட்டப்பெயர் வழங்கி வருகின்றது. நாளடைவில் சில தேசிகர்கள் செங்குந்தர் குலத்தை விட்டுத் தனிப்பட்ட சமூகத்தினராகப் பிரிந்தனர். இன்றும் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள தேசிகர்களில் பல குடும்பத்தினர் செங்குந்தர்களுக்குள்ளே பெண் கொடுக்கல் வாங்கல் செய்து கொண்டு, ஆச்சாரிய பீடத்தில் அமர்ந்த பின்னர் சம்பந்தி உணவு கொள்ளாமல் தனித்து விடுகின்றனர். இவ்விருவகை குருக்கள்மார்களும் செங்கற்பட்டு மாவட்டத்தில் இருக்கின்றனர்.

முன் சொன்ன வகையைச் சேர்ந்தவர்கள் செங்கற்பட்டு, திருக்கழுக்குன்றம் முதலிய இடங்களிலும் பின் சொன்ன வகைகளைச் சேர்ந்தவர்கள் காஞ்சிபுரத்திலும் திருமழிசை, படப்பை முதலிய ஊர்களிலும் இருக்கின்றனர். காஞ்சிபுரத்திலும், படப்பையிலும் இப்போது ஆசாய பீடத்திலமர்ந்திருப்பவர்கள் கச்சி ஆளவந்த வள்ளலார் ஆதீனத்தைச் சேர்ந்தவர்கள்.

மேற்படி ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீ சிவசாமி தேசிகர் அவர்களுக்குத் தென்னார்க்காடு, புதுவை, திருநெல்வேலி, சேலம் முதலிய பகுதிகளில் சீடர்கள் இருக்கின்றனர். திருமழிசையைச் சேர்ந்த ஆச்சாரியர்கள் கார்க்கோடக ஆதீனத்தைச் சேர்ந்தவர்கள். தென்னார்க்காட்டில் திருவெண்ணெய் நல்லூரில் உள்ள ஆச்சாரியர்கள் 'அய்யர்' என்ற பட்டத்தையும், கோவை பகுதியில் உள்ள ஆச்சாரியர்கள் 'இம்முடி குமாரதுங்க காங்கேய மன்றாடியார்' என்ற பட்டத்தையும் உபயோகித்து வருகின்றனர். இவர்கள் எல்லோருக்கும் தொன்றுதொட்ட 'பட்டயங்கள்' உள்ளன.

விஜயநகர சாம்ராஜ்யத்தின் காலத்தில் செங்குந்தர்கள் கூட்டத்தின் ஒற்றுமை கெடாதவாறு பிரதிநித்துவ தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதொரு சிறந்த சமூக ஆட்சி முறை ஏற்படுத்தப்பட்டது. இவர்கள் குடியேறிய பிரதேசம்

72 கிளை நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு கிளை நாட்டிலும் இவர்கள் வாழ்ந்து வந்த சில கிராமங்கள் அடங்கும். 72 பிரிவுகளும் நான்கு திசை நாடுகளாகப் பகுக்கப்பட்டன. அவற்றிற்கிடையே ஏறக்குறைய மத்திய ஸ்தானத்தில் தலைநகர் அல்லது மகாநாடு காஞ்சிபுரமாக ஏற்படுத்தப்பட்டது. பல கிராமங்களிலும் ஏற்படும் சச்சரவுகளைத் தீர்ப்பதற்கும், சமூகச் சட்டங்களை உண்டாக்குவதற்கும் காலாகாலங்களில் கூட்டப்படும் எல்லாச் சமூகக் கூட்டங்களிலும் தலைமை வகிக்கும் பெருமை பெற்றிருந்ததோடு, எவ் விவகாரத்திலும் முடிவான அபிப்பிராயம் கூறும் அதிகாரத்தையும் 'மகாநாடு' உடையதாயிருந்தது.

அத்தகைய கூட்டங்கள் 72 பிரிவுகளிலுமிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் அடங்கியதாகும். 4 பெரும் பிரிவுகளிலும், 72 சிறு பிரிவுகளிலும் ஒவ்வொன்றிற்கும் தத்தமக்குரிய இடங்களில் ஏற்படும் விவகாரங்களில் தீர்ப்பளிக்கும் பொருட்டுப் பிரதிநிதிக் கூட்டங்கள் கூடும் சுதந்திரமும் உண்டு. இச் சமூக ஆட்சியின் அங்கங்கள் கிராமங்களாகும். ஒவ்வொரு கிராமத்திலும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு கிராமப் பெரியதனக்காரர் தலைமை வகிப்பார். சுருக்கமாகக் கூறின், இந்த ஏற்பாடு முழுதும் பிரதிநிதிக் கூட்டங்கள் படிப்படியாக அமைந்த ஒரு பெரும் குடியரசின் தன்மையதாகும்.

கடந்த ஐந்தாறு நூற்றாண்டுகளாக மிகவும் ஒழுங்கும், சிறப்பும் அமைந்த சுதந்திரச் சபைகளைக் கொண்டு அவற்றிற்குப் பழக்கப்பட்ட சமூகம் தென்னிந்தியாவில் செங்குந்த சமூகம் ஒன்றே. இந்த ஆட்சி முறையின் அம்சங்கள் தற்காலத்திய தேசீய அலையினால் புறம்பே தள்ளப்படுகின்றன. ஆயினும், அவைகள் செங்குந்தர் கிராமங்களில் இன்னும் வழக்கத்திலேயே இருக்கின்றன.

செங்குந்தர் சமூக அமைப்பில் ஒரு கிராமத்தில் செங்குந்தர்களுக்குள்ளும் அவர்களுடன் சிறுபான்மையாக ஒத்து வாழும் இதர சமூகத்தவர்களுக்கும் ஏற்படும் குடும்ப சச்சரவுகள், பாகப் பிரிவினைகள், விவாகரத்து, கிரிமினல் வழக்குகள் எல்லாம் அந்தந்தக் கிராமங்களில் வசிக்கும் செங்குந்தர் குல கிராம மணியக்காரர்கள் அல்லது பெரிய தனக்காரர்களாலேயே பைசல் செய்து வைக்கப்படும்.

ஒவ்வொரு கிராமத்திலும் வசிக்கும் செங்குந்தர்களுக்குச் சொந்தமான கோயில், பொதுச் சொத்துக்கள் உண்டு. கோயில்களின் செலவு இனவரி மூலமும், பொதுச் சொத்துக்களின் வருமானத்திலிருந்தும் செய்யப்படும். இக் காலத்திலும் செங்குந்தர்கள் வசிக்கும் பல கிராமங்களில் மேற்சொன்ன திட்டங்கள் நடைமுறையிலிருக்கின்றன.

ஒரு கிராமத்தினருக்கும் மற்றொரு கிராத்தினருக்கும் ஏற்படும் சமூகச் சண்டைகள் திசை நாட்டுத் தலைவராலும், ஒரு திசை நாட்டுக்கும் மற்றொரு திசை நாட்டுக்கும் ஏற்படும் சச்சரவுகள் காஞ்சி மகாநாட்டுத் தலைவராலும் தீர்க்கப்படும். சமூகச் சண்டைகளைத் தீர்ப்பதற்குத் திசை நாட்டுத் தலைவர்களும், காஞ்சி மகாநாட்டுத் தலைவர்களும் சச்சரவு உள்ள கிராமங்களுக்குச் செல்வர்.

திசை நாட்டுத் தலைவருக்கும், மகாநாட்டுத் தலைவருக்கும் தனித்தனியே குறிப்பிட்ட விருதுகளும் மரியாதைகளும் உண்டு. 1905-ம் ஆண்டில் சமூகச் சண்டையைத் தவிர்ப்பதற்காகக் காஞ்சிபுரம் மகாநாட்டுத் தலைவர் குடியேற்றம் சென்றபோது நடைபெற்ற குதூகலமான வரவேற்பு ஒன்று அம்மகாநாட்டு நடவடிக்கைப் புத்தகத்தில் கீழ்க்கண்டவாறு விவரிக்கப்பட்டுள்ளது.

"ஸ்ரீகாஞ்சிபுரம் மகாநாட்டாருடன் திசை நாட்டார்களும் நாயன்மார்களும் காட்டு மாணிக்கத் தாள் சகிதமாக புறப்பட்டுத் திரிவிரிஞ்சிபுரம் நாட்டைச் சேர்ந்த குடியேற்றம் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கியதும் மேற்படி ஊரில் மயில முனிகந்தப்ப முதலியார் வகையறாக்கள் அனேக அதிர்வேட்டுகள் முழக்கி எதிர்வந்து அழைத்துக் கொண்டு ஸ்ரீ காஞ்சிபுரம் மகாநாடு ஆண்டவர் ஸ்ரீ திண்டுசார்ந்தான் திருநாத முதலியார் குமாரர் ஸ்ரீ திரு வேங்கட முதலியாரை முத்துப்பல்லக்கிலேற்றி நாட்டு மாணிக்கத்தாள்கள் இருபுறமும் இரட்டைச் சாமரம் போடப் பகல் தீவட்டி பிடிக்க பதினெண் கொடி பறக்க நாயன்மார்கள் கட்டியங்கூற நடனப் பெண்கள் திருத்தமாட பாண்டுவாத்தியம் ஒலிக்க அனேக மேள தாள சங்கீதவாத்தியங்கள் தாம் தாமென்று முழங்க மகா ஆடம்பரத்துடனே அலங்கரித்த வீதிகளின் வழியாய்ப் போய் மகா விநோத சிங்காரத்துடன் அலங்கரித்து இருந்த ஸ்ரீ கருப்புலீஸ்வரர் கல்யாண மண்டபத்தில் சகலரும் கொலுவமர்ந்தார்கள். அந்தக்காலத்தில் அனேக கிளை நாட்டார்களும் கிளைக் கிராமத்தார்களும் ஆயிரக்கணக்காய் கூடியிருந்து மரியாதை செய்தார்கள்."

மேற்கண்ட மகாநாட்டுத் தலைவருக்குப் பிறகு அவரது புத்திரர் குமாரசாமி முதலியாருக்கு 1914-ம் ஆண்டில் காஞ்சிபுரம் ஸ்ரீ கச்சபேசர் ஆலயத்தில் வெகு விமரிசையாக மகாநாட்டுத் தலைவர் பட்டம்

சூட்டப் பெற்றது. இவ்விழாவிற்கு 72-நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர். குமாரசாமி முதலியார் குடும்பத்திற்கு ஆண்டவர் குடும்பம் என்று பெயர். இவர் காஞ்சிபுரம் காலஞ்சென்ற ம. சாமிநாத முதலியாருக்கு நெருங்கிய உறவினர். அதனாலும் காஞ்சிபுரத்தில் நிறைந்த செல்வாக்குடன் அதன் நகர சபைத் தலைவராகவும் மற்றும் அரசியல் உலகில் பெரும் பங்கு எடுத்துக் கொண்டு முக்கியப் பிரமுகராக இருந்தமையாலும் திருவேங்கட முதலியார், தமது அலுவல் முழுவதையும் கவனிக்கும்படி சாமிநாத முதலியாரையே கேட்டுக் கொண்டார்.

பெரும்பாலும் மகாநாட்டுக் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்கவும் சண்டை சச்சரவுகளைத் தீர்க்கவும் சாமிநாத முதலியார் தமது 18-ம் வயது முதல் செல்ல ஆரம்பித்தார்.

மகா நாட்டுத் தலைவருக்குரிய விருதுகளும், மரியாதைகளும் அவருக்கு வழங்கப்பட்டு வந்தன.

குமாரசாமி முதலியார் தமது பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்குத் தகுந்தவர் தமது உறவினர் சாமிநாத முதலியாரே என்று கருதி, அவர் சமூக விஷயங்களில் சம்பந்தப்படாமல் இருந்து வருகின்றார்.

செங்குந்தர் சமூகத்திற்கே காஞ்சிபுரம் தலைநாடாகையாலும், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தொடங்கப்படும் முன்னர் சாமிநாத முதலியார் சமூகத் தலைவராகக் கருதப்பட்டு வந்ததனாலும் ஈரோட்டில் நடந்த முதல் மாநாட்டுக் கொடியை ஏற்றுவிக்குமாறு அவரைத் தலைமைச் சங்கத்தினர் கேட்டுக் கொண்டார்கள்.

அதுமட்டுமின்றி 1912-ல் தலைமைச் சங்கத்திற்காக ஏற்பட்ட காஞ்சிபுரம் கச்சபேசர் ஆலயக் கூட்டத்திலும் பிறகு, அவ்வப்போது செய்த முயற்சிகளிலும் பெரிதும் பங்கு எடுத்துக் கொண்டதனால் அவரை முதல்வராக வைத்து ஈரோட்டில் தமது முதல் மகாநாடு தற்கால முறைக்கேற்ப துவக்கப்பட்டது.

தெ.செ.ம.சங்க வெள்ளி விழா மலர் - 1952

# செங்குந்தர்கள் கொங்கு நாடு வந்ததற்கான சான்று



இவர்கள் கொங்கு நாட்டில் பல பாகங்களிலும் வாழ்கின்றனர். கொங்கில் உள்ள சில சிவாலயங்களிலும், செல்வியின் ஆலயங்களிலும், இவர்கள் காணியாளராகவும், பூசாரிகளாகவும் இருக்கின்றனர். இவர்கள் கொங்கு வேளிருக்குரிய பெருந்தாலி கட்டுகின்றனர்; கொங்கு வேளிருக்குரிய திருமணச் சடங்குகள் முதலியன இவர்களுக்கும் உண்டு. இவர்கள் கொங்கு முதலிகள் என்று கூறப்படுகின்றனர். கொங்கு வேளிர்களின் படைகளை நடத்தும் முதல்வராகத் திகழ்ந்தமையால், இவர்கள் முதலிகள் ஆனார்கள். கொங்கு வேளிர்களின் படையில் சிவந்த ரத்தந் தோய்ந்த குந்தத்தை ஏந்திப் போர் செய்த நிலையில் இவர்களைச் செங்குந்தர் என்றே அக்கால மக்கள் அழைத்தனர். கையில் கோலேந்திப் போர் செய்த காரணத்தால், இவர்கள் கைக்கோலர் என்ற பெயர்க்கும் உரியவர்களானார்கள். சோழ மன்னரின் அரசியல் சுற்றத்தாரில் படை முதலிகளாக இருந்த காரணத்தால், இவர்கள் நகருக்கும் தேவாலயங்களுக்கும் காணியாளர் ஆகும் பெருமை பெற்றார்கள். இம் முதலிகள், முத்தூரில் உள்ள சிவாலயத்தும், செல்வியின் ஆலயத்தும் காணியாளர்களாக இன்றும் இருந்து வருகிறார்கள்.

முதலியார் என்பவர் காஞ்சி நகரில் வசித்தனர். வீரமும் தீரமும் விளங்கும் மேன்மையினராக இருந்தனர். இவர் தம் புகழை நன்கு தெரிந்த கொங்கு வேளிருள் அகத்தூர்ச் சோழ மன்னன் உலகுடையமன்றாடி, இம் முதலியாரைத் தமது படை முதலியராக ஆக்கும் விருப்பில் தொண்டை நாட்டில் வாழ்ந்த சோழ மன்னனொருவனை வேண்டினான்; அவ்வேண்டுதலாவது, "மன்னர் மன்னா! நாங்கள் அறுபது குல வேளிர்கள் எமது பகுதி நாட்டில் காணியாளராக வாழ்கின்றோம். எங்கள் படைகளை நடத்துவதற்கு சிறந்த படை முதலிகள் இல்லை. தங்கள் பகுதியில் உள்ள படை முதலிகளுள் அறுபது குடி முதலிகளை எங்களுக்குத் தாங்கள் அனுப்பி உதவ வேண்டும்" என்பது. அதற்குக் காஞ்சிச் சோழன் சொன்ன மறுமொழியாவது: "நீங்கள் விரும்பிய விதமே அறுபது படை முதலிகளை அனுப்புகின்றோம். அவர்களுக்கு வேண்டிய நன்மைகள் பலவற்றைச் செய்து, எல்லா இடங்களிலும் அவர்களுக்குக் காணி முதன்மை தந்து, சீர் சிறப்பு நன்மை தீமைகளில் உங்களைப் போலவே அவர்களையும் கருதி யாவும் செய்து நடத்த வேண்டியது. தவறினால் காராம் பசுவைக் கொன்ற பாவம் உங்களைச் சார்வதாகுக" என்பது. வெள்ளோட்டு உலகுடைய மன்றாடி என்னும் சோழன் காலமுதல் கொங்கில், அறுபது குடி முதலிகள் வந்த வரலாற்றுக்கு நாட்டுப் பாடல் ஒன்றும் ஆதாரமாகும்:- அது,

"ஆதி முதல் செங்குந்தர் அதில் வந்த கொங்கனுக்குச்
சாதி குலம் கல்யாணம் தனது முறைப்படியாக
நீதியுடன் என்னாளும் நிலைத்திருக்க வேண்டுமென
ஓதிவைத் தான் பூந்துறை நாட் டுடைய உத்தமனே"

இதுவாகும். அகத்தூர்ச் சோழ மன்னன் கால முதலியாருக்கு இக் கொங்கு நாட்டில் கொங்கு வேளாளரைப் போன்ற எல்லாவிதப் பெருமையும் உரியதாகும். தற்காலத்திலும் பல திருக்கோயில்களிலும் இச்சிறப்பு மாறாது இருந்து வருகின்றது. கொங்கு வேளிரைப் போன்ற பெருந் தாலியும் அவர்களது சீர், சிறப்பு, சடங்குகள் யாவும் இன்றும், முதலியாரிடம் காணப்படுகின்றன. திருமண காலங்களில் கொங்கு வேளிருள் அருமை பெற்ற வேளிர்கள் இவர்கள் கல்யாணங்களில் வந்து அருமை செய்து மணமக்களை ஆசீர்வதிப்பதும் இன்றும் உண்டு. இம்முறையில் வழுவாது வரும் சிறப்பை வேளிர்கள் மறவாது வாழ்வது அவர்கள் நன்றி மறவாமைக்கு ஓர் உதாரணம் ஆகும்.

– நன்றி: கொங்குச்செல்வி வரலாற்று ஆய்வு நூல்.

தகவல்: சு.பிரகாஷ், இடுவாய், திருப்பூர்.

# செங்குந்தர்கள் சமுதாயத்தில் 2400 ஆண்டுகள் வரலாற்றுக்குரியவர்கள்

**பெருக்கமுடையவர்; செய்கைதப்பாதவர்: பின்னும் முன்னும் வருக்கமுடையவர்; வாகாய் பிறந்தவர்; வன்மரபில் உருக்கமுடையவர்; உத்தமி கௌரி உயர் குலமென் செருக்கை உடையவர்; செல்வரில் செல்வர்; இச்செங்குந்தரே என்று 'செங்குந்தப்பிரபந்த திரட்டு' செங்குந்தர்களின் புகழ்பாடும்.**



ஒவ்வொரு சாதிக்கும் ஒரு வரலாற்றுப் பின்புலம் உண்டு. ஆதிகாலத்தில் வாழ்ந்த ஆதிமனிதன் தொடங்கி அலெக்சாண்டர் வரை கையில் ஏந்திய போர்க்கருவி ஈட்டி.

இந்த ஈட்டியை பயன்படுத்திய மாவட்டச் சமூகத்தில் செங்குந்தர்களே முன்நிற்கின்றனர். குலமரபுச் சின்னம் என்பதை ஆங்கிலத்தில் TOTEM என்பார்கள். அந்த வகையில் செங்குந்தர்கள் மிகச்சிறந்த மன்னர்களாக, தளபதிகளாக விளங்கியுள்ளனர் என்பதை மானுட ஆய்வில் காணலாம்.

இனம், சாதி என்கிற இரண்டு சொற்களை Race, Caste என்று பொருள் கொண்டால், இனம் என்பது தமிழ் இனம். சாதி என்பது அவரவர் சார்ந்த சமுதாயப் பிரிவு என்று கொள்ளலாம்.

(Race : a group of People Who have the same Language, Customs, History etc.)

சாதி என்ற சொல் 'ஜாதி' என்கிற வடிவில் இடைக் காலத்தில் தான் தமிழர் இனத்தில் புகுந்தது.

"சிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான்" – குறள் : 972

என்கிற குறள் நமக்குப் போதிப்பது என்னவென்றால் பிறப்பினால் வேறுபாடு இல்லாத மக்கள், தாங்கள் செய்கிற தொழிலால் வேறுபடுத்தி அடையாளம் காணப்பட்டனர்.

அவ்வாறெனில் செங்குந்தர்களின் தொழில் என்ன?

ஆரம்பத்தில் போர்த்தொழில், பின்பு விவசாயம், பின்பு நெசவு, இப்போது வணிகம் உள்ளிட்ட சகல துறைகளிலும் முன்னணியில் இருக்கிறார்கள்.



தமிழ்நாடு அரசின் சிறந்த எழுத்தாளர் விருது பெற்ற
**அனிதா கு.கிருஷ்ணமூர்த்தி,**
திருப்பூர்.



# ஆதி முதலிகளைப் பற்றிய அரிய கல்வெட்டுச் செய்திகள்

கொங்கு மண்டலத்தில் தடம் பதித்து ஆலமரமாய் திகழ்ந்த செங்குந்தர்களின் வரலாறு பல சுவாரசியமான செய்திகளைக் கொண்டுள்ளது. சேலம், ஈரோடு, திருச்செங்கோடு, தாரமங்கலம் ஆகிய பகுதிகளில் ஆதி காலத்திலேயே செங்குந்தர்கள் வாழ்ந்து வந்திருக்கிறார்கள் என்பதை வரலாற்றுச் சான்றுகளுடன் அறிகிறோம்.

ஆதி முதலிகளைப் பற்றிய அரிய செய்திகள் தாரமங்கலத்திலுள்ள இளமீசுரம் கோயில் கல்வெட்டில் காணப்படுகிறது. இந்த கல்வெட்டுக்கள் 13ஆம் நூற்றாண்டுக் காலத்துக்குட்பட்டது. அக்காலத்தில் செங்குந்தர்கள் கெட்டி முதலிகள் என்னும் பெயர் பெற்று விளங்கினர்.

கெட்டி முதலிகள் சேலம், ஈரோடு மாவட்டங்களில் வசதி வாய்ப்புடன் வாழ்ந்து வந்தனர் என அறிகிறோம். தெய்வ நம்பிக்கையுடனும் பக்தி உணர்வுடனும் இருந்து அநேக ஆலயக் கைங்கிரியங்களை இவர்கள் செய்தனர். 1250ம் ஆண்டில் நகரத்து முதலிகள் என்ற பெயருடன் விளங்கிய செங்குந்தர்கள் கற்பூர நாராயணப் பெருமாள் கோவில் புனருத்திரப் பணிக்கு தாராளமாய் நன்கொடை வழங்கி மகிழ்ந்தனர்.

13ஆம் நூற்றாண்டில் தாரமங்கலத்துச் செங்குந்தர்கள் நீருணி முதலிகள் என அழைக்கப்பட்டனர். இப்பெயர்க் காரணம் ஆராய்ச்சிக்குரியது. நீர் உண்ணி என்றால் நீரில் வாழ்பவர் என்று பொருள்படும். அக்காலத்தில் இவர்கள் உழவுத் தொழில் செய்து வாழந்து வந்தனர். உழவுத் தொழிலுக்கு நீராதாரம் மிக இன்றியமையாதது. நீர் இவர்களுக்கு வாழ்வாதாரமாய் அமைந்ததால் இவர்களுக்கு நீருணி முதலிகள் என்று பெயர் வந்தது.



பேராசிரியர் K.முருகேசன்,
தமிழக அரசு உயர்கல்விப் பேராசிரியர் (பணி நிறைவு)
சென்னை.

இம்முதலிகள் வெள்ளாளர் என்ற பட்டப் பெயரையும் கொண்டு விளங்கினர். இவ்வுண்மையை தாரமங்கலக் கோயில் கல்வெட்டு மூலம் அறியலாம். "வெள்ளாளர் நிலங்கிளார்" என்பது கல்வெட்டு வாசகம். நாளடைவில் இச்செங்குந்தர்கள், கவுண்டர் இன மக்களுடன் இணக்கமாக வாழ்ந்து வந்தனர். இவ்விரு சாதியினரும் உறவை பேணி மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர் என வரலாறு கூறுகிறது.

கெட்டி முதலிகள் ஓமலூரில் பிரபல்யமாக வாழ்ந்து வந்தனர். இப்பகுதியில் வெள்ளாளக் கவுண்டர்களும் வாழ்ந்து வந்தனர். இவ்விரு இன மக்களும் சமமான சமூக சிந்தனை கொண்டவர்கள். இவர்களுக்கு கைலாசநாதர் குல தெய்வம். முதல் குழந்தை ஆணாக இருந்தால் கைலாசம் எனவும் பெண்ணாக இருந்தால் சிவகாமி என்றும் பெயரிட்டு அழைத்தனர். இவர்கள் பத்திரப் பதிவு செய்யும் போது கெட்டி முதலி வழி வந்தவர் என்றே குறிப்பிட்டனர்.

கெட்டி முதலிகளின் வரலாற்றை கல்வெட்டு ஆராய்ச்சியாளர்கள் கண்டெடுத்து அரிய பல செய்திகளை நமக்கு அறிவுத்துள்ளார்கள். இதைப் பற்றிய கல்வெட்டுக்கள் கீழ்க்கண்ட ஸ்தலங்களில் காணப்படுகிறது. இளமீசுரர் கோயிலில் 11



செங்குன்றம், செங்குந்தம், கைக்கோளர், கைக்கோலர் என்றெல்லாம் அழைக்கப்படுகிற இவர்களின் வரலாற்றைப் பாட வந்த அம்பல் சேந்தன் தனது 'திவாகரம்' நூலில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.



"செங்குந்தப் படையர், சேனைத் தலைவர், தத்துவாயர், காருகர், கைக்கோளர் ஆகிய ஐந்து பெயர்களும் கைக்கோளர் என்கிற செங்குந்தரையே குறிக்கும் என்கிறார்.

கல்வெட்டியல் அறிஞர் சுப்பிரமணிய தேசிகனாரின் ஆய்வின்படி, செங்குந்தர்களின் வரலாறு 2400 ஆண்டுகளுக்கு முந்தையது. கி.மு. 323 மகா அலெக்சாண்டர் காலம் என்றால் அதற்கு முந்தைய வரலாற்றுச் சிறப்புடையவர்கள் செங்குந்தர்கள் என்றாகிறது.

தமிழர்களின் சாதி பற்றி அறிய அகத்தியம், காக்கைப் பாடினியம், அவிலியம், செம்பூட்சேபம், இளந்திரையம் போன்ற நூல்கள் உதவும்.

ஆயினும் இவை அனைத்தும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நில அமைப்பின்படி தமிழர்கள் வாழ்ந்ததாகக் கூறுகிறது.

பார்வதி தேவியின் காற்சிலம்பின் நவமணிகளில் இருந்து தோன்றிய ஒன்பது பேர் முருகனுக்குத் துணை நின்றனர். அதில் குறிப்பாக வீரபாகுத் தேவர் தனது மகள் சித்திர வல்லியை சோழ மன்னன் முசுகுந்த சக்ரவர்த்திக்கு மணம் செய்து கொடுத்தான்.

அவர்கள் இருவருக்கும் பிறந்த குழந்தை அங்கிவன்மன். அவர்களிலிருந்து முதல் தலைமுறை செங்குந்தர்கள் 1900 பேர் இருந்தனர்.

சிவபெருமான், முருகன் வழிவந்த செங்குந்தர்கள் இன்று உலகமெங்கும் பரவி வாழ்கின்றனர். மேற்படி செங்குந்தர்களின் வரலாறுகளை, ஆங்கிலேயரான எட்கர் தர்ஸ்டன் தனது Caste and Tribes of South India நூலின் மூன்றாவது பாகத்தில் எழுதி உள்ளார். 1885 முதல் 1905 வரை சென்னையில் வாழ்ந்தவர் இவர்.

இவ்வாறு புகழ்பெற்ற செங்குந்தர்களில் முக்கியமாக, தமிழக அரசியல் வரலாற்றைத் தீர்மானித்த அறிஞர் அண்ணா, காந்தியின் உயிரை தென் ஆப்பிரிக்காவில் காப்பாற்றிய தில்லையாடி வள்ளியம்மை, கம்பருக்கு இணையான கவிஞர் ஒட்டக்கூத்தர், தென்னிந்திய வரலாற்றில் முக்கியமான இடம்பிடித்த 105 வயது வரை வாழ்ந்த அரியநாத முதலியார், இந்திய வரலாற்றில் கொடிக்காக உயிர் நீத்த திருப்பூர் குமரன் போன்றோரைத் தவிர்த்து விட்டு இந்திய வரலாற்றை எழுத முடியாது.

சிவபெருமான் வழிவந்தவர்கள் என்றாலும் சைவம், வைணவம் என இரண்டு பிரிவுகளிலும் செங்குந்தர்களே முதன்மையானவர்கள். எடுத்துக்காட்டாக, வைணவர்களின் முக்கியமானவர் இராமானுஜர். இவருக்கு இந்த 2017 ஆண்டில் ஆயிரமாவது ஆண்டு விழா கொண்டாடுகிறார்கள். 'கோயிலொழுகு' என்கிற ஆவணத்தில் ஒரு குறிப்பு மிக முக்கியமாக நமக்கு கிடைக்கிறது.

திருவரங்கத்தில் உள்ள இறைவன் திருமாலுக்கு இளநீர் வழங்கும் உரிமை பெற்றவர்கள் கைக்கோளர் என்கிற செங்குந்தர்கள் ஆனால், அந்த உரிமையை பார்ப்பனர்கள் தட்டிப் பறித்தனர். இது கண்டு வெகுண்டெழுந்த இராமானுஜர் இறைவனுக்கு இளநீர் கொடுக்கும் உரிமை செங்குந்தர்களுக்கே உண்டு என்று ஆவணம் எழுதினார்.

அதேபோல் சைவர்களின் திருத்தலமான சிதம்பரம் கோயிலில், தில்லை நடராசனின் சபை கனகசபை. 'சிதம்பர ரகசியம்' என்று இப்போது வழங்கி வரும் சொல்லுக்கு காரணமானவர்கள் செங்குந்தர்கள். இங்கே திரைச்சீலை வழங்கும் உரிமை வெள்ளைமுத்து என்கிற செங்குந்தரின் வம்சாவளியினருக்கே உள்ளது.

இன்னும் சொல்லப்போனால், அனைத்துத் திருக்கோயில்களிலும் செங்குந்தர்களே திருவிழா தொடங்கும் முன் 'கொடி கட்டும்' உரிமையைப் பெற்றிருந்தனர். இன்னமும் அது தொடர்ந்து கொண்டிருக்கிறது.

செங்குந்தர்களுக்கு இருக்கும் புராணநூல்கள், இலக்கிய நூல்கள், வரலாற்று நூல்களைப் போல பிற சமுதாய மக்களுக்கு பெரிய அளவில் இல்லை. எனவே தான், ஒட்டக்கூத்தர் இப்படிப் பாடுகிறார்....

"குந்தர் பெருமிதத்தை கூறுவதென் பார்த்திபர்காள்
சந்தத் தமிழ்கடலார் தாம்போற்ற – விந்தைத்
தலை தந்தார் பாடலுக்குத் தாமென்றும் பூவில்
தலை தந்தார் மக்களுக்குக் காண்"

வாழ்க செங்குந்தம்.... வாழ்க மக்கள்....





கல்வெட்டுக்களும் இலவம்பட்டி கன்னிமார் பாழிப் பாறையில் ஒரு கல்வெட்டும், பவானி சங்கமேஸ்வரர் ஆலயத்தில் 3 கல்வெட்டுக்களும், அத்தாணி செல்லாண்டி அம்மன் கோவிலில் ஒரு கல்வெட்டும் காணப்படுகிறது.

கெட்டி முதலிகள் தாரமங்கலத்தில் அரசாட்சி நடத்தும் அளவிற்குப் புகழ்பெற்று வாழ்ந்துள்ளனர். "ஏழு கரை நாடு எங்கள் காணி" என்ற கல்வெட்டு வாசகம் கெட்டி முதலிகளின் ஆட்சிச் சிறப்பை எடுத்தியம்புகிறது. ஏழு கரை நாடு என்பது பூந்துறை, பவானி, வஞ்சி, சேலம், ராசிபுரம், பருத்திப் பள்ளி, ஏழூர் என்ற நாடுகளைப் பட்டியல் இட்டுக் காட்டுகிறது. இவ்வூர்களில் கெட்டி முதலிகள் அரசாட்சி நடத்தி வந்துள்ளனர் என்பதை ஆதாரபூர்வமாக அறிகிறோம்.



கெட்டி முதலிகள் அரசு அந்தஸ்து பெறுவதற்கு அவர்கள் அக்கால அரசர்களுக்கு வழங்கிய மருத்துவ உதவிகளே உறுதுணை புரிந்துள்ளன. இவர்களிடம் பெற்ற மருத்துவ உதவிகளுக்கு நன்றிக் கடன் செலுத்தும் பொருட்டு வேட்டுவ மன்னர்கள் கெட்டி முதலிகளுக்கு அவர்களுடைய அரசையே கொடுத்து முதலிகளை மகிழ்ச்சிப்படுத்தினர்.

ஒரு காலத்தில் கெட்டி முதலிகள் திருமலை நாயக்கரின் பணியாட்களாக இருந்து வந்தனர். அச்சமயத்தில் அவர்கள் செய்த தவறு திருமலை நாயக்கரின் கோபத்திற்குக் காரணம் ஆனது. முதலிகள் நாயக்கரின் கோபத்திற்குப் பயந்து ஓடி ஒதுங்கி கொண்டனர். வேட்டுவ மன்னர்களின் ஆதரவால் கெட்டி முதலிகள் அரசர்கள் ஆகி, திருமலை நாயக்கரைப் பெருமையுடன் வந்து சந்தித்தனர்.

கெட்டி முதலிகள் ஆட்சி செய்த தாரமங்கலம் பகுதியில் முதலிகள் இன மக்களே அதிக அளவில் வாழ்ந்து வந்தனர். முதலி என்னும் பெயர் சோழ மன்னர்களுக்கு படைத்துணை செய்த வம்சம் என்ற செய்தியை கல்வெட்டுக்கள் வாயிலாக அறிகிறோம்.

கெட்டி முதலிகள் சைவ சமயத்தைப் பின்பற்றி மதக் கோட்பாட்டுக்களைக் கடைப்பிடித்து வாழ்ந்தனர். கைலாச நாதர் திருக்கோயில் தலைமைப் பொறுப்பு செங்குந்தர்களிடமே இருந்தது. கோயில் பிரசாதம் வழங்குவதில் செங்குந்தர்களுக்கே முதலிடம் அளிக்கப்பட்டது.

இளமீசுவரம் கோயில் கல்வெட்டில் 'மங்கை வரோதயன் கெட்டி முதலி' என்ற வாசகம் காணப்படுகிறது. அத்தொடருக்கு உமாதேவியின் வரத்தில் உதித்த கெட்டி முதலி என்பது பொருளாகும். அன்னை பார்வதி தேவியின் திருவடிச் சிலம்பில் தோன்றியவர்களே செங்குந்தர்கள் ஆவார்கள் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகும்.

கெட்டி மன்னர்களுக்கென்று தனி இலச்சினை உண்டு. வண்ணத் தடுக்கும் வாடாமாலையும் ஊடையும் பாவுமாக நெய்யப்பட்ட துணி அமைப்புக் கொண்டு இவர்களது இலச்சினை விளங்கியது. செங்குந்தர் களின் குலத்தொழில் நெசவு என்பதை இவ்விலச்சினை குறியீடாகக் காட்டுகிறது. இவர்கள் புலிக் கொடியை தங்கள் அடையாளமாகக் கொண்டு வாழ்ந்தவர். ஒட்டக்கூத்தரின் ஈட்டி எழுபது என்ற நூலில் இதற்கான வரலாற்றுச் செய்தி இடம் பெற்றுள்ளது.

கெட்டி முதலிகளின் வீர வரலாற்றைச் சொல்லும் நிகழ்வுகளை கல்வெட்டுக்கள் காவியங்களாய் பகன்று வருகின்றன. இவ்வம்ச குலத்தில் ஓர் போர்த்தளபதி இருந்தான். அவனுக்குத் திருமண ஏற்பாடு செய்து மணமகனும் திருமணக் கோலத்தில் தயார் நிலையில் இருந்தார். அச்சமயத்தில் மன்னனிடம் இருந்து உடனடியாகப் போருக்குப் புறப்படும்படி ஆணை வந்தது. முதலி வம்சத்தில் வந்த படைத் தளபதி மன்னனின் ஆணையை ஏற்றுக் கொண்டு திருமணக் கோலத்தை கலைத்துவிட்டு போருக்குப் புறப்பட்டார். ஊர் மக்களும் அவனை வழியனுப்பும் விதமாக போருக்குச் செல் என்று விடை கொடுத்தனுப்பினர். அப்படி அவர்கள் விடை கொடுத்தனுப்பிய இடமே ஜலகண்டபுரத்திற்கு அருகில் அமைந்துள்ள செலவிடை ஆகும். செல் + விடை என்பதன் திரண்ட பொருளே செலவிடை

என்ற பெயர் பெற்று அவ்வூர் இன்றும் திகழ்வதை நாம் அறிகிறோம்.

கெட்டி முதலிகள் தான தரும காரியங்களில் சிறந்து விளங்கினர் என்பதைத் தெரிவிக்கும் கல்வெட்டுக்களும் தாரமங்கலக் கோவிலில் காணப்படுகிறது. கெட்டி முதலிகளின் சகோதரி எல்லம்மா என்பவள். எல்லம்மாவின் கணவர் அகால மரணம் அடைந்து விடுகிறார். தன் கணவரின் இறப்பிற்குப் பின்பு எல்லம்மா தன் சகோதரன் வீட்டுக்கே கணவனுடைய சொத்து சுகங்களுடன் வந்து சேருகிறாள். அவளுடைய சொத்துக்களை எல்லாம் நாட்டின் நற்பணிகளான ஏரிகள் வெட்டுவதற்கும், குளங்கள் தூர் வாருவதற்கும், சாலைகள் அமைப்பதற்கும் செலவு செய்கிறாள். அவளது சொந்தப் பொறுப்பில் சரபங்க நதியின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டது. அந்த அணை 'எல்லம்மா சமுத்திரம்' என்ற பெயருடன் இன்றும் திகழுவதை நாம் காணலாம்.

தாரமங்கலம் 12ஆம் நூற்றாண்டிலேயே சகல சிறப்புக்களும் பெற்று விளங்கியது. இங்குள்ள இளமீசுரர் கோவில் பிரசித்தி பெற்ற சிவஸ்தலம். 13ஆம் நூற்றாண்டில் கெட்டி முதலிகள் கைலாச நாதர் கோவில் அமைத்து அதைக் குலதெய்வமாகப் போற்றி வணங்கினர். இன்றும் இத்திருக்கோவில் பழஞ் சிறப்புக்கள் மங்காமல் காட்சி அளிக்கிறது.

அரசர்களின் கோட்டைகளில் படைத் தளபதிகளாக ஆதி செங்குந்தர்கள் விளங்கியதால் கெட்டி முதலிகள் என்ற பெயர் பெற்றனர். கட்டியம் கூறி அரசருக்கு உதவியதால் கெட்டி முதலிகள் என்று பெயர் பெற்றனர் என்று கூறுவாரும் உண்டு. இம் முதலிகளுக்கு பல்லக்கில் சவாரி செய்யும் உரிமையும், பரிவட்டம் தாங்கும் சிறப்பும் வழங்கப்பட்டிருந்தன என்று அறிகிறோம்.

முதன்மைப் பட்டம் பெற்றவர்களே முதலியார்கள் ஆவார்கள். கூரிய அறிவும், கூர்த்த மெய்ஞானமும் கொண்டு இவர்கள் செயல்பட்டு பல நற்காரியங்களுக்குக் காரண கர்த்தர்களாக விளங்கியதால் முதலியார்கள் ஆகினர். தர்ஸ்டன் என்ற ஆங்கில ஆராய்ச்சியாளர் முதலியார், வேளாளக் கவுண்டர் ஆகிய இரு ஜாதியினரைப் பற்றி ஆராய்ச்சி செய்தார். சமூக அந்தஸ்தில் இவ்விரு சாதியினரும் சர்வ சமமாக மதிக்கப்பட்ட போதிலும் முதலியார்களே முன்னிலை வகித்து வாழ்ந்து வந்தனர் என்பதை பல வரலாற்றுச் சான்றுகள் உதாரணங்களாய் எடுத்துக் காட்டுகின்றன.

முதலி என்பது படைத் தலைவன் அந்தஸ்து பெற்ற குலமாகத் திகழ்ந்தது. போர்க் களத்தில் ஆதி செங்குந்தர்கள் சேனைத் தலைவர்களாக விளங்கியதால் முதலிகள் என்ற பட்டத்திற்கு உரியவர்கள் ஆயினர். இவர்கள் பேரரச மரபுப் பெண்களை மணக்கும் வீரமும் விவேகமும் பெற்று விளங்கினர். கொடும்பாளூர் கெட்டி முதலி சோழன் மகளை மணந்தான் என்ற வரலாற்றுச் செய்தி இதற்குச் சான்றாக விளங்குகிறது. மேலும் சேர, சோழ, பாண்டியர் கொடிகளை தங்கள் இலட்சினையில் கொண்டிருந்ததால், கெட்டி முதலிகள் இம்மூன்று மன்னர்களின் படைகளிலும் கோலோச்சினர் என்ற உண்மை விளங்குகிறது.

கெட்டி முதலிகளில் வேம்பங் கெட்டி, இளமன் கெட்டி, வணங்காமுடி கெட்டி ஆகியோர் தாரமங்கலப் பகுதியில் சீர்மிகு தளபதிகளாக விளங்கினர். மக்களின் வாழ்வாதாரத்தை உயர்த்துவதற்கு இவர்கள் ஆற்றிய பணிகள் ஏராளம். நாயக்கர் காலத்தில் இக்கெட்டி முதலிகள் மிகப் பிரபல்யமாகத் திகழ்ந்தனர். 1690இல் மைசூர் மன்னன் படையெடுப்பால் தமிழகம் சீர்குலைந்தது. கெட்டி முதலிகளும் பொலிவிழந்தனர்.

இத்தகைய வரலாற்றுக் கல்வெட்டுச் செய்திகள் நம் செங்குந்த குலமக்கள் வாழ்ந்த வீர வாழ்க்கையையும், ஈகை மிகுந்த வாழ்க்கையையும் நமக்கு எடுத்துரைக்கின்றன. இத்தகைய வீர வரலாற்றுக்குச் சொந்தக்காரர்களாகிய நாம் நம் குலத்துக்கு மேலும் பெருமைகள் சேர்ப்போம்.

### செங்குந்தர் தந்தவை

நிலைதந்தார் புவியினுக்கும் யாவருக்கும்
அபிமானம் நிலைக்கத் தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சீவனம்செய்
திடஎன்றேகையில் தந்தார்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தர்
என்கவிக்கு விலையாகத்
தலைதந்தார் எனக்கொட்டக் கூத்தன்
எனப் பெயரினையும் தாம்தந்தாரே.

\- ஒட்டக்கூத்தர்.



# செங்குந்தர் பிரபந்தத் திரட்டு

செங்குந்தர் பிரபந்தத்திரட்டு என்னும் இந்நூல் ஸ்ரீமத் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. பண்டைக் காலத்தில் வீரத்தின் விளை நிலமாய்த் திகழ்ந்த செங்குந்த மரபினரது அறிவாற்றல், பெருமை, புகழ், வீரம், முதலியவற்றைச் சிறப்பித்துப் புலவர் பலரால் பாடப்பட்ட செய்யுள் திரட்டாகும். செங்குந்தர் குல வரலாறுகளாக வழங்கும் நூல்கள் பல உள்ளன என்பதும், அம்மரபின் முன்னோரது சரித்திரங்களும் பல என்பதும் இவற்றால் அறியப்படும். குன்று தோறாடும் குமரனும் முருகக் கடவுளின் துணைவர்களான வீரவாகு முதலான நவ வீரர்களின் வழித்தோன்றலாகத் தங்களைப் பழங்காலம் முதற்கொண்டு வழங்கி வருவதையும், சோழ அரசர் காலத்தே அவ்வரசரது வெற்றிகளுக்குக் காரணகர்த்தர்களான படை வீரர்களாய் அவரது அன்பிற்கும் அபிமானத்திற்கும் பாத்திரர்களாய் இருந்தமையும் இந்நூல்களில் பார்க்கக் காணலாம்.

## 1. ஈட்டியெழுபது

செங்குந்தர் மரபைச் சிறப்பித்துப் பாட உடன்படாத ஒட்டக்கூத்தரைக் கொலை செய்ய அவ்வூர் செங்குந்தர் முயன்றனர். இதனையறிந்த கூத்தர் ஓராயிரத்தெண்மர் சிரங்களை அறுத்து ஒன்றாகக் குவித்து சிரச்சிங்காதனம் அமைப்பின் அதன்கண் இருந்து ஈட்டிப் படைப்பைக் குறித்து ஒரு பிரபந்தம் பாடுவேன் என்று கூறினார். அதனைக் கேட்ட செங்குந்த மரபினர் அனைவரும் ஒன்று திரண்டு சென்று புலவரின் விருப்பத்தின்படியே தங்கள் தலைகளை அரிந்து வைத்துச் சிரச சிங்காதனமிட்டுத் தம் வீரத்திறத்தைக் காட்டி நின்றனர். அப்போது அச்சிரச்சிங்காதனத்தில் வீற்றிருந்து புலவர் பெருமான் தம் மரபினரது வீரம். பெருமைகளை எல்லாம் ஈட்டியெழுபது என்ற நூலால் பாடினார்.

## 2.எழுப்பெழுபது

சோழவேந்தன் முன் தங்களின் வீரத்தின் திறம் துலங்கும்படி சிங்காதனமிட்ட செங்குந்த வீரர்களது வெட்டுண்ட தலைகள் உயிர்பெற்றெழுந்து ஒட்டிக் கொள்ளுமாறு கலைமகள் முதலிய கடவுளரை வாழ்த்திப் பாடப்பட்டதாகும். இந்நூலைப் பாடியதும் அறுபட்ட தலைகள் உறையூரினின்றும் பறந்தோடி ஆங்காங்கே விழுந்துகிடந்த உடல்களோடு சேர்ந்து ஒட்டிக்கொண்டு உயிர் பெற்றன. இந்நூலை ஒவ்வொரு செய்யுளிலும் குன்றுதோறாடும் குமரவடிவேலனின் வீறு செவ்வையாகக் கூறப்பட்டுள்ளது. எழுபது செய்யுள்கள் கொண்ட இந்நூல் தற்போது பதின்மூன்று செய்யுள்களே கிடைக்கப் பெற்றுள்ளன. சிறப்புமிகு இந்நூலை இயற்றியவர் ஒட்டக்கூத்தராவர்.

## 3. களிப்பொருபது

இது சிரச்சிங்காதனமிட்ட செங்குந்த வீரர்களின் பெருமையையும், அவ்வீரர்களின் அறுபட்ட தலைகளை ஒட்டிப்பாடிய ஒட்டக்கூத்தரது தெய்வீக சக்தியையும் சிறப்பித்து அசரீரி, ஔவையார் முதலியோர் பாடியனவாம். இதில் கம்பர், புகழேந்தி அம்பிகாபதி, சேரன், சோழன், பாண்டியன், அஞ்சனாட்சி, சைவாசாரியார் பெயர்களும் காணப்படுகின்றன. இந்நூல் பத்து செய்யுள்களை யுடையது. தொகுத்தவர் குலோத்துங்கன் என்பர்.

## 4. திருக்கை வழக்கம்

இந்நூல் செங்குந்தமரபினருள்ளே மேம்பட்டவர்களது கைவன்மைகளை சிறப்பித்துப் பாடப்பட்டதாகும். இது கலிவெண்பாவால் அமைந்த பிரபந்தமாகும். இது கம்பர் பாடிய திருக்கை வழக்கம் போன்றது. இது செங்குந்தரைப் பற்றியதாய் ஒவ்வொரு கண்ணியும் கை என்ற சொல்லால் முடிவுறுவது. இது புகழேந்தி புலவரால் பாடப்பட்டது.

## 5. பிள்ளைத்தமிழ்

இந்நூல் செங்குந்த வீரர்களது பிள்ளைப் பருவங்களைச் சிறப்பித்துப் பாடியது. வீரம், நியாயம், தியாகம் முதலிய சிறப்புக்களைப் பலப்படப் பாராட்டுவது. ஆண்பாற் பிள்ளைக் கவியாக பத்துப் பருவங்களை உடையது வீரபாகு தேவர் முதலிய ஒன்பதின்மர், முருகக்கடவுள் ஆகிய இவர்கள் மரபில் வந்தவர் செங்குந்தர் என்னும் செய்தியைத் தெரிவிக்கின்றது. இதனை, 'மயில் வாகனத்தோன் துணையார் வந்தோர் தாலோ தாலேலோ' என்னும் அடியால் அறியலாம். "சங்குந்து" வயல்மேல் செங்குந்த வளநாடர் சப்பாணி கொட்டியருளே"





எனக் கூறப்படுவதால் செங்குந்த நாடு என்று ஒரு நாடு இருந்தது என்பதும், செங்குந்தர் அந்நாட்டிற்குரிய சிற்றரசராயிருந்தனர் என்பதும் விளங்குகிறது. இந்நூலை இயற்றிய ஆசிரியர் ஞானப்பிரகாச முனிவர் ஆவார்.

### 6. கலித்துறை மாலை

(கலித்துறையந்தாதி) இந்நூலில் செங்குந்த மரபினர் சிறப்புகளும் வீரதீரர்களும் சொல்லப்படுகின்றன. ஈட்டியெழுபது முதலிய நூல்களை இம்மரபினர் பெற்ற வரலாறுகளில் கூறப்படுகின்றன. "தப்பில் புராணம் பரணி உலா பிள்ளைத்தண்டமிழ் முன்-செப்பும் பிரபந்தம் எண்ணில் பெற்றவர் செங்குந்தரே" என்னும் செய்யுளடிகள் இதனை விளக்கும். இதன் ஆசிரியர் நாகை முத்துக்குமார தேசிகர் ஆவார்.

### 7.தசாங்கம்

இது செங்குந்தர் மரபினர்க்குரிய தசாங்களைக் கூறும். இதில் மலை, ஆறு, நாடு, நகர், மலை, குதிரை, யானை, முரசு, கொடி, செங்கோல் ஆகிய பத்தும் கூறப்படும் இவற்றில் செங்கோல் ஒழிய மற்றைய ஒன்பதும் இவ்விரண்டாகக் கூறப்படும் சிறப்பான உடையது. விண்ணரசுக்கு ஒன்றும், மண்ணரசுக்கு ஒன்றுமாகப் பாடப்பெறும் இதனைச் "செப்பு தசாங்கம் இருவகைப் பெற்றவர் செங்குந்தரே" என்ற செய்யுள் விளக்கும். ஒவ்வொரு பாட்டும் ஒவ்வொரு பறவையை முன்னிலைப்படுத்திக் கூறும் சிறப்பினை உடையது. இதனை இயற்றியவர் ஸ்ரீ சத்யந்தர் என்பராவர்.

### 8. ஊசல்

இது செங்குந்த குலத்தவரைப் பெரும்பாலும் மன்னராகக் கொண்டு பாடப்பட்ட செய்திகளை விளக்குகிறது. செங்குந்தர் உமா தேவியில் புத்திரர் என்றும் சோழ மண்டல முதலிகள் என்றும் கூறப்படுகிறது. இக்குலத்து வீரர்களைப் பற்றிப் பாடப்பட்ட ஊசல், வாழ்த்து நூலில் எச்சரிக்கை, பெரியகட்டியம், சின்னகட்டியம், மங்கலம் என்ற செய்திகள் அடங்கப் பாடப்பட்ட செய்யுள் தொகுதியாகும்.

இந்நூல்களேயன்றித் "திருவொற்றியூர் செங்குந்த விநாயகர் மாலை" "செங்குந்த சிவாக்கியர் மாலை செங்குந்தர் வேற்பதிப்பகம்" "செங்குந்தர் மரபு விளக்கம்" "சேனைத் தலைவர் மரபு விளக்கச் சூறாவளி" "செங்குந்த வேலவர் திருக்கை வழக்கத்தந்தாதி" "செங்குந்த குலமாட்சி" என்னும் பிரபந்தங்களும் செங்குந்தர் பிரபந்தத்திரட்டில் அடங்கியுள்ளன. இவைகள் முன்னர்க்கூறிய நூல்களில் உள்ள செங்குந்த மரபினரைப் பற்றிய செய்திகளை விரித்தும் தொகுத்தும் கூறுகின்றன.




உருக்கொடு பணியாதாரை உளத்தில் ஐந்
தெழுத்தை எண்ணிப்
பெருக்கோடு தவளநீற்றைப் பேணியே
அணியா தாரைத்
தருக்கொடு நின்றுகண்ணீர் ததும்பமுன்
ஆடா தாரைத்
திருக்கோயில் வலம்வராரைச் சினத்தொடு
பொரும்செங் குந்தம்.

ஊவிளை இதழிதும்பை கொண்டருச்
சித்த பேர்க்கும்
மூவர்தம் பாடல்ஓதி முன்னின்று
பணிந்து பேர்க்கும்
ஆவலோ டைந்தெழுத்தை அகத்துளே
நினைந்த பேர்க்கும்
தேவர்நா டாளவைக்கும் திருக்கைவேல்
துணைச்செங் குந்தம்.

ஈட்டியெழுபது, ஒட்டக்கூத்தர்.





# செங்குந்தர்களின் தோற்றமும் வளர்ச்சியும்



கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த குடிமக்கள் தமிழ்மக்கள் என்பது ஆன்றோர் வாக்கு. வரலாற்றின் பக்கங்களை ஆய்வு செய்யும் போது நம்செங்குந்த இனத்தை பற்றிய செய்திகள் நம்மை அதிசயத்தில் ஆழ்த்துகின்றன. ஏறக்குறைய 10ம் நூற்றாண்டில் இருந்து செங்குந்தர்களின் தோற்றமும் வளர்ச்சியும் நிகழ்ந்துள்ளன என்று அறிகிறோம்.

அங்கிங்கு என்னாதபடி செங்குந்தர்கள் உலகெங்கிலும் வியாபித்து வாழ்ந்து வந்துள்ளனர். குறிப்பாக தென்னிந்தியாவின் அனைத்து மாவட்டங்களிலும் நம் இன மக்கள் பாரம்பரியமாய் வாழ்ந்து வருகின்றனர். செங்குந்தர்களின் குலத் தொழில் நெசவு. கைத் தொழிலாகிய நெசவுத் தொழில் செய்து நம்மவர்கள் ஜீவனம் செய்து வந்ததால் கைக்கோளர்கள் என்ற பெயர் பெற்றனர்.

ஆன்மீகத்தில் ஆழங்கால் பதித்து ஒழுக்க நெறி நின்று செங்குந்தர்கள் வாழ்ந்தனர். செங்குந்தர்களின் குலக் கடவுளாக சுப்ரமணியக் கடவுள் விளங்குகிறார். போர்க் கடவுளாகிய முருகப் பெருமான் அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டும் பொருட்டு சூரபத்மனை எதிர்த்துப் போரிட்டு சூரசம்ஹாரம் செய்தான் என்பதை புராண ரீதியாக அறிகிறோம். முருகப் பெருமானின் படைவீரர்களாய் நவ வீரர்கள் என்ற பெயரில் செங்குந்தர்கள் விளங்கினர். சொல் வழக்கில் "நவ வீரர் கால்வழி வந்த செங்குந்தர்கள்" என்ற வாக்கு இன்றளவும் புகழ்பெற்று விளங்கி வருகிறது.




**M.செந்தில்நாதன்,**
செயற்குழு உறுப்பினர்,
தாரமங்கலம், சேலம்.


அன்புடைமையும் அடக்கமுடைமையும் செங்குந்தர்களின் உளனோடும் உயிரோடும் கலந்து விளங்குகின்றன.

"அடக்கம் அமரருள் உய்க்கும் - அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்"

என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாக்கிக்கேற்ப செங்குந்தர்கள் பணிவையும் இன்சொல்லையும் அணிகலனாய்க் கொண்டு திகழ்ந்தனர். மற்றவர்களை ஏவி மகிழ்வதும், இகழ்ந்து சிரிப்பதும் இவர்களுக்கு என்றும் ஏற்புடைத்தன்று.

செய்யும் தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்க்கின் நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை என்ற வாக்கிற்கிணங்க செங்குந்தர்கள் நெசவுத் தொழில் சுகஜீவனம் கொண்டு வாழ்ந்தனர். தாங்கள் உற்பத்தி செய்த ஜவுளி ரகங்களை சந்தைப் படுத்தும் அவசியமும் இருந்ததால் வணிகமும் வியாபாரமும் இவர்களுக்கு துணைத் தொழிலாக வந்தமைந்தன.

ஆதி காலத்தில் ஜவுளி ரகங்களை மூட்டை கட்டி ஊர் ஊராகவும் சந்தை சந்தையாகவும் சென்று வியாபாரம் செய்தனர். வேறு சிலர் மாட்டு வண்டிகளில் இவைகளை ஏற்றிச் சென்று வியாபாரம் செய்தனர். வசதி வாய்ப்புள்ள செங்குந்தர் சிலர் ஜவுளிக் கிடங்குகளை ஏற்படுத்தி, அவைகளின் பாதுகாப்பிற்கு காவல் வீரர்களை அமர்த்தி ஆளுமை மிக்க வாழ்வை வாழ்ந்தனர்.

சில செங்குந்தர்கள் பெரும் தொழில் முனைவர்களாகவும் இருந்து வாழ்ந்து வந்தனர். பெருமளவில் பஞ்சு முதலீடு செய்து, அவற்றை இயந்திரங்கள் வாயிலாக நூலிழைகள் ஆக்கி, நூல் உற்பத்தி செய்தனர். அக்காலத்திலேயே நூல்





பேல்களையும், ஆடை ரகங்களையும் சீனா, ஜப்பான், கிரீஸ், ரோம் ஆகிய வெளிநாடுகளுக்கும் கப்பல் மூலமாக அனுப்பி பெரு வாணிகம் செய்தனர் என்று வரலாறு பகருகிறது.

வண்ண வண்ண ஆடைகளையும் வகை வகையான ஜவுளி ரகங்களையும் உற்பத்தி செய்து சந்தைப்படுத்தி இத்துறையில் நம் செங்குந்தர்கள் புகழ்பெற்றவர்களாக விளங்கினர். கட்டிநூல் சேலை வேட்டிகளுக்கு சேலம் அம்மாப்பேட்டையும் சென்னி மலை போர்வைகளுக்கும், மதுரை மாநகரங்கள் சேலைகளுக்கும், பவானி கம்பளங்களுக்கும், வடஆற்காடு செங்கல்பட்டு லுங்கிகளுக்கும், சென்னை மாநகரம் கைக்குட்டைகளுக்கும் பரம்பரை பரம்பரையாய் ஜாதி அடிப்படையில் தான் இயங்கி வந்து கொண்டுள்ளது.

ஆன்மீக வழியில் அறவாழ்வு வாழ்ந்த செங்குந்தர்களில் ஒரு பகுதியினர் சைவ நெறியைப் பின்பற்றி, பிராமணர்களுக்கு சமமாக வாழ்ந்தனர். செங்குந்தரில் சைவ செங்குந்தர் என்ற ஒரு பிரிவே இன்றளவும் வழக்கத்தில் இருந்து வருவதை நாம் நன்கறிவோம். "தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்ற சில தத்துவத்தைப் பின்பற்றி பெருவாழ்வு வாழ்ந்தனர். ஆதிகாலத்திலேயே செங்குந்தர்கள் சேலம் அம்மாப்பேட்டை அருகில் மலைமீது சிவஸ்தலம் அமைத்து பிராமணர்களைக் கொண்டு திருமறைகள் ஓதி வழிபட்டு வந்தனர் என்பது வரலாற்றுச் செய்தியாகும்.

செங்குந்தர்களில் காளி, மாகாளி முதலான சிறுதெய்வங்களை வழிபடும் வழக்கம் பெரும்பாலோருக்கு இருந்து வருகிறது. இச்சிறு தெய்வங்களை உயிர்ப் பலியிட்டு வணங்குவது இவர்களுக்கு வாடிக்கை ஆனது. இதன் காரணமாய் இச்செங்குந்தர்கள் அசைவ உணவுக்காரர்கள் ஆயினர்.

பொதுவாக சமுதாயத்தில் வாழும் பல்வேறு இனத்தைச் சார்ந்தவர்களையும் வகைப்படுத்தும் போது, 72 நாட்டவர்கள் உள்ளனர் என்று வகைப்படுத்தினர். இந்த 72 நாட்டவர்க்குள் நம் செங்குந்த குலமும் சார்ந்ததாகும்.

செங்குந்தர் குலத்திலும் அவர்களுடைய வாழ்க்கை முறைப்படியும்,சமுதாயப் பழக்க வழக்கங்களை ஒட்டியும் பல்வேறு பிரிவுகள் உள்ளன என்பதை அறிகிறோம். நகர்ப்புறச் செங்குந்தர்களை மேநாட்டுச் செங்குந்தர் என்றும், கிராமப்புறச் செங்குந்தர்களை கீழ்நாட்டுச் செங்குந்தர் என்றும் அழைக்கலாயினர்.

பாவடிகளில் பாவு தோய்ந்து கைத்தறியில் நெசவு செய்த செங்குந்தர்களை பாவடி நாட்டுச் செங்குந்தர் என்று அழைத்தனர்.

செங்குந்தர்களுக்கு இடக்கை செங்குந்தர் என்ற பெயர் வழக்கமும் உண்டு. செங்குந்தர்கள் 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற வேத வாக்கிற்கிணங்க உள்ளதை வைத்து உளப்பூர்வமாக வாழும் உன்னதமானவர்கள். இவர்கள் பரிபூரணமாகவும், சுதந்திர உணர்வுடன் வாழும் இயல்புடையவர்கள்.

தென் மாவட்டங்களான சேலம், ஈரோடு மாவட்டங்களில் பெரிய தாலி கட்டிசெங்குந்தர், சிறிய தாலி கட்டி செங்குந்தர் என்ற இரு வகையினரைக் காணலாம். தாலியின் பருமனை வைத்து இவ்வினப் பாகுபாடு உணரப்பட்டது. பெரிய தாலி கட்டிப் பிரிவினர் சமூக பழக்க வழக்கங்களில் சுதந்திரம் காட்டினர். உதாரணமாக இவர்கள் மறுமணத்தையும், விதவைகள் மணத்தையும் பெரிதும் ஆதரித்தனர். மேலும் இப்பிரிவுச் செங்குந்த விதவைகள் வெள்ளைச் சேலை கட்டிக் கொள்ளாத வழக்கமாக கொண்டிருந்தனர்.

சின்னத் தாலி கட்டி செங்குந்தர்கள் பழமைவாதிகளாகவும், பாரம்பரிய கலாச்சாரத்தைப் பின்பற்றுபவர்களாகவும் திகழ்ந்தனர். இவர்கள் மறுமணத்தை ஏற்க மறுத்தனர். மேலும் இக்குல விதவைகள் கலர் சேலை கட்டிக் கொள்ளும் வழக்கத்தையே பின்பற்றி வந்தனர்.

கொங்கு தேசத்தில் கைக்கோளர்கள் என்ற ஒரு பிரிவும் உண்டு. இப்பெயருக்குரிய வரலாறும் மிகவும் சுவாரசியமானதாகிறது. ஒட்டக்கூத்தர் தன் பாட்டிற்கு விலையாக 1008 தலைகளைப் பரிசாக மன்னனிடம் வேண்டியதாகவும், கைக்கோளர்கள் தங்கள் தலைகளை தியாகம் செய்ததாகவும் வரலாற்று செய்தி காணப்படுகிறது.

மூலக்கார செங்குந்தர்கள் கம்பளம் நெய்பவர்கள். இத்தொழில் மூலம் அவர்கள் பெரும் பொருள் ஈட்டினர். சமுதாயத்தில் மேல் தட்டு மக்களாய் இவர்கள் வாழ்ந்து வந்தனர். இப்பிரிவைச் சார்ந்த மக்கள், பெண்களில் சிலரை கோவில்களில் தெய்வப் பணி செய்ய நியமித்தனர். இப்பெண்கள் திருமண வாழ்வை ஒறுத்து சன்னியாச வாழ்க்கை வாழ்ந்தனர்.



பிரிட்டிஷ் அரசாட்சியின் கீழ் இந்திய சமுதாயம் இயங்கி வந்த இக்கட்டான காலகட்டத்தில் நம் செங்குந்தர்களில் படிப்பறிவுள்ள மக்களும், அரசியலில் செல்வாக்குக் கொண்ட வேறு பலரும் சேர்ந்து நம் குலத்தின் வலிமையை அரசுக்கு உணர்த்த 1927ஆம் ஆண்டில் முதன்முதலாக செங்குந்த மகாஜன சங்கம் என்ற பேரியக்கத்தைத் தோற்றுவித்தனர்.

இச்சங்கம் செங்குந்தர்களிடையே நிலவி வந்த பல்வேறு இனப் பாகுபாட்டைக் களைய வித்திட்டது: "எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓரினம்" என்ற பொதுவுடைமைக் கொள்கைக்கு இச்சங்கம் வித்திட்டது. அதன் பயனாக ஜாதிப் பிரிவுகளை மறந்து பல்வேறு திருமணங்கள் நடைபெற்றன.

1940ம் ஆண்டில் சென்னை மாகாணத்தில் நெசவாளர்கள் அனைவரும் ஒன்று கூடி "கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவு இயக்கம்" என்ற அமைப்பைத் தோற்றுவித்தனர்.

இவ்வியக்கத்தின் வாயிலாக நெசவாளர்கள் தங்கள் வலிமையை அரசுக்கு உணர்த்தி பல சலுகைகளையும், உதவிகளையும் அரசிடம் இருந்து பெற்று வந்தனர். இச்சங்கங்கள் வாயிலாக நம் செங்குந்தர்கள் அரசியல் பதவிகளைப் பெற்று செல்வாக்கு மிக்கவர்களாய்த் திகழ்ந்தனர். பொருளாதார ரீதியாகவும், சமூக ரீதியாகவும் தங்களை முன்னெடுத்துச் சென்று கல்வியறிவிலும், தொழில்துறையிலும் சிறந்து விளங்கிட இளைஞர்களுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிப்பதில் இச்சங்கங்கள் சிறந்து விளங்கின.

குன்று தோராடும் குமரக் கடவுளின் மெய்க் காப்பாளர்கள் என்ற பட்டத்திற்குரிய செங்குந்தர்கள் அவனுடைய திருவருளால் நாளும் நாளும் ஆல்போல் தளைத்து அருகு போல் வேரூன்றி வானளாவ வளர்ந்தும் வாழ்ந்தும் வருகிறார்கள்.

இன்றைக்கு செங்குந்தர்கள் அனைத்துத் துறைகளிலும் கால்பதித்து அரும்பணியாற்றி வருகின்றார். அதன் காரணமாகத்தான் செங்குந்தர்களை மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்புப் பட்டியலில் இணையுங்கள் என்ற செங்குந்தர்களின் நீண்ட நெடிய காலக் கோரிக்கை அரசாங்கங்களின் பரிசீலனைக்கும், நடவடிக்கைக்கும் உட்படாமலேயே இருந்து வருகிறது.

**ஆதாரம் : கேம்ப்ரிட்ஜ் யுனிவர்சிட்டி பிரஸ் வெளியீடு, லண்டன்.**



# ஆடையிற் சிறந்தது

ஆடையிற் சிறந்தது கைத்தறி ஆடை – மக்கள்
அனைவர்க்கும் நல்லதைந்தத் தேனோடை
ஓடையில் தேனை அள்ளி உண்ணவாரீர் – அள்ளி
உண்டுகைத் தறிக்குதவி பண்ணவாரீர்

சேலையிற் சிறந்தது கைத் தறிச்சேலை – அது
தேவைக் குரியவண்ண மலர்ச்சோலை – குளிர்
சோலை வண்ணமலர்கள் வாங்கவாரீர் – நம்
தூயகைத் தறித்தொழிலைத் தாங்கவாரீர்

வேட்டியிற் சிறந்ததுகைத் தறிவேட்டி – கலை
வெற்றிக்கெல் லாம் அதுவே வழிகாட்டி – புகழ்
காட்டும் கலைக்கு நலம் காட்டவாரீர் – நம்
கைத்தறித் தொழிலை நிலை நாட்டவாரீர்

எந்நாட்டிலும் தென்னாட்டுக் கைத்தறித்தொழில் – திசை
எட்டும் பரப்பியது தன்பேரெழில் – நம்
தென்னாட்டுக் கைத்தறித் தொழில் ஓங்க – ஓங்கச்
செல்வநிலை யுங்கலையும் தழைத்தோங்கும்

**– பாவேந்தர் பாரதிதாசன்**

# காஞ்சிப்புராணமும், செங்குந்த மரபினரும்

- வீ.திருஞானசம்பந்த முதலியார், காஞ்சிபுரம்

காஞ்சிபுரம் சீரும் சிறப்பும் வாய்ந்த "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என ஔவைப்பிராட்டியார் புகழ்ந்த அற்புதத் தொண்டை நாட்டின் தலைநகராக விளங்குவது தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சித் திருநகரமாகும். இந்நகரத்தின் தெய்வீகத் தொன்மை உண்மை வரலாறுகளை விளக்கமாக எடுத்துக்கூறும் நூல் காஞ்சிப் புராணமாகும். காஞ்சி + புராணம் = காஞ்சியைப் பற்றிய பழைய வரலாறு கூறும் நூல் என்பது இதன் பொருள். காஞ்சி - ஒருவகை மரம்.

ஒரு காலத்தில் காஞ்சி வனமாக இருந்த நிலத்தைத் திருத்தி நகரமாக்கிப் பல்வேறு இடங்களிலிருந்தும் மக்களைக் கொண்டுவந்து குடியேற்றிப் பெருநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவன் கருணாகரத் தொண்டைமான். ஆதலின் இந்நாடு தொண்டைமான் நாடு தொண்டை நாடெனப் பெயர் பெற்றது என்பர். சோழர்கள் ஆட்சிக் காலத்தில், தொண்டை நாடும், நடு நாடும் கிளை நாடுகளாக இருந்திருக்கின்றன. அதற்கான அடையாளங்கள் ஊர் பெயர்களும், கோயில்களும் இன்றும் விளங்குகின்றன. ஆகவே சோழ நாட்டிற்கும், தொண்டை நாட்டிற்கும் தொடர்பிருந்திருக்கிறது.

சைவ சமயத்தவர்கள், முப்பொருள்கள் போலவும், சிவபிரானின் முக்கண்கள் போலவும், எண்ணி மகிழத்தக்க சிவபுராணங்கள் கந்தபுராணமும், திருவிளையாடற் புராணமும், பெரிய புராணமும் ஆகும். இம் மூன்று புராணங்களிலும் கூறப்பட்டுள்ள உண்மை வரலாறுகளின் சாரமே காஞ்சிப் புராணமாகும்.

இக்காஞ்சிப் புராணத்தின் முதற்காண்டம் திருவாவடுதுறை ஆதீனம் மாதவச் சிவஞான சுவாமிகள் இயற்றியது. இவர்கட்டளைப்படி இவரது முதன் மாணவர் கச்சியப்ப முனிவர் இரண்டாங்கண்டம் இயற்றினார்.

இக்காண்டத்தில் காஞ்சியைச் சேர்ந்த சிவ தலங்கள் 16,000 என்று காணப்பெறுகின்றன. இவைகளில் நாளாவட்டத்தில் பல கோயில்கள் இருந்த இடமே தெரியாமல் மறைந்து இப்போது ஏறத்தாழ 270 கோயில்கள் இருக்கின்றன. இவைகளையே முதற்காண்டத்தில் மாதவச் சிவஞான சுவாமிகள் விளக்கமாகப் பலபடலங்களில் கூறியிருக்கிறார்கள். காஞ்சிப் புராணத்தில் காணப்படும் சிவதலங்கள் கீழ்க்கூறப்படும் எல்லைகளுக்கு உட்பட்டனவேயாகும்.

கிழக்கெல்லை பழைய சிவபுரம் சிவபுர நாடாகவுள்ளது. இந்நகரில் பெரும்பாகம் செங்குந்தர்கள் சிறப்புடன் வாழ்கின்றார்கள். இங்கு ஒரு சிறு குன்று இருக்கிறது. அதன்மேல் பழைய சிவாலயம் ஒன்று சோழர்களால் கட்டப்பட்டுள்ளது. இதனாலேயே இவ்வூருக்குப் பழைய சிவபுரம் என்ற பெயர் அமைந்துள்ளது.

தெற்கெல்லை சேயாற்றின் வடகரையிலுள்ள திருவோத்தூராகும். இங்கும் பெரும்பாகம் செங்குந்தர்கள் நிலக்கிழார்களாகவும், வியாபாரிகளாகவும் ஏராளமாக வாழ்கின்றார்கள். இங்கு திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரால் தேவாரப்பதிகம் பெற்ற சிவதலம். செங்குந்த மரபினர்கள் அறங்காவலர்களாக இருந்து பரிபாலனம் செய்யப்பெறுகின்றது.

மேற்கெல்லை தாமல் திருப்புக்குழியாகும் இங்கும் செங்குந்த மரபினர்கள் வளமாக வாழ்கிறார்கள்.

வடவெல்லை பழைய பாலாற்றின் கரையிலுள்ள திருமாற்பேறு ஆகும். இங்கும் செங்குந்த மரபினர்களாலேயே பரிபாலனம் செய்யப் பெறுகின்றது. இந்த நான்கு எல்லைகளுக்கு உட்பட்ட சிவாலயங்கள் முதற்காண்டத்தில் 67 படலங்களால் விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளன.

இத் திருக்கோயில்களில் தேவாரம் பெற்ற சிவதலங்கள் ஐந்து அவை: 1. திருக்கச்சியேகம்பம், 2. திருக்கச்சிநெறிக்காரைக்காடு, 3. திருக்கச்சி மேற்றளி, 4. திருக்கச்சியனேகதங்காவதம், 5. திருக்கச்சி ஓணகாந்தன்றளி என்பனவாகும். ஏனையவை புராணத் தலங்கள்.

இவற்றுள் காஞ்சிப் புராணப்படி முக்கியமான தலங்கள் மூன்று. அவை :

**1. திருக்கச்சி ஏகாம்பரநாதர் கோயில் :**

இதற்கு 12 தேவாரத் திருப்பதிகங்கள் இருக்கின்றன. பன்னிரு திருமுறைகளிலும் போற்றப்



பெறுவதும் இதுவேயாகும். இங்குக் காமாட்சியம்மையார் கம்பா நதியில் மணலை இலிங்கமாக வைத்துப் பூசித்தார். அதுவே பிருதிவி இலிங்கமாக மூலத்தானத்தில் எழுந்தருளியிருப்பது. இதுவே அகில லோகத்துக்கும் பிருதிவித்தலம். தீண்டாத் திருமேனி.

**2. திருக்கச்சபேசம் :**

இது திருமால் ஆமை வடிவங்கொண்ட காலத்தில் பூசித்துப் பேறுபெற்றது. கச்சபம்-ஆமை. சரசுவதியும் இங்குப் பூசித்திருக்கிறார். இதைச் செங்குந்த மரபினர்கள் 5 பேர் அறங்காவலராக இருந்து பரிபாலனம் செய்கிறார்கள்.

**3. திருக்காயாரோகணம் :**

இது வேகதியாற்றின் வடகரையிலிருக்கிறது. இங்கும் செங்குந்த மரபினர்கள் அறங்காவலர்களாக 3 பேர் இருந்து வருகிறார்கள். இது மண்டபத் தெருவாரைச் சேர்ந்த தேவஸ்தானம்.

காஞ்சிப் புராண ஆசிரியரான தமிழ்ச் சிவஞானமா பாடியத் தலைவர் மாதவச் சிவஞான சுவாமிகளாவார். மேலும் இவர் பிள்ளைத்தமிழ் நூல்கள், யமக அந்தாதி திரிபந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, முதலிய பிரபந்த நூல்களும், தருக்கம், இலக்கணம், உரைநடை, பிற மதக் கண்டன உரைநடை நூல்களும் இயற்றியிருக்கிறார்.

சிவஞான சுவாமிகள் 12 மாணவர்களுக்கு இலக்கண இலக்கிய ஞானநூல்களைப் போதித்துத் திருவாவடுதுறைக் கிளை மடாலத்தில் எழுந்தருளி இருந்திருக்கிறார்கள். பன்னிரு மாணவர்கள் :

**1. திருத்தணிகை கச்சியப்ப முனிவர்.**

இவர் சுவாமிகளுக்கு முதன் மாணவர். இவர் விநாயக புராணம், தணிகைப் புராணம், பேரூர்ப் புராணம், திருவானைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம் முதலியவற்றை இயற்றியவர். இவரே கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது, அந்தாதிகள், பதிகங்கள் இயற்றியிருக்கிறார்.

**2. தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர்.** கலைசைச்சிலேடை வெண்பா ஆசிரியர்.

**3. திருப்பாதிரிப்புலியூர் நிரம்ப வழகிய தேசிகர்.**

**4. காஞ்சிச் சரவணப்பத்தர்.** இவர் மத்தூர் சாமிநாத முதலியாரின் மூன்றாவது பாட்டனார். ஞானநூல்கள் செய்தவர். செங்குந்தர்.

**5. இராமநாதபுரம் சோமசுந்தர முதலியார்.**

**6. காஞ்சிச் சிதம்பரநாத முனிவர், செங்குந்தர்.**

**7. திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார்.**

**8. காவாந்தண்டலம் அடைக்கலங்காத்த முதலியார்.**

**9. காஞ்சி முத்துக்குமார தேசிகர், செங்குந்தர்.**

**10. இலக்கணம் சிதம்பரநாத முதலியார்.**

**11. அட்டாவதானம் சபாபதி முதலியார், சென்னை .**

**12. சிவபூஜை சபாபதி முதலியார், காஞ்சிபுரம்.**

ஆளுடைய பிள்ளையார்பாளையத்தில் சாலை வீதியில் மணியப்ப முதலியார் என்று ஒருவர் பிரபலமாக வாழ்ந்திருந்தார். நல்ல தனவந்தர். இவர் மாதவச் சிவஞான சுவாமிகளை எல்லா வகையிலும் பேராதரவு கொடுத்துப் பெரிதும் போற்றி ஆதரித்தவர். சுவாமிகளுக்குத் தனியே ஏடு திருக்குளம் எடுத்து அதில் குளிக்கும்படி ஏற்பாடு செய்திருந்தார். இதில் வேறு யாரும் குளித்தல் செய்யாதபடி காவல் புரிந்திருந்தார். மேலும் சுவாமிகளின் சிவபூசை செய்வதற்கு ஒரு தனி மண்டபமும், நிட்டை கூடுவதற்குக் அறைகளும் கட்டிக் கொடுத்தார். அவைகள் இன்றும் மணியப்பன் குளம், மணியப்பன் மண்டபம் என்று வழங்கி வருகின்றன.

இவற்றின் கிழக்கே கூப்பிடு தூரத்தில் சுவாமிகளுக்குத் தொண்டு செய்து கொண்டிருந்தார். அவர் பெயர் பூப்பிள்ளை என்பது. இவருக்குச் சுவாமிகள் ஒரு கட்டளையிட்டிருந்தார்கள். அது, செங்குந்தர் மரபினர்கள் வாழும் தெருக்களில் மட்டும் தினமும் ஒவ்வொரு தெருவாகப்போய் ஏழு செங்குந்தர்கள் வீடுகளில் மட்டும் ஏழு பிடி அரிசியை வாங்கிவந்து அதனைத் தனிப்பாத்திரத்தில் இட்டு அமுது சமைத்துச் சிவபூசை நிவேதனத்துக்குக் கொண்டுவந்து படைக்க வேண்டுமென்பதாகும்.





அக்கட்டளையின்படியே தினமும் தவறாது செய்து வந்தார்.

ஒரு நாள் ஒரு தெருவில் முதல் வீடாகப் பார்த்துத் தவசிப்பிள்ளை சென்ற போது அவ்வீட்டம்மையார் "சுவாமிக்கு இன்று நமது அமுது படியாகவே இருக்க வேண்டும், வேறிடங்களில் வாங்காதீர்கள்" என்று சொல்லிப்பாத்திரம் நிரம்ப அரிசியைக் கொண்டு வந்து கொடுத்து நிரப்பி விட்டார்கள். மறுக்க முடியாத நிலையில் தவசிப்பிள்ளை அப்படியே கொண்டுவந்து திருவமுதமைத்து அதை நிவேதித்து அதனைச் சுவாமிகள் உணவு கொள்ளச் செய்தனர்.

பின் மாலையில் அநுட்டானம் முடித்துத் தியான நிட்டை கூடுவது சுவாமிகள் வழக்கம். அன்று சுவாமிகளுக்கு நிட்டை கூடவில்லை. சுவாமிகள் தவசிப்பிள்ளையை அழைத்து "இன்று ஏழு வீட்டுப் பிடியரிசியில் ஏதேனும் மாறுதலுண்டோ " எனக் கேட்டார்கள்.

உடனே தவசிப்பிள்ளை நடந்ததைச் சொன்னார். அன்று முதல் சுவாமிகள் கட்டாய உத்திரவாக தவசிப்பிள்ளைக்கு "அப்படிச் செய்யாதே" என்று கட்டளையிட்டருளினார்கள். தவசிப்பிள்ளையும் அன்று முதல் கட்டளையை மீறாமல் நடந்து வந்தார்.

செங்குந்த மரபினர்களும் சிறப்பாக மணியப்ப முதலியாரும் கேட்டுக் கொண்டதால்தான் சுவாமிகள் காஞ்சிப் புராணம் பாடினார்கள். "மணியப்ப முதலியார் வேண்டுகோளின்படி காஞ்சிப் புராணம் பாடினேன்" என்று சுவாமிகள் ஒரு செய்யுளில் அவர் பெயரை அமைத்திருந்தார்கள்.

அதனை அறிந்த மணியப்ப முதலியார் இச்சிறியேனை இப்பெரிய காஞ்சிப் புராணத்தில் வைத்துப் பாடியது அடியேனுக்குத் தகாததாகும். எப்படியும் பெயரை எடுத்துவிட வேண்டுமென்று தாழ்மையுடன் வணங்கிக் கேட்டுக் கொண்டார். பின் சுவாமிகள் "நூல் செய்தற்குக் காரணம்" என்று தலைப்பு அமைந்த செய்யுளில் "மணியப்பன்" என்று வைத்துப் பாடிய அவரது பெயரை முழுவதும் எடுத்து விடுவது நன்றியறிதலுடையாகாதென்று கருதி.

**" பொருவில் கச்சியம் புராண வண்டமிழினிற் புகலென்று**
**இருநி லம்புகழ் மணிமதிற் கச்சியே கம்பர் திருவருட்**
**குரியான் றவர் கூறிய சிறப்பால் உரிமை யுற்றெழு**
**மாசையா லுரைத்திட லுற்றேன்."**

என்று மாற்றி மணி என்ற நினைவுச் சொல்லமையப் பாடினர். இதனால் மணியப்ப முதலியார் செங்குந்த மரபினருக்கு அழியாப் புகழையும், புண்ணியத்தையும் தேடிக் கொடுத்திருக்கிறார் என்பது புலனாகிறது.

மணியப்ப முதலியார் மடாலயம் ஒன்று கட்டிக் கொடுத்தார். அதுவே இன்றும் திருவாவடுதுறைக் கிளை மடாலயமாக இருந்து வருகிறது. இங்கு சிவஞான சுவாமிகள் இருந்தெழுதிய திண்ணை, மண்டபம் இவ்விரண்டும் பாஷியத்திண்ணை பாஷிய மண்டபம் என்ற பெயரால் அழைக்கப் பெறுகின்றன.

காஞ்சிப் புராணம் செய்து முடித்த சுவாமிகள் திருவேகநாதர் சந்நிதியில் அரங்கேற்றம் செய்ய நினைத்து மணியப்ப முதலியாரை அழைத்துக் காஞ்சிப் புராணம் அரங்கேற்றம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யப் பணித்தார்கள். மணியப்ப முதலியார் ஏற்ற ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கி ஆயிரங்கால் மண்டபத்தை அலங்கரித்து, வெளியூர் உள்ளூர்ப் புலவர் பெருமக்களையும் பொது மக்களையும் சேர அழைத்துச் சபையைக் கூட்டிச் சுவாமிகளிடம் தெரிவித்தனர். சிவஞான சுவாமிகள் அப்போது உடனிருந்த மாணவர்களுடனும் புலவர் திலகங்களுடனும் ஆயிரங்கால் மண்டபம் சென்று அமர்ந்தனர். காஞ்சிப் புராண அரங்கேற்ற விழா தொடங்கியது.

சிவஞான சுவாமிகள் பொது விநாயகர் தோத்திரப் பாடலையும், சிறப்பாகத் தலவிநாயகர் "விகடசக்கர ஆரணத் தொடர்வரும் வித்தக" என்று தொடங்கும் பாடலையும் சொல்லிப்பொருள் விளக்கம், யமக அடிகளின் யாப்பின் சிறப்பு, உரைவளம், கருத்துரை வகைகளை எடுத்துக் கூறினார்கள்.

இது அடுத்துச் சபாபதி தோத்திரப் பாடலாக அமைந்துள்ள "சங்கேந்தும் மலர்க்குடங்கைப் புத்தேளும் மறைக்கோவும் தழல்கால் சூலம்" என்ற தோத்திரப் பாடல்களில் முதற்பாடலை எடுத்தியம்பினார்கள். அவ்வரங்கேற்றப் பேரவையில் அமர்ந்திருந்த புலவரொருவர் எழுந்து நின்று, "முன்னெல்லாம் புராணம் பாடியவர்கள் முதலில் விநாயகரையும், தலத்துச் சிவபிரான், அம்மையார், முருகர், சபாபதி, சிவகாமியம்மையார், நால்வர் முதலியவர்களையல்லவா கடவுள் வாழ்த்து வரிசையில் அமைத்துப் பாடியிருக்கிறார்கள். தாங்கள் மட்டும் முதலில் சபாபதி தோத்திரம் அமைந்திருக்கிறீர்களே இதற்கு விடை தந்தருள வேண்டும். அதன்மேல் அரங்கேற்றத்துக்குச் செல்லலாம்" என்று சொல்லி அமர்ந்தனர்.





# காஞ்சிபுரம் பெருநாட்டில் அடங்கிய

# எழுபத்திரண்டு நாடுகள்

## முதலாவது கிழக்கே சிவபுரம் நாட்டின் – கிளை நாடுகள் 17

1. மேல்படப்பை, கீழ்ப்படப்பை, ஆத்தனஞ்சேரி
2. மானாம்பதி, செம்பாக்கம், அகரம், ஞணத்தொன்று
3. முன்னூர், பரமேச்சுர மங்கலம், மதுராந்தகம்
4. திண்டிவனம்
5. அக்கரைப்பத்து, மைலம்
6. திருவக்கரை, புதுச்சேரி, ஒழுகரை, கதிர்காமம்
7. திருபுவனம், நல்லாத்தூர்
8. திருவதிகை, பாலூர்
9. இடையாற்றூர், திருவெண்ணெய்நல்லூர்
10. பனமலை, அனந்தபுரம்
11. வழுதலைப்பட்டு
12. மாப்பறை, ஆரூர்
13. பட்டினம், கருங்குழி
14. மன்னார் கோயில்
15. பாளையம்
16. குப்பாக்கம், திருக்கண்டேச்சரம்
17. ஜம்பை , திருவரங்கம்

## 2–ஆவது தெற்கே தொந்திபுரம் நாட்டின் – கிளை நாடுகள் 17

1. முருமங்கலம்
2. திருவாமாத்தூர்
3. திருவண்ணாமலை
4. வரத்தூர், செங்குறிச்சி
5. கக்சித்திடல்
6. சேலம், விருத்தாசலம்
7. திட்டைக்குடி
8. திருமலைப்பாடி
9. திருக்கோவல்
10. திருநாகேச்சுரம், கும்பகோணம்
11. திருச்செம்பொன்பள்ளி
12. கோயில், சீர்காழி
13. மாப்பிளை குப்பம்
14. திரமருகல்
15. தேவூர், காட்டூர்
16. நல்லாச்சேரி, போலகம்
17. இராமேச்சுரம், குமரி

## 3வது மேற்கே விரிஞ்சிபுரம் நாட்டின் – கிளை நாடுகள் 17

1. ஆமூர், குடியேற்றம்
2. வாணியம்பாடி
3. கொறட்டை
4. தருமபுரி
3. பவானி
5. தாரமங்கலம்
7. எழுகரை நாடு
8. புகழூரை
9. பூரத்திரை
10. திருச்செங்கோடு
11. வையாபுரி, பழநி
12. அவிநாசி
13. நஞ்சுண்ட குடி
14. காவல்பாளையம்
15. கரூர், நத்தம்
16. கருகூர், காங்கேயம், சென்னிமலை
17. நாமக்கல்

## 4–வது வடக்கே சோழசிங்கபுரம் நாட்டின் – கிளை நாடுகள் 17

1. திருத்தணி
2. தெளிநாடு
3. நெறிநாடு
4. திருவடி நாடு
5. திருமேழிசை
6. கொந்தம்பாக்கம்
7. திருகாளத்தி
8. தொண்டை மா நாடு
9. வரை நாடு
10. வேங்கடகிரி
11. திருப்பதி
12. ஜெகந்நாதம்
13. சீட்டம்பள்ளி
14. செம்புரம்
15. வரதபுரி
16. சந்திர கிரி
17. காசி, கயா, அயோத்தி, இமய நாடு

**என திசை நாடுகள் நான்கும், கிளை நாடுகள் 68-ம் சேர்ந்து 72 நாடுகளாகும்.**





# செங்குந்தர் குலம் பற்றி விளக்கும் நூல்கள்

1. காங்கேயன் நாலாயிரக் கோவை
2. விக்கிரம சோழன் உலா
3. கலிங்கப் பரணி
4. அரும்பைத் தொள்ளாயிரம்
5. குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ்
6. குலோத்துங்க சோழன் உலா
7. இராஜ இராஜ சோழன் உலா
8. தக்கயாகப்பரணி
9. ஈட்டி எழுபது
10. எழுப்பெழுவது

(இந்த 10 நூல்களும் ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்ட நூல்கள்)

11. செங்குந்தர் சரித்திர சுருக்கம் (கந்த புராணத்தை தழுவியது)
12. இலட்சன குறவஞ்சி
13. செங்குந்தர் சங்க பட்டயம்
14. திருக்கை வழக்க அந்தாதி
15. பிள்ளைத் தமிழ்
16. தசாங்கம்
17. கலித்துறை மாலை
18. திருவொற்றியூர் செங்குந்த விநாயகர் மாலை
19. செங்குந்தர் பெருமையை விளக்கும் வீரநாராயண விஜயம்
20. வீரசிங்காதன புராணம்
21. வல்லான் காவியம்
22. கந்த விரத விலாசம்
23. செங்குந்தர் மரபு விளக்கம்
24. செங்குந்தர் வேற்பதிகம்
25. இவைகள் தவிர 1911-ஆம் ஆண்டு ஐயங்கார்குளம் திரு.பொன்னுசாமி முதலியார் அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பட்ட "ஜாதி நூல் கோவை"
26. 1926ஆம் ஆண்டு வண்ணக் களஞ்சியம் காஞ்சிபுரம் ஸ்ரீ நாகலிங்க முதலியார் அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பட்ட "செங்குந்தர் பிரபந்தத் திரட்டு"
27. 1993ஆம் ஆண்டு காஞ்சிபுரம் ஒட்டக்கூத்தர் மன்றத்தினரால் தெளிவான விளக்க உரையுடன் அச்சிட்டு வெளியிடப்பட்ட "செங்குந்தர் பிரபந்தத் திரட்டு"
28. கந்தபுராணம்
29. பிரம்மாண்ட புராணம்
30. திருவாரூர் லீலை
31. களிப்பெழுபது
32. சேனைத்தலைவர் மரபு விளக்கம்
33. ஊசல்



# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தோன்றிய வரலாறு

## செங்குந்தர் பேரரசு:

செங்குந்தர்கள் செங்கோல் ஓச்சிய காலத்தில் காசி முதல் கன்னியாகுமரி வரை 72 நாடுகளில் ஒற்றுமையுடனும் புகழுடனும் சிறப்பாக வாழ்ந்து வந்தனர். அந்த 72 நாடுகளையும்,

1) சிவபுரம் 2) தொந்திபுரம்

3) விரிஞ்சிபுரம் 4) சோளிங்கபுரம்

என 4 திசை நாடுகளாகப் பிரித்து இருந்தனர். ஒவ்வொரு திசைநாடுகளையும் "செங்கடப்ப மாலை" அணிந்த சிறு மன்னர்கள் நீதி நெறி தவறாது சிறப்பாக ஆண்டு வந்தனர்.

ஒவ்வொரு திசை நாடும் 18 நாடுகளைக் கொண்டதாக இருக்கும். ஒவ்வொரு நாடும் 17 கிளை நாடுகளைக் கொண்டதாக இருக்கும். சேலம் கிளை நாடு தொந்திபுரம் திசை நாட்டிலும், தருமபுரி, பவானி, தாரமங்கலம், திருச்செங்கொடு, நாமக்கல் கிளை நாடுகள் விரிஞ்சிபுரம் திசை நாட்டிலும் சேர்ந்து இருந்தன.

செங்குந்தர்கள் வாழும் ஒவ்வொரு ஊரிலும், தங்களுக்குள் நாட்டாண்மைக்காரர் அல்லது பெரியதனக்காரர் எனப்படும் ஊர்த்தலைவருக்குக் கட்டுப்பட்டு தங்களுக்குள் ஏற்படும் பிணக்குகளை, ஊர்த்தலைவரும் அவருக்கு உறுதுணையாக இருக்கும் காரியக்காரரும் வழங்கும் தீர்ப்புகளை மகிழ்ச்சியுடன் ஏற்று, நெறிமுறையுடன் வாழ்ந்து வந்தனர்.

வீரவாகுத் தேவருக்கும் புஷ்பகந்திக்கும் பிறந்த "அனகன்" எனும் மன்னன் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு செங்கோல் ஓச்சி வந்தான். 72 நாடுகளுக்கும் தலைமை நாடாக, காஞ்சி மகாநாட்டை வைத்துக் கொண்டு "அனகன்" சிறப்பாக நீதி பரிபாலனம் செய்து வந்தான்.

மன்னர்கள் காலம் போனபின்பு, இறுதியாக காஞ்சி மகாநாட்டுத் தலைவர் என்பவர், 72 நாடுகளுக்கும் தலைவராக ஆண்டவர் என்ற பட்டப் பெயருடன், ஆண்டவர் குமாரசாமி முதலியார் என்பவர் காஞ்சிபுரம் கச்சபேசர் ஆலயத்தின் மண்டபத்தில் இருந்து ஆட்சிபுரிந்து வந்தார். அவர் 1911ல் இயற்கை எய்தி விட்ட பின்பு, செங்குந்த சமுதாயத்தின் தலைமை பீடம் வெற்றிடமாகி விட்டது.

## தலைமை பீடத்தை நிரப்பும் முயற்சி:

தற்காலிகமாக, காஞ்சிபுரம் நகராட்சித் தலைவராக இருந்த திரு.ம.த.சாமிநாத முதலியார் அவர்கள் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்ற பழமொழிக்கு ஏற்ப, அரசியல் தலைநகரான சென்னையில், செங்குந்தர்கள் எல்லோருக்கும் தலைமையான தலைமைச் சங்கத்தையும் அதன் கிளைகளாக செங்குந்தர்கள் வாழும் எல்லா ஊர்களிலும் கிளைச் சங்கங்களையும் தோற்றுவிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் காஞ்சிபுரம் "வண்ணக்களஞ்சியம்" நாகலிங்க முதலியார் அவர்கள் (1926ல் துறவறம் பூண்டு நாகலிங்க முனிவர் ஆனார்) அப்போது மயிலாப்பூரில் அக்கவுண்டன்ட் ஆபீஸ் கண்காணிப்பாளராக இருந்த திரு.கா.வேலுமுதலியார் உதவியுடன் 30.12.1912ல் காஞ்சிபுரம் கச்சபேசர் ஆலய





மண்டபத்தில் செங்குந்தப் பெருமக்கள் கூட்டம் ஒன்றைக் கூட்டினார். அக்கூட்டத்தில் ஒரு செங்குந்தர் சங்கம் நிறுவப்பட்டு அதன் தலைவராக காஞ்சிபுரம் ம.த.சாமிநாத முதலியார் அவர்களும், செயலாளராகச் சென்னை கா.வேலுமுதலியார் அவர்களும் தேர்ந்து எடுக்கப்பட்டனர். அக்கூட்டத் தீர்மானப்படி அவர்களிருவரும் செங்குந்தர்கள் பெருமளவில் வசிக்கும் பல்வேறு ஊர்களுக்கும் சென்று, இதுபற்றி கலந்துரையாடி வந்தனர்.

1913 டிசம்பரில் அதே ஆலயத்தில் முன்பை விட அதிக அளவிலான, சிறப்பான செங்குந்தர்கள் கூட்டம் கூட்டப்பட்டு, மேற்படி சங்கத்தைப் பதிவு செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், எதிர்பாராதவிதமாக செயலாளர் சென்னை வேலு முதலியார் நாக்பூருக்கு மாற்றலாகி சென்று விட்டதால், அந்த சங்கம் தொடர்ந்து வேலை செய்ய இயலவில்லை.

9.6.1918ல் வண்ணக் களஞ்சியம் நாகலிங்கம் முதலியார், சென்னையில் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம் ஒன்றை நிறுவுவதற்கும், சென்னை மாகாணம் (கேரளா, ஆந்திரா உட்பட) எங்கும் உள்ள செங்குந்தர்கள் மாநாடு ஒன்றைக் கூட்டுவதற்கும் சென்னை மயிலாப்பூரில் உள்ள வெள்ளீசுவரர் ஆலயத்தில் செங்குந்தர்கள் கூட்டத்தைக் கூட்டினார். அக்கூட்டத்தில் ஒரு சங்கம் நிறுவப் பெற்று உத்தேச மாநாட்டிற்கான வரவேற்புக் குழு ஒன்று அமைக்கப்பெற்றது.

பின்னர், காஞ்சிபுரத்திலும், கொல்லங்கோட்டிலும் செங்குந்தர்கள் கூட்டம் கூடி ஆலோசனை செய்யப் பெற்றது. அடுத்து, நாகப்பட்டினத்திற்கருகில் உள்ள பொருள்வைத்தசேரியில் நாகை நல்லமுத்து முதலியார் தலைமையில் ஒரு மாநாடு கூடிற்று. அதற்கு காஞ்சி நாகலிங்க முனிவரும் திருவாரூர் வள்ளல் சபாபதி செங்குந்தரும் சென்றிருந்தனர். அம்மாநாட்டில் சென்னையில் செங்குந்த சமுதாயத்திற்காக உழைக்கக் கூடிய ஒரு சங்கத்தை நிறுவி, பத்திரிகை ஒன்றையும் நடத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

## தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம் தோன்றியது:

மேற்கூறிய முயற்சிகளின் பயனாக, பிரபவ ஆண்டு சித்திரைத் திங்கள் 17ஆம் நாள் 29-4-1927 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு சென்னை கோவிந்தப்ப நாயக்கன் வீதியில் உள்ள "சௌந்தர்ய மஹால்" என்னும் மண்டபத்தில் "தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்" தோன்றலாயிற்று.

# செங்குந்த மித்திரன்

காஞ்சிபுரம் வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முதலியார் அவர்கள் 1921ஆம் ஆண்டில் "செங்குந்தன்" என்ற பெயரால் ஒரு பத்திரிக்கையை ஆரம்பித்து நடத்தி வந்தார்; பின்னர் "செங்குந்தமித்திரன்" என்ற பெயரால் வார இதழாக வெளியிட்டு வந்தார், சில மாதங்கள் வந்த செங்குந்தமித்திரன், பின்னர் வெளிவரவில்லை.

1927 சனவரி முதல் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தால், "செங்குந்தமித்திரன்" மாத இதழ் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அதன் பொறுப்பு ஆசிரியர்கள் விபரம்:-

1. **காஞ்சி திரு. நாகலிங்க முனிவர்**
2. **காஞ்சி திரு. மா.சண்முகசுந்தரம்**
3. **காஞ்சி திரு. பி.செ.மாணிக்கவாசகம் (மணிமொழியார்)**
4. **சென்னை திரு. சி.நடராஜ செங்குந்தர். B.A.B.L.,**
5. **சென்னை டாக்டர் சி.பாலசுப்ரமணியன். M.A., M.Lit., Ph.d.,**
6. **திருமலைராயன்பட்டினம் திரு.தி.சே.பழனிவேல் செங்குந்தர்**
7. **தாம்பரம் டாக்டர் தி.ரா.செல்வராசன், M.A., M.Lit., Ph.d.,**
8. **சென்னை திரு.வி.மயில்வாகனன். M.A.,**
9. **உத்யோகரத்னா. நெசவாளர் நேசன் திரு.ஜெ.சுத்தானந்தன், பி,எஸ்சி,.**
10. **பெண்ணாடம் திரு.ஆ.இராஜவேலு**
11. **கைத்தறிக் கதிரவன் திருப்பூர் திரு. K.P.K.செல்வராஜ்**

1927 சனவரியில் செங்குந்தமித்திரன் வெளிவந்தபோது, அதன் ஆசிரியர் பொறுப்பை காஞ்சி நாகலிங்க முதலியாரும், செலவுகள்



பொறுப்பை திரு.தி.நா.சபாபதி முதலியார் அவர்களும் ஏற்றுக் கொண்டனர். சனவரி 1928க்குப் பிறகு சங்கத்தின் செலவில் வெளிவந்து கொண்டிருக்கிறது. சமூகம், பொருளாதாரம், கல்வி, தொழில் ஆகிய துறைகளில் செங்குந்தர்கள் மிகமிகப் பின்தங்கி இருப்பதால் அத்துறைகளில் விரைவில் முன்னேற வேண்டும்; மூடப்பழக்கவழக்கங்களை அறவே ஒழிக்க வேண்டும்; விழாக்களில் வீண் செலவைத் தவிர்க்க வேண்டும் என்ற நோக்கத்துடன் தொடங்கப் பெற்றது செங்குந்தமித்திரன்.

தற்போது, பல்வேறு துறைகளில் நம்மவர்கள் முன்னேற வேண்டும்; நம் மாணவர்கள் தொழிற்கல்வி பயில வேண்டும்; இளைஞர்கள் கைத்தறியைத் தவிர்த்து புதிய தொழில்களை துணிச்சலுடன் தொடங்க வேண்டும்; பெண்களும் தொழிற்கல்வி பயின்று தொழில் துறையில் இறங்க வேண்டும் என்ற சிறப்பான நோக்கங்களை செங்குந்தமித்திரன் எடுத்துரைக்கின்றது. மேலும் மாவட்ட சங்கங்கள், கிளைச்சங்கங்கள், இளைஞர், மகளிர் அணிகள், மாநாடுகள், மாபெரும் விழாக்கள், கருத்தரங்குகள், நம்மவர்களின் புதிய கண்டுபிடிப்புகள், மணமக்கள் தேவைகள் முதலிய ஏராளமான செய்திகளைத் தாங்கிக் கொண்டு செங்குந்தமித்திரன் பல்சுவை மாத இதழாக வெளிவருகிறது.

## செங்குந்தர் மாளிகை

வள்ளல் தி.நா. சபாபதி முதலியார் அவர்கள் மதராஸ் பாளையகாட் கம்பெனி சென்னையில் கட்டிடம் வாங்கியபோது, தொலைநோக்கு சிந்தனையுடன், மதராஸ் பாளையகாட்

மாளிகையின் பழைய தோற்றம்




தற்போதைய தோற்றம்



கம்பெனியின் சார்பில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்திற்கும் சேர்த்து. சென்னை அரண்மனைக்காரன் தெருவில் 31(89)ஆம் எண்ணுள்ள கட்டிடத்தை வாங்கியுள்ளார். அதில் சில மாற்றங்களைச் செய்து செங்குந்தர் மாளிகை எனப் பெயரிட்டு 15-09-1939ல் திறப்பு விழா நடைபெற்றது.

திறப்பு விழா நடைபெற்று பல வருடங்களுக்குப் பிறகு மாளிகை பழுதாகி இடிந்துவிழும் நிலை ஏற்பட்டது. இதையுணர்ந்த செங்குந்த சமுதாயத்தினர்கள் அம்மாளிகையை இடித்துவிட்டு, தானாகவே முன்வந்து சமுதாய உணர்வுடன் வாரிக்கொடுத்த வள்ளல்களின் நிதி உதவியைக் கொண்டு, சுமார் 60 இலட்சம் செலவில், புதிய செங்குந்தர் மாளிகை கட்டி எழுப்பி அதனை 04-02-2004 புதன்கிழமை காலை தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தலைவர் திரு. ஜெ.சுத்தானந்தன் பி.எஸ்.சி., அவர்களால் திறந்துவைக்கப்பட்டது.

## வள்ளல் சபாபதி மெட்ரிகுலேசன் பள்ளி

திராவிட முன்னேற்றக் கழகத்திடமிருந்து அதன் தலைவர் திரு. பேரறிஞர் அண்ணா அவர்களிடமிருந்து, சென்னை சேத்துப்பட்டில் ஆரிங்டன் சாலையில் 35ஆம் எண் உள்ள காலி மனையை, தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தினரால் ரொக்கம் ரூ.35000 கொடுத்து 23-09-1960-ல் கிரயத்திற்கு வாங்கப்பட்டது. (பத்திரப் பதிவு எண்.3611-1960) இதற்கு பேருதவி புரிந்தவர் காஞ்சி மணிமொழியார் ஆவார். அவ்விடத்தில் வள்ளல் சபாபதி மாணவர் இல்லம் கட்ட 07-07-1985-ல் கால்கோல் விழா நடைபெற்றது. நீண்ட இடைவெளிக்குப் பின்னர் 07-07-1985-ல் வள்ளல் சபாபதி மெட்ரிகுலேஷன் பள்ளி தொடங்கப் பெற்று, இன்றுவரை சிறப்பாக நடைபெற்று வருகிறது.

# செங்குந்தர் அறநிலையங்கள்

*தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க வெள்ளி விழா மலரில் (1952) இடம் பெற்ற கட்டுரையிலிருந்து சில பகுதிகள்..*

## கோயிலும் மடங்களும்

கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது தமிழ்முதுமொழி. கோயில் மக்கள் வாழ்வின் செம்மைக்கு உறுதுணையாக அமைந்த காலத்தில் இம் மொழியெழுந்தது. இக்காலம் கோயில் முறை பெரும்பாலும் சீர்கேடுற்று அதன் உண்மை நோக்கத்திற்கு மாறாக மக்கள் வாழ்வுக்குத் தீமை பயக்கத்தக்கப் பல கேளிக்கைளுக்கு நிலைக் கலனாகி உள்ளன. அதனால் நாட்டில் கோயில்களின் மீது அலட்சிய மனப்பான்மை ஓரளவுக்குத் தோன்றி வருகிறது. ஆத்திரம் கொண்ட அறிஞர் சிலர் கோயில்களையெல்லாம் இடித்து விடவேண்டும் என்றும் பிரச்சாரம் செய்யத் தொடங்கியுள்ளனர். ஆனாலும் பேரறிஞர்கள் ஒருசிலர் அவ்வாறு கோயில்களை அழித்து விடுவது தகாதென்று கோயில் முறைகளைச் சீர்திருத்தப் பாடுபட்டு வருகின்றனர். இச்சீர்திருத்த உணர்ச்சியின் பயனாக அரசினரும் அறநிலையப் பாதுகாப்பு இலாகாவென ஒன்றை ஏற்படுத்தியுள்ளனர்.

தமிழ்நாட்டில் ஏனைய இடங்களில் உள்ள கோயில்களின் நிலை எப்படியாயினும் செங்குந்தர்கள் வாழும் இடங்களில் உள்ள கோயில்களில் மாத்திரம் எல்லாக் காரியங்களும் சரிவர நடந்து வருவது செங்குந்த மக்களின் தெய்வ பக்திக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

கோயில் தொடர்பு கொண்ட சமூகம் வரலாற்று முறையில் நம் நாட்டில் நாகரீக சமூகமாகக் கருதப்படுகின்றது. அவ்வகையில் செங்குந்தர்களின் உரிமையிலுள்ள கோயில்கள் மடங்கள் ஆகியவற்றுள் நமக்குக் கிடைத்துள்ளவற்றின் விவரங்களை இங்கு வெளியிடுகிறோம்.

தமிழ்நாட்டில் குன்றும் மலையுமுள்ள இடங்களெல்லாம் பெரும்பாலும் முருகன் தலங்களாக அமைந்திருக்கும். அத்தகைய இடங்களில் பெரும்பாலானவை செங்குந்தர்கள் வாழ்விடமாக உள்ளது. சிவத்தலங்கள் பலவற்றிலுங்கூடச் செங்குந்தர்கள் வாழ்கின்றனர். சிவபெருமான் மக்களாகவும் திருமுருகன் சகோதரர்களாகவும் உரிமை பேசும் செங்குந்தர்கள் அவ்விடங்களில் வாழ விரும்புவது இயற்கையே.

ஆங்காங்கே உள்ள கோயில்களையொட்டி மடங்களும் சத்திரங்களும் அமைந்துள்ளன. அவற்றுள் நம்மவர்க்கு உரிமையுள்ளவற்றின் விவரமும் அறநிலையங்கள் என்னும் இத்தலைப்பின் கீழ் வெளியிடப்படுகின்றது.

## காஞ்சிபுரம் கோயில்கள்

'முத்தி தரும் நகரேழுள் முதன்மை யாங்கச்சி' என்று சிறப்பித்துக் கூறப்படும் சிறப்பினையுடையது காஞ்சிபுரம். இது புராணப் பிரசித்தமும், சரித்திரப் புகழும் பெற்ற நகராகும். இந்நகரத்திலிருந்து தான் முதற்குலோத்துங்க சோழனது சேனைத் தலைவனும் பல்லவ வம்சத்தில் தோன்றியவனுமாகிய கருணாகரத் தொண்டைமான் பிரசித்தி பெற்ற கலிங்கப்போரை நடத்தப் புறப்பட்டுச் சென்றான். காஞ்சிபுரம் பல்லவ ராஜ்யத்தின் தலைநகராகவும் திகழ்ந்தது. இங்குப் பல்லவர்களாலும் மூவேந்தர்களாலும் கட்டப்பட்ட சைவ, வைணவ ஆலயங்கள் பல உள்ளன.

இங்கு நால்வராலும் பாடல் பெற்ற ஆலயங்கள் பல இருக்கின்றன. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூரில் இழந்த கண்களிலொன்றைப் பெற்ற பெருமையை உடையது.

இந்நகரைச் சுற்றிச் செங்குந்தர்கள் ஏராளமாக வாழும் கிராமங்கள் பல இருக்கின்றன.

நம்மவர்கள் ஆதிக்கத்தில் பல பாடல் பெற்ற கோயில்கள் இருக்கின்றன. கச்சாபேஸ்வரர் ஆலயமும், சம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் பாடல் பெற்ற திருமேற்றளி ஆலயமும், காயரோகணம் ஆலயமும், பணாமணீசம் ஆலயமும், தக்கேசம் போன்ற புராணப் பிரசித்தமான ஆலயங்களும் நம்மவர்கள் ஆதிக்கத்திலேயே இன்றும் இருக்கின்றன.

தற்போது மிகப்பெரிய ஆலயமாகிய ஸ்ரீ கச்சபேஸ்வரர் ஆயத்திற்குத் திருவாவடுதுறை





ஆதீனத்தைச் சேர்ந்த சிவஞான சுவாமிகளின் மாணவராகிய சரவண பத்தர் பரம்பரையில் வந்த ம.த.சாமிநாத முதலியார் அவர்களே தமது இறுதி நாள்வரை அறநிலையப் பாதுகாவலராக இருந்தார்கள். அவர்கள் காலமான பின் அவர் வீட்டினர் அரசாங்க அலுவல்களில் அமர்ந்ததன் காரணமாக யாரும் நேரிடையாகப் பொறுப்பேற்க முடியவில்லை. ஆயினும் அவர் வீட்டினரில் ஒருவர் உதவி அறநிலையப் பாதுகாவலராக இருந்தார்.

ம.த.சாமிநாத முதலியார் இளமையிலேயே பல ஊர்களுக்கும் சென்று நம்மவர்களுக்குண்டான வேற்றுமைகளைக் களைந்து ஒற்றுமையை நிலைநாட்டி பல நற்காரியங்களைச் செய்து வந்தார்கள். அவர் செய்த சீர்திருத்தங்கள் மிகப் பல.

ம. த. சாமிநாத முதலியாருக்குப் பின் மிகச் சிறந்த வாக்குவன்மை படைத்த நடேச முதலியார் என்பவர் கச்சபேஸ்வரர் கோயில் அறநிலையப் பாதுகாவலராக இருந்து வந்தார். இவர் இளமையிலேயே பல இடங்களுக்கும் மேற்படி ம.த.சாமிநாத முதலியாருடன் சென்று அவருக்குப் பல விதத்திலும் உதவி புரிந்து வந்தவர்.

ம.த.சாமிநாத முதலியார் நினைவாக ஒரு கட்டிடமும் காஞ்சியில் கட்டப்பட்டிருக்கிறது. பிள்ளையார்பாளையத்திலுள்ள ஆண் பாட சாலையையும் இவர் செய்த தொண்டு காரணமாக நகராட்சி மன்றத்தினர் சேர்மன் சாமிநாத முதலியார் பாடசாலை என வழங்கி வருகின்றனர்.

## திருத்தணிகை சத்திரங்கள் - கோயில்கள்

திருத்தணிகையில் ஸ்வாமி மேல் சன்னிதி, மேல்பாகத்தில் செங்குந்தர் குள்ளசேனாம் கோத்திரத்தார் சத்திரம் ஒன்றும், எச்சான கோத்திரத்தார் சத்திரம் ஒன்றும், குளவிக் கண்ணன் சத்திரம் ஒன்றும் உள்ளன.

காஞ்சிபுரம் செங்குந்தர்களுக்குச் சொந்தமான சத்திரம் திருத்தணிகை சன்னதி வீதியில் உள்ள து.

காஞ்சி தாலுக்கா ஐயன்பேட்டைச் செங்குந்தர்களுக்குச் சொந்தமான சத்திரமும் திருத்தணிகையில் சன்னதி வீதியில் முடி வாங்கும் சத்திரத்திற்கு அடுத்த மேலண்டையில் உள்ளது.

காஞ்சி தாலுக்கா ஐயன்பேட்டை கந்தப்பார் வீதி. வி. கச்சபாலய முதலியாருக்குச் சொந்தமான சத்திரம் திருத்தணி சன்னதி வீதியில் உள்ளது.

வடார்க்காடு ஜில்லா பத்து ஊர்ச் திலமான நிலையில் கீழ்த்தெருவில் உள்ளது.

செங்குந்தர்களுக்குச் சொந்தமான சத்திரம் ஒன்று சிதிலமான நிலையில் கீழ்த்தெருவில் உள்ளது.

புத்தூரில் செங்குந்தர் விநாயகர் ஆலயம் ஒன்றும் செங்குந்தர் சுப்பிரமண்யர் ஆலயம் ஒன்றும் இருக்கிறது. மேற்படி ஆலயத்தில் 2 கால பூஜையும் சிறப்பாக நடக்கிறது.

சிதம்பரம் ஏறக்குறைய முந்நூறாண்டுகட்கு முன்னர் சிதம்பரத்திலிருந்த மௌன குரு சுவாமிகள் என்பவரால் ஏற்படுத்தப்பட்ட மடம் மௌன சுவாமிகள் மடம் எனப்படுவது.

சிதம்பரத்தையடுத்த குறிஞ்சிப்பாடி என்னும் ஊரிலிருந்த செங்குந்தர் ஒருவர் குடும்பத்துடன் மௌனகுரு சுவாமிகளை வணங்கித் திரும்பும்பொழுது இளம்புதல்வர் ஒருவர் இடைவிடாது அழுதார் எனவும், அதுகண்ட குருமூர்த்திகள் அப்பிள்ளை இங்கேயே இருக்கவெனச் சைகையால் ஆணையிட்டமையால் பெற்றோர் அப்பிள்ளையைச் சுவாமிகளிடமே ஒப்புவித்துத் தம்மூர் திரும்பினர் என்றும், சுவாமிகள் பரிபூரண நிலையடையும் காலத்தில் அவ்விளைஞரையே தம் மாணவராக்கி உபதேசித்துத் திருமடத்தின் முதல்வராக்கினார் எனவும் அது முதற்கொண்டு அச்செங்குந்த குடும்பத்திற் பிறக்கும் புதல்வர்களில் ஒருவரே இம்மௌன சுவாமிகள் மடத்தின் தலைவராக இருந்து வருகிறார்கள் எனவும் வழங்கும் வரலாறு செங்குந்தர்களுக்கும் இம்மடத்திற்குமுள்ள தொடர்பினை நன்கு விளக்குவதாகும். இப்போது இம்மடத்தின் தலைவராக எழுந்தருளியுள்ள நீல ஸ்ரீ சபாபதி சுவாமிகள் கல்வி பறிவொழுக்கங்களிற் சிறந்தவராகவும் இரக்கமுடையவராகவும் பொதுமக்களுக்கு உதவிபுரிந்து வருகின்றார்.

## மண்டல மாணிக்கம் கோயில்கள் - மடங்கள்

இவ்வூரில் சுமார் 300 வீடுகளும் 500 குடும்பங்களையும் உடைய செங்குந்தர்கள் என்று சொல்வதுண்டு.

இங்குள்ள செங்குந்தர்களில் பலவகைகளாகத் தெற்கே இருந்தும் (திருநெல்வேலிப் பக்கத்தில்) மேற்கே இருந்தும் (வத்திராயிருப்புப் பக்கத்தில் இருந்தும்) கிழக்கே இருந்தும் இவ்வூருக்குக் குடியேறித் தங்கள் இருப்பிடமாக இவ்வூரையே உருவாக்கினார்கள். இவர்கள் மூன்று நான்கு பிரிவுகளாக இவ்விடம் வந்திருந்தாலும் கூட

ஒவ்வொரு வகைக்கும் ஒவ்வொரு அம்பலம் என்ற ஒருவரை நியமித்துத் தொழில் செய்வதிலும் மற்றும் மகமை, கட்டுப்பாடு இவைகளில் மிகவும் ஒற்றுமையாக வாழ்ந்து வருகிறார்கள். இவ்வுறவின் முறையார்களுக்குச் சொந்தமாகப் பாவடி, மடம், ஊருணி (குளம்), கிணறு மற்றும் நந்தவனம் முதலிய பொது சொத்துக்களும் மற்றும் வாடகை வரக்கூடிய கடைகளும் இருப்பதுடன், பிள்ளையார் கோயில், மாரியம்மன் கோவில் என்ற கோவில்களும் ஊர்ப்பொதுவிலேயே பராமரிக்கப்பட்டு வருகின்றன.

சிவன் கோவில் (நம்மவர்கள் ஆதிக்கத்தில் உள்ளது) இது ஆதியில் கைலாசநாதசாமி கோவில் என்று பெயர் பெற்றிருந்தது. இதை உண்டாக்கியவர் செங்குந்த குலத்தில் பிறந்த பிரபல வைத்தியர் முத்துப்பண்டிதர் என்பவராவார்.

இராமநாதபுரம் ஜில்லாவில் நயினார் கோவிலில் உள்ள நாகநாத சுவாமி சவுந்தர வல்லியம்மன் உற்சவம், வைகாசி மாதம் சுவாதியில் தேரோடும் திருநாள் வெகுவிமரிசையாக நடைபெற்று வருகின்றன. இத் திருவிழாவுக்கு நாலா பக்கத்திலிருந்தும் திரள்திரளாக ஜனங்கள் வருவதுண்டு. சௌகரியத்திற்காகவும், பக்திக்காகவும், மண்டகப் படியும் நம்மவர்களால் உண்டாக்கப்பட்டிருக்கிறது. இக்கைங்கரியத்துக்கு முன்னின்று முனைந்து வேலை பார்த்து வந்தவர் இம்மண்டல மாணிக்கம் செங்குந்தர்களேயாவார்கள்.

## செங்குந்தர் எழுகரை நாட்டு மகாநாட்டுச் சத்திரங்களும் மடங்களும்

திருச்செங்கோட்டு நாடு தாரமங்கல நாடு, சேலம் நாடு, பருத்திப் பள்ளி, மல்ல சமுத்திரநாடு, இராசிபுரம் பாச்சல்நாடு, ஏழூர் கொமரபாளையம் நாடு, அரையன் நாடு என்பவை எழுகரை நாடுகளாகும். இவற்றிற்கெல்லாம் தலைமை பூண்ட திருச்செங்கோட்டு ஊர்ப்பஞ்சாயத்து மகாநாடு எனப்படும். கிளை நாடுகளிடமிருந்து மகாநாடு வரி வசூலித்துப் பொதுச் செலவுகளை நடத்தும். அவ்வாறு வசூலிக்கப்பட்ட பணத்திலிருந்து திருச்செங்கோட்டில் ரூபாய் 7000 செலவில் ஓர் மாளிகை கட்டப்பட்டுள்ளது. இம்மாளிகை வெளிக் கிராமங்களிலிருந்து வரும் செங்குந்த மக்கள் தங்குவதற்குச் சத்திரமாகவும், நியாய சபை நடைபெறும் இடமாகவும் உபயோகப்பட்டு வருகிறது.

இம்மாளிகையன்றி வேறு இரண்டு மடங்களும் மகாநாட்டிற்குச் சொந்தமாக உள்ளன. இவற்றுள் கடைத் தெருவில் உள்ள மடத்தின் ஒரு பகுதி கூட்டுறவு விற்பனைச் சங்கம் நடைபெறுவதற்கும், ஒரு பகுதி வெளியூர் வாசிகள் வந்து தங்குவதற்கும் விடப்பட்டுள்ளது. மற்றொரு மடத்தில் மகாநாட்டுப் பொருளுதவியைக் கொண்டு செங்குந்தர் ஆரம்பப் பாடசாலை நடைபெற்று வருகிறது.

## திருநெல்வேலி ஜில்லா செங்குந்தர் மடங்களும் கோயில் விழாக்களும்

### திருச்செந்தூர்

இந்தியாவிலுள்ள இந்துக்களின் சிறந்த தலங்களுள் திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் ஒன்று. இத்தலத்தில் நம் நாட்டுச் செங்குந்தர் வகுப்பைச் சேர்ந்த முதலிமார்கள் ஐந்து மடங்களைக் கட்டியிருக்கிறார்கள். இம்மடங்களில் மூன்று மிகவும் பெரிய பிரமாண்டமான கட்டிடங்கள் சுமார் மூன்று லட்சம் ரூபாய் வரை செலவு செய்து இன்றும் நல்ல நிலையில் இருந்து வருகின்றன. இம்மடங்கள் செங்குந்தர் வகுப்பினர் மேற்பார்வையில் இருந்து வருகின்றன. தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலுமுள்ள செங்குந்த முதலிமார்கள் யாவரும் தங்குவதற்கு வேண்டிய வசதிகளோடு அமைந்திருக்கின்றன. திருச்செந்தூரிலுள்ள முதலியார் மடங்கள் முக்கிய மான ராஜவீதிகளில் அமைந்தும் சுவாமிக்குத் திருக்கணம் சாத்திச் சேவிக்க வசதிகளோடு கூடிய கல்மண்டபங்கள் பதினொரு கால் பத்தியில் மிகவும் அழகாகவும் உறுதியாகவும் காண்போர் மனத்தைக் கவரும் வண்ணம் அமைக்கப் பெற்றும் இருக்கின்றன.

திருச்செந்தூரிலேயே நம் முதலியார்கள் மடத்திற்கு முன்பாகத்தான் பதினொரு கால் பத்திக்கல் மண்டபம் ரோட்டின் மேல் அமைந்து இருக்கிறது. செங்குந்த முதலியார்கள் சிவபக்தியில் மிகவும் ஆவலுடையவர்கள் என்பதைக் காட்டுவதற்கு இந்தத் தலத்திலுள்ள மண்டபங்களும் மடங்களும் பெரிய சான்றாக விளங்குகின்றன. திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் கொடியேற்றுவிழாவன்று நம் திருச்செந்தூர் மடத்திலிருந்து விருதுகளுடனும் மேளதாளங்களுடனும் நம்மவர்கள் கொடி கொண்டு ஏற்றும் வழக்கம் இன்றும் நடந்து வருகிறது.

திருச்செந்தூர் மாசித் திருநாள் ஆவணித் திருநாள் வடக்கு ரத வீதி நம் மண்டபத்தில் ஒரு திருநாளன்று சுவாமி இறங்கி அங்கு அபிஷேகம்





அலங்காரம் - சோடச உபசாரம் நடத்தி நம் மண்டபத்திலிருந்து சுவாமியைக் கோவிலுக்குள் சேர்க்கிறதென்பது இன்றும் நம்மவர்களே செய்து வருகிறார்கள். இம்மடம் வடக்கு ரதவீதியில் சுவாமி இறங்குவதற்காகச் சுமார் ரூபாய் இரண்டு லட்சம் செலவில் நம்மவர்களால் அமைக்கப்பெற்று இருக்கிறது.

இவைகளை நோக்குமிடத்து நம்மவர்கள் மிகவும் பக்தி சிரத்தையுடன் முருகனை வழிபட்டும், தொண்டு செய்தும் வருகிறார்கள் என்பதை இன்றும் காணலாம் என்றால் அது புகழ்ச்சியல்ல; உண்மையே என்று நிரூபிக்கக் கூடியதே. இது நம் குலத்திற்கே தனிப்பெருமையை அளிக்கிறது.

### பாவநாசம்

திருநெல்வேலி ஜில்லாவில் பாவநாசம் மிகவும் சிறந்த புண்ணியத் தலம். இது பொதிகை மலை அடிவாரத்தில் இயற்கைக் காட்சிகளோடு விளங்குமிடம். இங்கும் நம் செங்குந்த முதலியார் மடம் அமைக்கப்பெற்று மிகவும் வசதியாகவும் இருக்கிறது.

### திருநெல்வேலி டவுன்

திருநெல்வேலி டவுனில் சுவாமி நெல்லையப்பர் காந்திமதி அம்பாள், ஐப்பசி மாதம் திருக்கல்யாண உற்சவம் நடந்து வருகிறது. இந்த மகத்தான உற்சவத்தில் சுவாமி, அம்பாள் காட்சி கொடுப்பதற்குத் தனித் தனி கல் மண்டபங்கள் இரண்டு பெருஞ்சாலைகளின் மீது நிறையப் பொருள் செலவு செய்து அமைத்திருப்பவர் நம் முதலியார் குடும்பத்தாரைச் சேர்ந்தவர்கள்.

### திருக்குற்றாலம் செங்குந்தர் நாட்டு மடம்

இம்மடாலயம் தென்வடல் 252 அடி அடி நீளமும் கீழ்மேல் 153 அடி அகலமும் உள்ள காம்பவுண்டுள் கிழக்குப் பார்த்த மடம், விநாயகர் ஆலயம், தங்கும் இடம், சமையல் அறை, தண்ணீர் கிணறு முதலிய வசதிகள் அமைந்துள்ளன. தென்னை, மா, பலா, கொய்யா, எலுமிச்சை, நாரத்தை, சந்தனம் முதலிய விருக்ஷங்கள் வடபகுதியிலும், நந்தவனம் தென்பகுதியிலும் நிறைந்துள்ளன. இம்மடத்தில், மார்கழி மாதம் திருவாதிரை உத்ஸவத்தின் போது 5-ம் திருநாள் மண்டகப்படி அபிடேக ஆராதனைச் சிறப்பும் திருவாதிரையன்று (மஹேஸ்வர பூஜை) அன்னதானக் கைங்கர்யமும் திருக்குற்றால நாதருக்கு எல்லா உற்ஸவங்களிலும் கொடி ஏற்று விழாவும் நம்மவரால் நடைபெற்று வருகின்றன.

### தென் இந்திய செங்குந்தர் தர்ம கைங்கரிய பரிபாலன சபை, அடிவாரம், பழனி.

பழனியில் நம் சமூகத்தவர் யாவருக்கும் பாத்தியப்பட்ட கீழ்க்கண்ட தர்மங்கள் உள்ளன.

1. அடிவாரம் சன்னதி வீதியில் கீழ்ச் சரகில் தண்ணீர்ப் பந்தல் மடம்.
2. மேற்படி வீதியில் மேல் சரகில் முத்துக் குமாரசாமி கோவிலுடன் மடம்.
3. ஸ்வாமி மலையின் மத்திய பாகத்தில் இடும்பன் கோவில் கருப்பக்கிரஹம் மற்றும் மண்டபம்
4. ஸ்வாமி மலையின் பேரில் வீரவாகு தேவர் கோவில்
5. பழனி மேலரதவீதி பெருமாள் கோவில் பக்கம் மடம்
6. பழனி பெரிய நாயகியம்மன் கோவிலில் கொடி கட்டு மண்டபம் மற்றும் கொடிமரம் இன்னும் இம்மாதிரி பல தர்மங்கள் உள்ளன. இவைகளைப் பராமரித்து வர நம்மில் நிர்வாக சபை அமைந்து மேற்படி சபையினரால் தர்மங்கள் நடைபெற்று வருகின்றன.

அடிவாரத்தில் இரண்டு மடங்கள் உள்ளதில் ஒவ்வொரு மடத்தில் தனித் தனியாய் ஏஜெண்டுகள் நியமிக்கப்பட்டு, வரும் யாத்திரிகர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுத்து வருகின்றோம்.

முத்துக்குமாரஸ்வாமி மடம் சென்ற நந்தன வருடம் கட்டப்பட்டது. 60 வருஷம் ஆகிறது. தண்ணீர்ப் பந்தல் மடம் கட்டி சுமார் 40 வருஷங்கள் ஆகிறது.

மேற்படி இரு மடங்களும் நம்மவர்கள் நன்கொடையைக் கொண்டே கட்டப்பட்டவை. இரு கட்டிடங்களும் சுமார் 2 இரண்டு லட்சம் விலை பெறுமானமுள்ளவை. இரு மடங்களின் செலவினங்கள் வரும் பக்தர்களின் நன்கொடை மூலமாக நடைபெற்று வருகிறது. மூலதனம் ஒன்றும் கிடையாது.

### ஒட்டக்கூத்தர் மடாலயம்

கல்யாணபுரம் மடாலயம் (ஆரம்பம் 22-7-1930 - குட நீராட்டு விழா 25-8-1941) நிறுவியவர்



சிவஞான யோகி முருகானந்த அடிகள். தோற்றம் கி. பி. 1897 ஹேவிளம்பி பங்குனி 13-ம் நாள்.

இம்மடாலயம் இந்தியா, இலங்கை, இரங்கூன் முதலிய பல நாட்டு அன்பர்கள் பொருளுதவியால் கட்டப்பெற்றது.

மணிவாசகப் பெருமான், அறுபத்து மூவர் ஆகியோர் குருபூசை நடைபெற்று வருகிறது.

மகாத்மா காந்தி, இராமலிங்க அடிகள் முதலியோர் அறிவுறுத்திய நன்னெறியும் உயிர் இறக்கமும் ஓம்பப்படுகின்றன.

ஒட்டக்கூத்தர் நூல் நிலையம் நன்கு நடைபெற்று வருகிறது. மடாலயத் தொண்டுகள் தொடர்ந்து நிகழ்வதற்குப் போதிய பொருள் நல வாய்ப்பில்லை. அன்பர்கள் துணைபுரியுமாறு வேண்டப்படுகிறார்கள்.

### ஸ்ரீ கலைமகள் செங்குந்த வாலிபர் சங்கம், மேலப்பாதி, மாயவரம்.

இவ்வூரின் கண் செங்குந்தர்களுக்கெனச் சொந்தமானதொரு மடம் உண்டு. அதில் ஆண்டுக்கு ஒருமுறை சிறுத்தொண்ட நாயனார் குருபூஜை நடத்தப்படுகிறது. மற்றைய காலங்களில் கிராம மாணவ மாணவிகள் கல்வி பயில உதவுகிறது.

### சங்கர நயினார் கோவில்

இவ்வூர் செங்குந்தர் மாதாங் கோவில் தெருவில் மேலக் கடைசியில் பஜார் 8 ரோட்டின் பக்கமாகச் செங்குந்தர் பொதுப் பணத்திலிருந்து ஒரு லட்சம் ரூபாய் செலவில் கார்த்திகை நிலையம் என்று ஒரு மாபெரும் கட்டிடம் கட்டப் பெற்றிருக்கிறது. இக்கட்டிடத்தின் மேல் மாடியில் செங்குந்தர் இரவு ஆரம்பப் பாட சாலை ஒன்று நடக்கிறது. கட்டிடத்தின் முன்பக்கம் திருப்பூர் குமரன் வாசக சாலை அமைக்கப் பெற்றுள்ளது. பல பத்திரிக்கைள் வரவழைக்கப்படுகின்றன. பலரும் படித்துப் பயன்பெறுகிறார்கள். இக்கட்டிடம் முழுவதும் மின்சார விளக்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வூரில் செங்குந்தர்கட்கு உரியதான தருமர் கோவில் ஒன்று உள்ளது. இந்தக் கோவிலில் ஆண்டுதோறும் இரண்டாயிரம் ரூபாய் செலவில் திரௌபதியம்மன் அக்கினி மிதிப்புத் திருநாள் நடைபெறும்.

### சுவாமிமலை

தஞ்சை ஜில்லா, சுந்தரப் பெருமாள் கோயில் செங்குந்த மரபினருக்குச் சொந்தமான மடம் சுவாமிமலை தெற்கு வீதியில் இருக்கின்றது. இம்மடத்தில் நம்மவர் வந்து (இலவசமாக) தங்கலாம். மற்றைய சமூகத்தினரும் வந்து தங்கலாம்.

### திருமுட்டம்

ஸ்ரீ முஷ்ணம் என வழங்கும் திருமுட்டம் என்னும் இவ்வூர் சிதம்பரத்துக்கு மேற்கே 27 மைல் தூரத்திலுள்ளது. இவ்வூரில் நித்தியேசுவரர் எனக் கொண்டாடப்பெறும் புராதன சிவபெருமான் கோயிலும் அதில் அருணகிரி நாதரால் பாடப்பெற்ற 2 திருப்புகழ்க்குரிய முருகப் பெருமான் ஆலயமும் அமைந்துள்ளன.

மேற்படி ஆலயக் கல்வெட்டுக்களில் தமிழ் எழுத்துக்களில் இவ்வூரிலும் சுற்றுப்புறங்களிலும் சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்னதாகவே நம் மரபினராகிய செங்குந்த குலத்தவர்களிருந்து கோயில் திருப்பணிக்கும் நாள்தோறும் சிவபெருமான் பூசனைக்கும் தறி வரி கொடுத்துக் கொண்டிருந்ததாய்ப் பொறிக்கப் பெற்றுள்ளது. அதிலிருந்து நம்மவர் இவ்வூரில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே வாழ்ந்திருப்பதாய்த் தெரிகிறது.



பேச்சு மேடையில் பெரும் புகழ்பெற விரும்புவோர்க்கு அச்சம்,
தயை, தாட்சண்யத்துக்குக் கட்டுப்பட்டு கருத்தை
அடகு வைக்கும் குணமும் இருத்தலாகாது.
காட்டுக் குதிரை மீதேறிச் செல்லும் முரட்டுச் சுபாவமும் இருத்தலாகாது.

- பேரறிஞர் அண்ணா.

# செங்குந்தர் கொடி வரலாறும் சிறப்பும்

## நமது குலக் கொடியின் சிறப்பு

நமது குலக்கொடி வெள்ளை நிறத் துணியில், நடுவே குந்தமும், அதன் வலது புறத்தில் சேவலும், இடது புறத்தில் புலியும் சின்னங்களாகக் கொண்டு விளங்குகிறது. அதனை நாம் உணர்ந்து, சிரம் தாழ்த்தி வணங்குதல் வேண்டும்.



### வெண்மை நிறம் :

வெண்மை நிறம் நேர்மையைத் தெரிவிப்பது, தூய்மையை விளக்குவது. எங்கும் எதிலும் தூய்மையாய் விளங்கும் குலமே செங்குந்தர் குலம் என்பதை வெண்மை நிறம் வெளிப்படுத்துகிறது.

### குந்தப்படை :

வீரபாகு முதலிய நவவீரர்கள் தோன்றியபோது, அவர்களுக்கு அன்னை ஆதிசக்தி கொடுத்த படையே குந்தப் படையாகும். முருகனுக்குத் துணையாய் இருந்து, சூரன் முதலிய அசுரர்களை அழித்தது இப்படையே. முசுகுந்தனை மன்னர் மன்னனாக்கி முசுகுந்த சோழன் என்று உலகம் புகழ வைத்ததும் இப்படையே. நமது ஏற்றமிகு கொடியின் நடு நாயகமாகக் குந்தம் விளங்குவது நாம் பெற்ற பேறாகும்.

### சேவற் சின்னம் :

முருகனது வேலுக்குத் தப்பியோடிய சூரபதுமன், கடலுக்குள் தலை கீழான மாமரமாய் நின்றான். அப்போது வேல் தப்பாது சென்று அம்மரத்தை இரு பிளவாக்கியது. அவைகளுள் ஒன்று மயிலாகவும் மற்றொன்று சேவலாகவும் வந்து முருகனை எதிர்த்தன.

முருகன் அருளால் மாயை நீங்கி மயிலும் சேவலும் இணங்கி வந்தன. அவற்றுள் மயிலை வாகனமாகவும் சேவலைக் கொடியாகவும் அவர் ஏற்றுக் கொண்டார். முருகனது கொடிச் சின்னம், நமது கொடியில் இருப்பது நாம் அவரது குலம் என்பதைக் காட்டவேயாகும்.

### புலிச் சின்னம் :

முருகப் பெருமான் சூரனைக் கொன்றபின் அவனது கொடியாகிய புலிக்கொடியை, வீரவாகுத் தேவரின் வீரத்திற்குப் பரிசாகத் தந்தார். புலிச்சின்னம் நவ வீரர்களின் அறம் நிறைந்த வீரத்திற்கும், அவர்கள் வழிவந்த செங்குந்தர் குலத்திற்கும் கிடைத்த பரிசாகும்.

சோழ மன்னர்களுக்கும் புலிச் சின்னமே கொடிச் சின்னம் ஆகும். வீரவாகுத் தேவரின் மகள் சித்திரவல்லியைச் சோழன் முசுகுந்தன் மணந்து கொண்டு அங்கிவன்மனைப் பெற்றான். வீரவாகுத் தேவர் புஷ்பகந்தியை மணந்து கொண்டு, அனகன் என்ற மகனைப் பெற்றார். புஷ்பகந்தி சோழ மரபில் தோன்றியவள்.

அங்கிவன்மனும், அனகனும் முறையே கருவூரிலும் காஞ்சியிலும் இருந்து கொண்டு சோழப் பேரரசை நடத்தி வந்தனர்.

எனவே, செங்குந்தர் குலம் சோழ மரபோடு இரண்டறக் கலந்து ஒரு காலத்தில் நாடு ஆண்ட குலம் என்பதையும் இப்புலிச் சின்னம் புகட்டுகிறது.

### நமது கடமை :

சொல்லிலே பொருளைக் காண்கிறோம், கல்லிலே கடவுளைக் காண்கிறோம்! அதுபோலவே, கொடியிலே, அது உணர்த்தும் கொள்கைகளைக் காண வேண்டும்.

அவ்வாறு, அவைகளை உணர்ந்து நாம் எடுக்கும் விழாக்கள் எதுவாயினும், அவற்றின் துவக்கத்தில் கொடியேற்றி, வணங்கி, நம் குலத்திற்கு நலம் தரும் உறுதி மொழிகளை எடுத்துக் கொள்ளுதல் என்றும் நமக்கு ஏற்றம் தரும்.

வாழ்க! வாழ்க! செங்குந்தர்
வெல்க! வெல்க! செங்குந்தம்!!

# செங்குந்தர் குலங்களின் வரிசை

1. 24 நாட்டு பட்டக்காரர் குலம்
2. கருமாண வாத்தியார் குலம்
3. வையாபுரி நாட்டு பட்டக்காரர் குலம்
4. வாரக்கநாட்டு பட்டம் (வெள்ளையம்மன் குலம்)
5. 6 நாட்டு பட்டக்காரர் குலம்
6. கணேசர் பட்டம் (சேவூரார் குலம்)
7. பட்டம் சமயம் (அன்னதானசோழர் குலம்)
8. நல்லதம்பிரான் குலம்
9. பூசங் குலம்
10. பூசாரி குலம்
11. குன்னத்தூரார் குலம்
12. கீரனூர் குலம்
13. பட்டி குலம்
14. ஒகாயனூரார் குலம்
15. வேட்டிகாரர் குலம்
16. அனந்தகுலம்
17. சிவியூரார் குலம்
18. சபையூரார் குலம்
19. ராக்கி குலம்
20. கருவலூரார் குலம்
21. காசி வேலன் குலம்
22. பீமன் குலம்
23. பட்டாளியர் குலம்
24. பாசியூரார் குலம்
25. பொஞ்சி குலம்
26. ஊமத்தூரார் குலம்
27. கணக்கன் குலம்
28. சென்னி குலம்
29. செம்மோரை குலம்
30. செந்தேவன் குலம்
31. புலிகுத்தி குலம்
32. சிறுவேங்கை குலம்
33. செம்பங் கருங்காலி குலம்
34. சாமக்குளத்தார் குலம்
35. குள்ளன் குலம்
36. மாகாளி குலம்
37. பெரிய குலம்
38. அன்னூரான் குலம்
39. அல்லாம்பழனி குலம் (அன்னம்)
40. பழனியூரார் குலம்
41. செல்லங்குளம்
42. உடையாங்குலம்
43. புகழூரார் குலம்
44. பெரிய குளத்தார் குலம்
45. சின்ன குளத்தார் குலம்
46. ஆனந்தம் குலம்
47. முருக கூட்டம்
48. கருது காளியம்மன் குலம்
49. அறுபதாங்குடி குலம்
50. வீரக்குமாரர் குலம்
51. கட்ராயன் குலம்
52. அம்பலவாணர் குலம்
53. அந்தியூரார் குலம்
54. பொன்தேவி குலம்
55. புலவனார் குலம்
56. நெய்க்காரங்கூட்டம் (சிவா கூட்டம்)
57. காரியூரார் கூட்டம்
58. பரமகாளி குலம்
59. பூந்துரையான் குலம்
60. காசாங் குலம்
61. கஞ்சி வேலாங் குலம்
62. பச்சையன் குலம்
63. ஆராங்குலம்
64. மணிகட்டி சடையன் குலம்
65. அண்ண மார் குலம்
66. அலங்காரன் குலம்
67. ஆண்டி குலம்
68. ஆனூரார் குலம்
69. இராசி குலம்
70. ஸ்ரீலஸ்ரீ பரஞ்சோதி குருக்கள்
71. எருமைக்காரர் குலம்
72. கன்னிமார் குலம்
73. காளமேகப்புலவர்
74. காடை குலம்
75. காஞ்சியாளன் குலம்
76. குழந்தை செட்டி குலம்
77. குமுட்டி காளி குலம்
78. கொம்மக்காளி குலம்
79. கொக்காணி குலம்
80. கொசப்பச்சையார் குலம்
81. கோட்டை மாரிகுலம்
82. சமயமுதலி குலம்
83. சிலம்பு முதலி குலம்
84. சின்னாஞ்செட்டி குலம்
85. சூரிய முதலி குலம்
86. செஞ்சி குலம்
87. தடிவீரர் குலம்
88. தாச முதலி குலம்
89. தாடிக்கொம்பர் குலம்
90. தீர்த்த முதலி குலம்
91. தீர்த்த கிரி குலம்
92. தூங்கணார் குலம்
93. பச்சையர் குலம்
94. புள்ளிக்காரர் குலம்
95. போக்கர் குலம்
96. மணல் கொடியார்
97. தொண்டை மண்டல சைவம்
98. மகிழி குலம்
99. மண்ணையர் குலம்
100. மாயன் குலம்
101. வாழ்த்து முதலி குலம்
102. வெள்ளை சித்தர் குலம்
103. வெள்ளை மணியகாரர் குலம்
104. வெள்ளியம்பர் குலம்
105. செம்பூத்தார் குலம்
106. ரங்கஜாலதண்டர் குலம்
107. காவா முதலி குலம்
108. கோட்டையண்ணன் குலம்
109. சொக்கநாதர் குலம்
110. கொத்துக்காரர்
111. கொத்துக்காட்டான்
112. கேரள கும்ப குலம்
113. பூண்டி பெரியதனக்காரர் குலம்
114. ஆயி குலம்
115. கோனங்குலம்
116. கைலாசகுலம்
117. அம்பலத்தார் குலம்
118. தம்பியண்ணன் குலம்
119. தட்டையநாட்டு தடிமாறன் குலம்
120. அரவாண்டார் குலம்





# தலைவர் வாழ்த்துரை

அன்பும், பண்பும், ஆன்மீகமும், வீரமும், விவேகமும் நிறைந்த செங்குந்த சொந்தங்களுக்கு, வணக்கம்.

எரிகின்ற அகல் விளக்கை அணையாமல் எண்ணெய் ஊற்றி பாதுகாப்பதைப் போல நம் முன்னோர்கள் நம் சங்கத்தை பாதுகாத்து வந்திருக்கின்றார்கள். நாம் தொடர்ந்து பாதுகாத்து அதனை சாதனைகளாக மாற்றுவோம். எதைக் கொடுக்கின்றோமோ அதையே திரும்பப் பெறலாம் இது இயல்பூக்க நியதி.

அதனால்தான், இளைஞர்கள் நம்பிக்கையோடு நம்மை நெருங்குகின்றார்கள். புது வெள்ளம் பாய்கின்றது. எந்த சக்தியாலும் செங்குந்தரின் வளர்ச்சியை தடுக்க முடியாது. இதற்கு சான்றுதான் 31.01.2016 அன்று சேலத்தில் நடைபெற்ற செங்குந்தர் மாநில மாநாடு மற்றும் நெசவாளர் எழுச்சிப் பேரணி.

முன்னோர்கள் ஆண்டுதோறும் நடத்தச் சொன்ன மாநாடுகளை நாம் 20 ஆண்டு காலத்திற்குப் பிறகு, தற்சமயம் வெற்றிகரமாக நடத்திக் காட்டியுள்ளோம். இது தொடரவேண்டும். இனிமேற்கொண்டு 3 ஆண்டுகளுக்கு ஒருமுறையாவது நாம் மாநில மாநாடு நடத்தி நம் மக்களை ஓரணியில் ஒன்று திரட்டி நம் ஒற்றுமையை பறைசாற்றுவோம்.

மாநாடு வெற்றிகரமாக நடைபெறுவதற்கு அல்லும் பகலும் உழைத்திட்ட சேலம் செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் மற்றும் உறுப்பினர்களுக்கும், சேலத்தைச் சார்ந்த 60 குழுக்களின் நிர்வாகிகள் மற்றும் உறுப்பினர்களுக்கும், செங்குந்த சொந்தங்களைத் திரட்டி வந்த தலைமைச் சங்க நிர்வாகிகளுக்கும், தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர்களுக்கும், மாவட்டத் தலைவர்களுக்கும், நகரத் தலைவர்களுக்கும், கிளைச் சங்கத் தலைவர்களுக்கும் மற்றும் உறுப்பினர் பெருமக்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வெற்றிக்கு துணை நின்ற இளைஞர் அணி, மகளிர் அணி, நெசவாளர் அணி, ஆன்மீக அணி, இலக்கிய அணி, விவசாய அணி, வழக்கறிஞர் அணி, ஆடிட்டர் அணி, வர்த்தகர் அணி, மாநில சொத்துப் பாதுகாப்புக் குழு, செங்குந்தமித்திரன் ஒருங்கிணைப்புக் குழு, மாநில செய்தித் தொடர்பாளர்கள் மற்றும் கொள்கைப் பரப்புச் செயலாளர்களுக்கும் மாங்கனி நகரை செங்குந்தர் மாநகர் என்று சொல்லும் அளவிற்கு வருகை புரிந்து சிறப்பித்த செங்குந்த சொந்தங்களுக்கும், நிதியுதவி, பொருளுதவி மற்றும் உடல் உழைப்பை அளித்த அனைத்து செங்குந்த சொந்தங்களுக்கும் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்



நன்றி!

அன்புடன்

KPK [illegible]

# சேலம் மாவட்டத் தலைவர் நன்றி மடல்

தென்னிந்திய செங்குந்தர்களின் 19-வது மாநில மாநாடு 31-01-2016 அன்று சீர்மிகு சேலத்தில் நடத்திட வேண்டும் என செங்குந்தர் சொந்தங்கள் அனைவரின் ஒருமித்த கருத்துடன் முடிவெடுக்கப்பட்டது. இம்மாநாடு நம் குலக் கடவுள் முருகப்பெருமான் அருளால் மிக சிறப்பாக நம் பாரம்பரிய கலாச்சாரத்தையும், இறை உணர்வுகளையும் உள்ளடக்கியதாக அமைந்தது. நாம் சுய கட்டுப்பாடுடனும், செயல்திறன் மிக்கவர்கள் என்பதையும் பறைசாற்றும் ஓர் எழுச்சிமிக்க மாநாடாக அமையப் பெற்றது. இந்த வெற்றிக்கு பின்னால் நம் செங்குந்த குல செம்மல்கள், இளைஞர்கள், ஆன்மீக குழு அன்பர்கள் என அனைத்து உறவினர்களின் மூலம் பிற சமுதாயத்தினரும் திரும்பி பார்க்கும் வகையில் அமைந்தது.

சேலத்தில் அரசியல் கட்சி தொடங்கி ஆன்மீக நிகழ்வுகள் வரை வரலாற்று சிறப்புமிக்க நிகழ்வாக நம் செங்குந்தர் நெசவாளர்களின் மாநாடு திருப்புமுனையாக அமைந்தது. இம்மாநாட்டின் நிகழ்வுகள் அனைத்தும் செவிவழி செய்தியாக இல்லாமல் இது வரலாற்று பெட்டகமாக இருக்க வேண்டும் என்ற சீரிய எண்ணத்தில் உருவான தொகுப்பே இம்மாநாட்டு மலர். சேலம் மாவட்ட செங்குந்த சொந்தங்களை சார்ந்த பெரியவர்கள், இளைஞர்கள், மகளிர், சிறுவர்கள் என அனைத்து தரப்பினரின் இன உணர்வுகளுடன் கூடிய அர்ப்பணிப்புகளுடன் சோர்வின்றி கடுமையாக உழைத்த உழைப்பினை மாநாட்டிற்கு வருகை புரிந்த அனைத்து சொந்தங்களும் நெஞ்சார வாழ்த்தியது சேலம் மண்ணிற்கு கிடைத்த மாபெரும் பெருமையாகும்.

சேலம் மாநாட்டின் மூலம் அரசியல் கட்சி மற்றும் அரசு அலுவலர்கள் வரை மாநாட்டின் செயல்பாடுகள், நம்முடைய ஒழுக்க கட்டுப்பாடு, வருகைபுரிந்த அனைவருக்கும் தங்குமிடம், உணவு மற்றும் வாகன ஏற்பாடுகள் என அனைத்தையும் எவ்வித இடைஞ்சலும், சிரமமும், தொய்வின்றி நடைபெற்றதற்கு சேலம் மாவட்ட செங்குந்தர்களின் ஓய்வறியா அர்ப்பணிப்பே சான்றாக அமைந்தது. சேலம் மாநாட்டினை நடத்த அனுமதி வழங்கிய தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க தலைவர் திரு.K.P.K.செல்வராஜ் அவர்களுக்கும் அனைத்து தரப்பு நிர்வாகத்தினருக்கும் எங்களின் நெஞ்சார்ந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கின்றோம். இதே போன்று மாநாடு மலர் வெளியிட உதவிபுரிந்த அனைத்து நல்உள்ளங்களுக்கும் எங்களின் உணர்வுபூர்வமான நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம்.

நம்முடன் எல்லா செயல்களிலும் உறுதுணையாக இருந்து செயலாக்கத்தினை அளித்த நம் குல கடவுள் முருகபெருமானுக்கு கோடான கோடி நன்றியினை காணிக்கையாக சமர்பிக்கின்றோம்.

பாசமிகு

**U.V. சடையப்பன்,** தலைவர்,

சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம்





# மாநில மாநாடு வரவேற்புக்குழு



தலைவர்

திரு. U.V.சடையப்பன்

## உறுப்பினர்கள்



திரு. K.ராஜப்பன்



திரு. P.தங்கவேல்



திரு. தாரை A.குமரவேல்



திரு. K.P.மகாலிங்கம்



திரு. P.ராஜகோபால்



திரு. A.லோகநாதன்



திரு. M.செந்தில்நாதன்



திரு. K.P.நக்கீரன்



திரு. G.ஸ்ரீனிவாசன்



திரு. A.P.தேவராஜன்



திரு. K.P.N.முத்துவேலாயுதம்



திரு. S.சரவணன்







# 19வது மாநில மாநாடு மற்றும்

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 19 வது மாநில மாநாடு மற்றும் நெசவாளர் எழுச்சிப் பேரணி 31.01.2016 அன்று சேலம் மாநகரில் வள்ளல் சபாபதி கலையரங்கத்தில் காலை 9.00 மணிக்கு மங்கள இசையுடன் தொடங்கியது.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் திரு. K.P.K.செல்வராஜ் அவர்கள் அம்மாப் பேட்டையில் உள்ள செங்குந்தர் அருள்மிகு குமரகுரு சுப்ரமணிய சுவாமி திருக்கோயில், செங்குந்தர் மாரியம்மன் கோயில்களில் தரிசனம் செய்துவிட்டு செங்குந்தர் குலக்கொடியை ஏற்றிவைத்தார்.

அம்மாப்பேட்டை காலனியில் உள்ள திரு. A.மாரியப்பன் Ex.MLA., நினைவிடத்தில் மலரஞ்சலி செலுத்தி, திருவுருவப் படத்திற்கு ஆரத்தி காட்டி வணங்கி,அவரது சிலைக்கு மாலை அணிவித்து மரியாதை செலுத்தினார்.













# நெசவாளர் எழுச்சிப் பேரணி

பின்னர் ஐந்து ரோட்டில் உள்ள திருப்பூர் குமரன் ஸ்தூபிக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

சேலம் பழைய பேருந்து நிலையம் அருகில் உள்ள பேரறிஞர் அண்ணா சிலைக்கு மலர் மாலை அணிவித்து மரியாதை செய்தார்.

அதனைத் தொடர்ந்து தலைவர் திரு. K.P.K.செல்வராஜ் அவர்கள் மாநாட்டு வளாகத்தில் உள்ள அறிஞர் அண்ணா கொடி மேடையில் நமது குலக் கொடியை ஏற்றி வைத்தார்கள்.



தலைவர் மற்றும் மெட்டல் திரு. M.மணி, திரு.R.திருநாவுக்கரசு, திரு.R.காந்தி, உடுமலை திரு. மு.சிவசண்முகம், திரு.R.P.குமரகுருபரன், திரு.க.பாலசுப்ரமணியம், திரு.M.K.S.உத்தண்டி, திரு.P.மாரிமுத்து, அனைவரும் குத்து விளக்கேற்றிய பின் விழாவினைத் தொடங்கி வைத்தார்கள்.

நண்பகல் 11.00 மணியளவில் பழனி உமா கலைக்கூடத்தின் பரதநாட்டியம் நிகழ்ச்சி தொடங்கியது. இந்நிகழ்ச்சிக்கு தெ.செ.ம. சங்கத் துணைத் தலைவர் திரு. V.சிவா, அவர்கள் தலைமை தாங்கினார்,

மார்கழி பெருவிழா கமிட்டி தலைவர் திரு. A.K. பழனியப்பன், சேலம் செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் திரு. A.லோகநாதன், மாநில ஆடிட்டர் அணி துணை அமைப்பாளர் திரு. M.சிவக்குமார் ஆகியோர் முன்னிலையில் நடைபெற்றது.



செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணி & மாநாடு பொதுக்கூட்டம்

19வது

செங்குந்தர் மகாஜன மாநாடு

மாநில இளைஞரணி துணை அமைப்பாளர் திரு. M.செந்தில்நாதன் அவர்கள் செங்குந்தர் உறுதிமொழி வாசித்தார்.

தெ.செ.ம. சங்கச் செயலாளர் திரு. ப.இராஜாக்கண்ணு அவர்கள் விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார்.

காலை 11.35 மணிக்கு கவியரங்கம் தெ.செ.ம. சங்கத் துணைத் தலைவர் திரு. மெட்டல் M.மணி அவர்களின் தலைமையிலும், சேலம் மாவட்டச் செங்குந்த மகாஜன சங்கச் செயலாளர் திரு.K.ராஜப்பன், சண்முகா மருத்துவமனை நிர்வாக இயக்குனர் திரு. Dr S.பன்னீர்செல்வம், சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்க உபதலைவர் திரு.K.P.மகாலிங்கம் ஆகியோர் முன்னிலையிலும் நடைபெற்றது.

தெ.செ.ம. சங்கத்தின் செயலாளர் திரு.K.கருணாநிதி அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்.

"இவர்கள் பேசினால்" என்ற தலைப்பில் கவிஞர் க.சத்தியசீலன் அவர்கள் திருமுருக கிருபானந்த வாரியாராகவும், கவிஞர் க.சந்திரசேகரன் அறிஞர் அண்ணாவாகவும், கவிமாமணி சேலம் பாலன் அவர்கள் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தராகவும், கவிமாமணி மழைமகன் நெசவாளர் நேசன் ஜெ.சுந்தரானந்தனாகவும், புலவர் ப.பார்த்திபன் பாவேந்தர் பாரதிதாசனாகவும் தங்களுடைய கருத்துக்களை எடுத்துக் கூறினார்கள்.

காலை 12.00 மணியளவில் புத்தக வெளியீடு திரு. வெ. தண்டபாணி துணைத் தலைவர், தெ.செ.ம.சங்கம் அவர்கள் தலைமையிலும், திரு. M.லோகநாதன் சேர்மன், சேலம் இன்ஜினியரிங் காலேஜ், திரு. S.சரவணன் தலைவர் சேலம் மாவட்ட உள்ளூர் குழுத் தலைவர், திரு. T.இராஜாமணி செயல் தலைவர், கடலூர் மாவட்ட செ.ம.சங்கம் ஆகியோர் முன்னிலையிலும் விழா தொடங்கியது.

திரு. க. பாலசுப்ரமணியம் செயலாளர், தெ.செ.ம. சங்கம் அவர்கள் வரவேற்புரை ஆற்றினார். அனிதா. கு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் எழுதிய "செங்குந்தர் வரலாறு" என்ற நூலை திரு. A.S.வெங்கடாசலம் அமைப்பாளர் மாநில ஆடிட்டர் அணி அவர்கள் வெளியிட திரு. S. N. சரவணன் அமைப்பாளர் மாநில செய்தி தொடர்பாளர்கள் அணி அவர்கள் பெற்றுக்கொண்டார். விஜய் சண்முகம் அவர்கள் தொகுத்த "சிஎஸ்ஆர் வித்தக வாழ்க்கை" என்ற நூலை கயிலைமாமணி திரு. V.G.T.வேலு அமைப்பாளர் மாநில ஆன்மிக அணி அவர்கள் வெளியிட திரு.S.ராஜகம்பீரன் அமைப்பாளர் மாநில விவசாய அணி அவர்கள் பெற்றுக்கொண்டார். வாரியார்தாசன் அவர்கள் எழுதிய "பதின்மரைப் போற்றுவோம்" என்ற நூலை திரு.K.பாரதி அமைப்பாளர் மாநில வழக்கறிஞர் அணி அவர்கள் வெளியிட Dr.S.தங்கவேல் திருப்பூர் குமரன் சிலை அமைப்புக்குழு அவர்கள் பெற்றுக்கொண்டார்.

பகல் 12.30 மணியளவில் மாநாட்டுச் சிறப்பு மலர் வெளியிடப்பட்டது. இவ்விழாவிற்கு திரு.



M.K.S.உத்தண்டி துணைத் தலைவர் தெ.செ.ம. சங்கம் அவர்கள் தலைமையிலும், திரு.P.வேலுச்சாமி தலைவர், செங்குந்தர் கல்யாண மண்டபம், அம்மாப் பேட்டை, திரு. M.சுப்ரமணியம் (சங்கு ராஜு), தலைவர், ஸ்ரீ காமாட்சி அம்மன் கல்யாண மண்டபம் திருப்பூர், திரு. P.சுந்தரம் & பிரதர்ஸ் நிர்வாக இயக்குநர், கோல்டன் ஸ்பின்னிங் மில்ஸ் அவர்கள் முன்னிலையிலும் நடைபெற்ற மாநாட்டு சிறப்பு மலரை திரு. V.P.சிவக்கொழுந்து தலைவர் புதுவைச் செங்குந்தர் கல்விச் சங்கம் அவர்கள் வெளியிட திரு. S.K.C. குப்புசாமி, கௌரவத் தலைவர், செங்குந்த மகாஜன சங்கம், திண்டுக்கல், திரு. P.கோவிந்தசாமி செயலாளர், கடலூர் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கம், திரு. K.P.N.முத்துவேலாயுதம், செயலாளர், திருப்பூர் தெற்கு மாவட்ட செ.ம. சங்கம் ஆகியோர் பெற்றுக் கொண்டனர்.



பகல் 1.00 மணியளவில் பட்டிமன்றம் தொடங்கியது. திரு. R.P.குமரகுருபரன் துணைப் பொதுச் செயலாளர் தெ.செ.ம.சங்கம் அவர்கள் தலைமையிலும் திரு. T.புகழனார் துணை அமைப்பாளர் மாநில ஆன்மீக அணி, திரு. P.P.மாதேஷ்வரன் தலைவர், துர்க்கையம்மன் வார வழிபாட்டுக் குழு, சேலம், வழக்கறிஞர் திரு. M.சிங்காரவேல் ஆகியோர் முன்னிலையிலும் நடைபெற்றது. திரு P.K.குருநாதன் சங்க அமைப்புச் செயலாளர், தெ.செ.ம.சங்கம் அவர்கள் வரவேற்புரையாற்றினார். சமூக அங்கீகாரம் பெற பெரிதும் துணை நிற்பது அரசியல் பணியா? அறப் பணியா? என்ற தலைப்பில் பட்டிமன்றம் தொடங்கியது.




நடுவராக மாநில இலக்கிய அணியின் அமைப்பாளர் பேராசிரியர் திரு.Aபாலதண்டபாணி அவர்களும், அரசியல் பணியா? என்ற தலைப்பில் திரு.சோ.காசிநாதன், திரு. வே.செந்தில்குமரன், திரு. P.S.ஜெய்கணேஷ் ஆகியோரும், அறப்பணியா? என்ற தலைப்பில் திரு. S.சோலைமுத்து, பேரா. அரசு பரமேஸ்வரன், திருமதி. திலகவதி சண்முகசுந்தரம் ஆகியோரும் சிறப்பாக விவாதம் செய்தனர். இறுதியில் அரசியல் பணியே சமூக அங்கீகாரம் பெற பெரிதும் துணை நிற்கின்றது என்ற ஆழமான அர்த்தமான தீர்ப்பை நடுவர் வழங்கினார்.





மதியம் 3.00 மணியளவில் சேலம் அம்மாப் பேட்டை செங்குந்தர் திருமண மண்டபத்தில் செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணிக்கு அனைத்து மாவட்டங்களில் இருந்தும் இலட்சக் கணக்கான செங்குந்த சொந்தங்கள் பெண்கள், குழந்தைகள், பெரியவர்கள் என குடும்பங்களாகக் கலந்து கொண்டனர்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் மாநிலத் தலைவர் கைத்தறிக் கதிரவன் திரு. K.P.K.செல்வராஜ் அவர்கள் தலைமை ஏற்று பேரணியைக் கொடியசைத்து துவக்கி வைத்தார். அருகில் மாநாட்டுப் பொருளாளர் கோல்டன் திரு.P.தங்கவேல், P.P.ராஜகோபால், உடுமலை மு.சிவசண்முகம், நக்கீரன், சரவணன் ஆகியோர் உடனிருந்தனர்.

திருமதி வசந்தா சுத்தானந்தன் அமைப்பாளர், மாநில மகளிர் அணி, திரு.K.தேவகிருஷ்ணன் அமைப்பாளர், மாநில நெசவாளர் அணி, திரு. M.உமாபதி மாநில சொத்துப் பாதுகாப்புக்குழுத் தலைவர் ஆகியோர் முன்னிலை வகித்தனர். பேரணியை திரு P.மாரிமுத்து அமைப்பாளர் மாநில இளைஞர் அணி அவர்களும், துணை

அமைப்பாளர்கள் திரு.பொ.சக்திமோகன், திரு. சு.முத்துமாரி, திரு. V.பழனி, திரு. து.ப. புனிதம், திரு.M. மணிகண்டன், திரு. வ. இராமதாஸ், திரு.M A.முருகன், திரு.B.தினேஷ்குமார், திரு.B.மதிவாணன், திரு. M.செந்தில்நாதன், திரு.A.கணேசன், திரு.M. அறிவழகன், திரு. G.ஆறுமுகம் ஆகியோரும் முன்னின்று வழி நடத்திச் சென்றனர்.

பலத்த ஆரவாரங்களுக்கிடையே நாதஸ்வரம் இசைக்க தேவாரப் பாடல்கள் ஓங்கி ஒலிக்க புறப்பட்டது நெசவாளர் செங்குந்தர் படை, இப் படை தோற்கின் எப்படை வெல்லும் என்று வீர முரசொலிக்க கோலாட்டம், சிலம்பாட்டம், ஒயிலாட்டம், கரகாட்டம், டிரம்ஸ், தாரை தப்பட்டைகள், செண்டை மேளம் தாளத்துடன் செங்குந்த விருத்தங்கள் எங்கும் ஒலிக்க தியாகி திருப்பூர் குமரன் திடல் நோக்கி பேரணி புறப்பட்டது.

விதவிதமான இரதங்களில் தங்கள் மாவட்டத்தின் பெருமைகளை பறை சாற்றும் வண்ணம் சிறப்பாக செய்து ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். வழி நெடுகிலும் செங்குந்த சொந்தங்கள் குதிரைகள் பூட்டப்பட்ட சாரட் வண்டியில் வந்த நமது தலைவருக்கு மலர் தூவி, மாலை அணிவித்து பொன்னாடை போர்த்தினர்.

சேலம் மாநகரமே விழாக்கோலம் பூண்டது. செங்குந்தர் புகழ் ஓங்குக, செங்குந்தம் வெல்க, தலைவர் வாழ்க என்று கோசங்கள் இட்டு செங்குந்த























சொந்தங்கள் சேலம் நகரை செங்குந்தர் நகரம் என்று அழைக்கும்படி கூடி சிலிர்க்க வைத்தனர். திரும்பிய திசையெல்லாம் செங்குந்தரே, பார்க்கும் கொடியெல்லாம் செங்குந்தக் கொடிகளே நிறைந்திருந்தது. வர்ணிக்க வார்த்தைகளை ஒட்டக் கூத்தரிடமும், பாரதிதாசனிடமும் கடன் வாங்க வேண்டியிருந்தது. இப்படியொரு கூட்டத்தை சேலம் மாநகர் கண்டதில்லை என்று சொல்லும் அளவிற்கும் இனி செங்குந்தரை தவிர வேறு யாரும் சேலத்தை குலுங்க வைக்கப் போவதில்லை என்றும் சொல்ல வைத்து சரித்திர சாதனை புரிந்தது நம் செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணி.

தங்கள் வீட்டு விழாக்கள் போல அனைவருடைய மனதிலும் மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரண்டோடியது. மாலை 6.00 மணிக்கு கரை புரண்டோடிய வெள்ளம்



போல மக்கள்கூட்டம் ஆர்ப்பரித்து வந்த போதும் எந்த சேதாரமும் இல்லாமல் அமைதியான முறையில் தியாகி திருப்பூர் குமரன் திடலில், நெசவாளர் நேசன் J.S. அரங்கத்திற்கு பேரணி வந்தடைந்தது. அரங்கமே நிரம்பி வழிந்தது. மாநாடு சிறக்க இலட்சக்கணக்கான செங்குந்த சொந்தங்கள் திரண்டு வந்தனர்.

20 வருடம் கழித்து நடந்த மாநாடு, இதுவரையில் தமிழகத்தில் எத்தனை மாநாடுகள் நடந்திருந்தாலும் அத்தனையையும் மிஞ்சும் வகையில் செங்குந்த சொந்தங்கள் கூடி எல்லையில்லா மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்.







இரவு 7.00 மணியளவில் இளைஞர் அணியினர் தலைவர் K.P.K. அவர்களை தங்கள் தோளில் தூக்கி வந்து தங்கள் அன்பை வெளிப்படுத்தினர், தலைவர் மேடைக்கு வர வாணவேடிக்கைகள் திருவிழாவை மிஞ்சியது. வானம் வண்ணமயமாக ஜொலித்தது. அமைதிப் புறா பறக்கவிடப்பட்டது. பறக்க விடப்பட்ட அந்தப் புறாக்களோ அமைதியான குணங்களை உடைய நம் சொந்தங்களை சிறிது நேரம் அமர்ந்து பார்த்து விட்டு, பறந்து சென்றன. இறை வணக்கத்தை பன்னிரு திருமறைகள் குழுவினர் பாடி மேடை நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தார்கள்.

செங்குந்தர் உறுதிமொழியை மாநாட்டு வரவேற்புக்குழு ஒருங்கிணைப்பாளர் திரு.K.P.நக்கீரன் அவர்கள் வாசிக்க அனைவரும் எழுந்து நின்று உணர்ச்சிப் பெருக்கோடு திரும்பச் சொல்லி அரங்கத்தையே அரங்க வைத்தனர்.



பிரமாண்ட இந்த விழாவிற்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவர், செங்குந்தர்களின் விடிவெள்ளி கைத்தறிக்கதிரவன் திரு. K.P.K.செல்வராஜ் அவர்கள் தலைமை ஏற்றார்.

பெண்ணாடம் திரு. ஆ.ராஜவேலு - முன்னாள் தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம், திரு. K. பரஞ்ஜோதி - புரவலர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம், திரு. S.ராமகிருஷ்ணன் - தலைவர், சமுதாய பொருளாதார தொண்டு மன்றம், Jansons T.S.நடராஜன் - எழுகரை செங்குந்தர் பாவடி பஞ்சாயத்து நாட்டாமைக்காரர், திரு. K.K.ராமச்சந்திரன் - சேர்மன் ஷார்ப் நிறுவனங்கள், திரு.S.லட்சுமணன் -தொழிலதிபர் அபுதாபி, கோல்டன் திரு. P.தங்கவேல் - மாநாட்டுப் பொருளாளர், திரு. P.P.ராஜகோபால் - தலைவர்









இரவு 7.00 மணியளவில் இளைஞர் அணியினர் தலைவர் K.P.K. அவர்களை தங்கள் தோளில் தூக்கி வந்து தங்கள் அன்பை வெளிப்படுத்தினர், தலைவர் மேடைக்கு வர வாணவேடிக்கைகள் திருவிழாவை மிஞ்சியது. வானம் வண்ணமயமாக ஜொலித்தது. அமைதிப் புறா பறக்கவிடப்பட்டது. பறக்க விடப்பட்ட அந்தப் புறாக்களோ அமைதியான குணங்களை உடைய நம் சொந்தங்களை சிறிது நேரம் அமர்ந்து பார்த்து விட்டு, பறந்து சென்றன. இறை வணக்கத்தை பன்னிரு திருமறைகள் குழுவினர் பாடி மேடை நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தார்கள்.

செங்குந்தர் உறுதிமொழியை மாநாட்டு வரவேற்புக்குழு ஒருங்கிணைப்பாளர் திரு.K.P.நக்கீரன் அவர்கள் வாசிக்க அனைவரும் எழுந்து நின்று உணர்ச்சிப் பெருக்கோடு திரும்பச் சொல்லி அரங்கத்தையே அரங்க வைத்தனர்.



பிரமாண்ட இந்த விழாவிற்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவர், செங்குந்தர்களின் விடிவெள்ளி கைத்தறிக்கதிரவன் திரு. K.P.K.செல்வராஜ் அவர்கள் தலைமை ஏற்றார்.

பெண்ணாடம் திரு. ஆ.ராஜவேலு - முன்னாள் தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம், திரு. K. பரஞ்ஜோதி - புரவலர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம், திரு. S.ராமகிருஷ்ணன் - தலைவர், சமுதாய பொருளாதார தொண்டு மன்றம், Jansons T.S.நடராஜன் - எழுகரை செங்குந்தர் பாவடி பஞ்சாயத்து நாட்டாமைக்காரர், திரு. K.K.ராமச்சந்திரன் - சேர்மன் ஷார்ப் நிறுவனங்கள், திரு.S.லட்சுமணன் -தொழிலதிபர் அபுதாபி, கோல்டன் திரு. P.தங்கவேல் - மாநாட்டுப் பொருளாளர், திரு. P.P.ராஜகோபால் - தலைவர்







நண்பர்கள் குழு சேலம் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

மாநாட்டு வரவேற்புக்குழு தலைவர் திரு. U.V.சடையப்பன் அவர்கள் தனது வரவேற்புரையில் மேடையிலே வீற்றிருக்கும் அனைத்துப் பெரியோர்களையும் பெயரைச் சொல்லி அருமையாக வரவேற்புரையைத் தொடங்கினார். மாநாட்டிற்கு "கர்நாடகா, கேரளா, ஆந்திரா, பாண்டிச்சேரி போன்ற மாநிலங்களிலிருந்தும், தமிழ்நாட்டைச் சேர்ந்த அனைத்து மாவட்டங்களிலிருந்தும், ஆக்கமும் ஊக்கமும், செங்குந்தர் என்ற இன உணர்வுடன் தங்களால் முடிந்த பொருளுதவியும், உடல் உழைப்பையும் ஈன்று வருங்கால வாரிசுகளின் வேர் ஊன்றி ஆழ்போல் தழைக்க அரும்பாடுபட்டு எழுச்சிமிக்க இம்மாநாடு சிறக்க லட்சக்கணக்கில் அணிஅணியாகத் திரண்டு வந்துள்ள அனைத்து சொந்தங்களுக்கும் நன்றியுணர்வுடன் வருக வருக என பாசமுடன் வரவேற்கிறேன்.

அனைத்துக்கும் மேலாக இரண்டு மாதங்களாக இரவு பகல் பாராமல் தங்களையே அர்ப்பணித்து அனைத்துப் பணிகளையும் சேலம் மாவட்ட செங்குந்த சங்க ஒரு குடையின் கீழ் உள்ளூர் சொந்தங்களும், அம்மாப்பேட்டை நண்பர்கள் குழுவும், ஆன்மீகத் தொண்டாற்றி வரும் 57 விழாக் குழுவின் உறுப்பினர்களும், பாசமுள்ள எழுச்சியுடன் சேவையாற்றிவரும் நமது சொந்தங்களும் பொறுப்புகளைத் திட்டமிட்டு செயலாற்றிவரும் கோல்டன் P.தங்கவேல், P.P.ராஜகோபால், A.லோகநாதன், K.P.நக்கீரன், S.சரவணன், M.செந்தில்குமார் மற்றும் மாநாட்டுப் பணிக்குழுக்களும், அம்மாபேட்டை இளைஞர் சமுதாயத்தையும் வருக வருக என வரவேற்கின்றேன்.

















மாநாடு சிறப்பாக நடைபெற இந்த இடத்தை மாநகராட்சி மூலம் ஏற்பாடு செய்து கொடுத்த திரு. பச்சையப்பன், திரு.J.மாணிக்கம் அவர்களையும், இம்மாநாடு சிறப்பாக நடைபெற ஒத்துழைப்பு நல்கிவரும் காவல்துறை யினரையும் வருக வருக என வரவேற்கின்றேன். என வரவேற்று சிறப்பானதொரு வரவேற்புரையை ஆற்றினார்.

புதுச்சேரி சட்டமன்ற உறுப்பினர்கள் திரு.K.வைத்தியநாதன், திரு. ம.விஸ்வேஸ்வரன், திரைப்பட இயக்குநர் R.K.செல்வமணி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

தலைமையுரையை தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தலைவர் கைத்தறிக் கதிரவன் திரு. K.P.K.செல்வராஜ் அவர்கள் வந்திருந்த செங்குந்த சொந்தங்கள் உற்சாகம் பொங்க, பலத்த கரவொலிக்களுக்கு இடையே தன் உரையைத் தொடங்கினார். தலைவரின் பேச்சை அலைகட லென வந்த கூட்டம் அமைதியாக கேட்டுக் கொண்டிருந்தது. அவரது உரை செங்குந்தர் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவைகள், இந்த நாள் செங்குந்தர் வாழ்வில் ஒரு திருப்புமுனை, முடங்கிக்கிடந்த செங்குந்த





சொந்தங்களை முன்னேற்றத்திற்கு பாதை வகுத்த தினம். தலைவர் பேசப் பேச ஒவ்வொரு நொடியும் கரவொலி விண்ணைப் பிளந்தது.

தலைவருக்கு கடலூர் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வெற்றிவேல் வழங்கப்பட்டது.

இளைஞர் அணியின் அமைப்பாளர்கள், துணை அமைப்பாளர்கள் சார்பில் ஆளுயர மாலை அணிவித்து வெற்றிவேல் வழங்கப்பட்டது.

ஈரோடு மாவட்டம் புன்செய் புளியம்பட்டி செங்குந்தர் அறக்கட்டளை, செங்குந்தர் திருமண தகவல் மையத்தின் சார்பில் கைத்தறி ராட்டை கண்ணாடிப் பெட்டியில் வைத்து நினைவுப் பரிசாக வழங்கப்பட்டது.

வேலூர் மாவட்டம் பெரியாங்குப்பம் வீர செங்குந்த நெசவாளர் சங்கத்தின் சார்பில் கைத்தறி மாதிரி நினைவுப் பரிசு வழங்கப்பட்டது.

மதுரை மாவட்ட செங்குந்தர் இளைஞர் அணி சார்பாக மதுரை கோபுர மாதிரி நினைவுப் பரிசாக வழங்கப்பட்டது.

சேலம் மாவட்டத்தின் சார்பில் வெற்றி வெள்ளி வேல் வழங்கி ஆளுயர மாலை அணிவிக்கப்பட்டது.

விழுப்புரம் மாவட்டம் கண்டாச்சிபுரம் செங்குந்த மகாஜன சங்கத்தைச் சார்ந்த நா.விஜயஆனந்த் அவர்கள் தலைவர் படம் பொறித்த நினைவுப் பரிசு வழங்கினார்.



மாநாட்டு வரவேற்புக்குழு ஒருங்கிணைப்பாளர் K.P.நக்கீரன் சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத் துணைச் செயலாளர் S.சரவணன் ஆகியோர் நம் குலக் கடவுள் முருகனின் அலங்காரப் படத்தை நினைவுப் பரிசாக வழங்கினர்.

ஆத்தூர் கெங்கவல்லி வட்டம் செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பாக நினைவுப் பரிசு வழங்கப்பட்டது.

சிறப்பு அழைப்பாளர்களாக வந்திருந்த பாரதிய ஜனதா கட்சியின் தேசியச் செயலாளர் திரு.H.ராஜா அவர்கள் அரசியல் கட்சி மாநாடு போல் இருந்த கூட்டத்தைப் பார்த்து பிரமிப்பு அடைந்தார். அவருக்கு தலைவர் பொன்னாடை அணிவித்து கௌரவித்தார்.

மாநாட்டுத் தீர்மானங்களை தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் பொதுச்செயலாளர் திரு. S.திருமாவளவன் வாசித்தார்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் பொருளாளர் தாரை திரு. அ.குமரவேலு அவர்கள் நன்றியுரையாற்றினார்.

மாநாட்டு வரவேற்புக்குழு உறுப்பினர் திரு. K.P. நக்கீரன் மேடை நிகழ்ச்சியின் ஒருங்கிணைப் பாளராகவும், மாநில இலக்கிய அணி அமைப்பாளர் பேராசிரியர் திரு A.பாலதண்டபாணி அவர்கள் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார்.

நிகழ்ச்சி நெறியாளர்களாக மதுரை மாவட்டத் தலைவர் திரு. R.காந்தி, திருப்பூர் மாவட்டத் தலைவர் திரு. A.R.செல்வராஜ் அவர்களும் நிகழ்ச்சி நெறியாளர்களாக நிகழ்ச்சியை செம்மைப்படுத்தினர்.





















இந்நிகழ்ச்சியில் கலந்து கொண்ட நம் இனச் சொந்தங்கள் மாநாட்டு வரவேற்புக்குழு தலைவர் திரு.U.V.சடையப்பன் அவர்கள், மாநாட்டுப் பொருளாளர் திரு. கோல்டன P.தங்கவேல் அவர்கள், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க பொருளாளர் தாரை, அ.குமரவேல் அவர்கள், சேலம் மாவட்ட செயலாளர் திரு.K.ராஜப்பன் அவர்கள், சமுதாய நல இயக்குனர் திரு.P.P.ராஜகோபால் அவர்கள், துணைத்தலைவர்கள் திரு. A.லோகநாதன் மாநாட்டுக்குழு உறுப்பினர் திரு. G.சீனிவாசன், தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர் M.செந்தில்நாதன் ஆகியோர் மேடை நிர்வாகத்தை சிறப்பாக செய்திருந்தனர்.

சேலத்தைச் சார்ந்த 60 குழுக்களின் நிர்வாகிகள் மற்றும் உறுப்பினர்கள் அனைத்து நிகழ்ச்சிகளிலும் பங்கு பெற்று விழா சிறப்பிக்க பெரிதும் துணை புரிந்தனர். மாநாட்டிற்கு வந்திருந்தவர்கள் அனைவரையும் வருக வருக என வரவேற்று 3 வேளையும் சுவையான உணவு பரிமாறப்பட்டது. தனித்தனி குழுக்கள் அமைத்து வந்திருந்த அனைவரும் பாதுகாப்பாக திரும்பிச் செல்ல வேண்டிய வகையில் சிறப்பாக செய்திருந்தனர்.

இம்மாநாட்டை வெற்றிகரமாக்கியதில் முக்கியப் பங்கு சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்க நிர்வாகிகள் மற்றும் உறுப்பினர்கள் என்றால் மிகையாகாது.








அவர்கள், ஆண்டவர் திரு.P.வெங்கடேஸ்வரன் அவர்கள், திரு.K.P.மகாலிங்கம் அவர்கள், திரு.M.செந்தில்நாதன் அவர்கள், இணைச் செயலாளர்கள் திரு.K.P.நக்கீரன் அவர்கள், திரு.S.சரவணன் அவர்கள், திரு.S.K.A.M. பாலசுப்ரமணியம் அவர்கள், கிளைச் சங்கங்கள் வளர்ச்சிப்பணி நெறியாளர் திரு.லிபரா. A.P.பழனிசாமி அவர்கள், ஜவுளி நெசவுத்துறை ஒருங்கிணைப்பாளர் திரு. C.பாலசுப்ரமணி அவர்கள் திருமண தகவல் நிலைய இயக்குநர் திரு.K.பாலகிருஷ்ணன் அவர்கள், மற்றும் திரு. M.லோகநாதன் அவர்கள், திரு.S.பாலு அவர்கள், திரு. A.K.பழனியப்பன் அவர்கள், திரு. K.கைலாசம் அவர்கள், திரு.M.தங்கவேல் அவர்கள், இளைஞரணி செயல்வீரர் திரு.M.செந்தில்குமார் அவர்கள் மற்றும் கிளைச்சங்க நிர்வாகிகள், அனைத்து மாவட்ட சங்க நிர்வாகிகள், சேலம் மாவட்டத்தை சார்ந்த இளைஞரணி நிர்வாகிகள் மற்றும் மகளிரணி நிர்வாகிகள் மாரியம்மன் பண்டிகைகால விழா குழுவை சார்ந்த 60 நண்பர்கள் குழு தலைவர் மற்றும் நிர்வாகிகளும், அம்மாப்பேட்டையில் உள்ள செங்குந்த சொந்தங்களும் பெரும் திரளாக கலந்து கொண்டு இம்மாநாட்டை சிறப்பாக நடத்தி கொடுத்தார்கள்.



# தலைவரின் மாநாட்டு உரை

ஆயிரம் கைகள் மறைத்து நின்றாலும் ஆதவன் மறைவதில்லை; ஆயிரம் கருத்து வேற்றுமைகள் இருந்தாலும் செங்குந்தனை வெல்லுவதற்கு யாரும் பிறக்கவில்லை!

வசனம் நன்றாகத்தான் இருக்கிறது; 20 ஆண்டு கால ஏக்கம், ஒரு தலைமுறையே மறந்துவிட்டோம். ஒரு மாநாடு போடுவதற்கு. 19வது மாநாடு கூட்டினோம்; சேலம் குலுங்கி விட்டது!



இந்த மாநாடு இந்த போஸ் மைதானத்தில் அனுமதி கொடுத்தால் மட்டுமே போட முடியும் என்று சொன்னேன். இல்லையென்றால் மாநாடு செங்குந்தனுக்கு இனியும் கிடையாது என்று சொன்னேன். போஸ் மைதானத்தில் மாநாடு நடத்த அனுமதி கிடைத்தது. தியாகி திருப்பூர் குமரன் திடலிலே இம்மாநாடு சிறப்பாக நடைபெற்றுக் கொண்டி ருக்கிறது.

இன்றைய விழாவை சிறப்பாக நடத்திக் கொண்டிருக்கும் சேலம் மாவட்ட செங்குந்த மகாஜன சங்கத்திற்கு முதற்கண் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

சும்மா வருவதல்ல மாநாடு! எத்தனை வேலைகள்; எத்தனை எத்தனை ஆட்கள்! இத்தனை பேருடைய உழைப்பும் சேர்ந்துதான் இந்த சேலம் மாநாட்டிற்கு வெற்றிக் கங்கணமாக அமைந்திருக்கின்றது.

வரவேற்புரையாற்றிய திரு. U.V.சடையப்பன் ஐயா அவர்களே, வாழ்த்துரை வழங்க வந்துள்ள புதுச்சேரி சட்டமன்ற உறுப்பினர் திரு.



மு.வைத்தியநாதன் ஐயா அவர்களே, புதுச்சேரி சட்டமன்ற உறுப்பினர் திரு. ம.விஸ்வேஸ்வரன் ஐயா அவர்களே, சிறப்பு அழைப்பாளராக நம்மிடையே வந்திருக்கும் பாரதிய ஜனதா கட்சியின் தேசியச் செயலாளர் H.ராஜா அவர்களே, தமிழ்நாடு திரைப்பட இயக்குநர் சங்கத்தின் பொதுச் செயலாளர், செங்குந்தமாமணி R.K.செல்வமணி அவர்களே, முன்னிலை வகித்திருக்கும் சங்கத்தின் முன்னாள் தலைவர் பெண்ணாடம் ஆ.ராஜவேலு அவர்களே, புரவலர் K.பரஞ்ஜோதி அவர்களே, சமுதாயப் பொருளாதார தொண்டு மன்றத்தின் தலைவர் S.ராமகிருஷ்ணன் அவர்களே, ஈரோடு செங்குந்தர் பொறியியல் கல்லூரியின் உபதலைவர் P.S.நடராஜன் அவர்களே, எழுகரை செங்குந்தர் பாவடி பஞ்சாயத்து நாட்டாண்மைக்காரர் ஜான்சன் T.S.நடராஜன் அவர்களே, புதுச்சேரி மாநிலத் தலைவர் ந.கோவிந்தசாமி அவர்களே, கடலூர் மாவட்டத் தலைவர் வை.ஆனந்தன் அவர்களே, சார்ப் நிறுவனங்களின் சேர்மன் K.K.ராமச்சந்திரன், அபுதாபியைச் சேர்ந்த தொழிலதிபர் S.லட்சுமணன் அவர்களே, மாநாட்டு பொருளாளர் கோல்டன் திரு. P.தங்கவேல் அவர்களே, நண்பர்கள் குழுவின் தலைவர் சேலம் P.P.ராஜகோபால் அவர்களே, மற்றும் மேடையில் வீற்றிருக்கின்ற அத்தனை சிறப்பு விருந்தினர்களே, மாநிலத் தலைவர்களே, மாநில நிர்வாகக் குழு உறுப்பினர்களே, மாவட்டத் தலைவர்களே, மாநில செயற்குழு உறுப்பினர்களே, செங்குந்த சொந்தங்களே, மகளிர்களே, இளைஞர்களே உங்கள் அனைவரையும் அன்புடன் வரவேற்கின்றேன்.

உலக வரலாற்றிலேயே தாயின் மணிக்கொடிக்காக உயிர்நீத்த தியாகி திருப்பூர் குமரனின் வாரிசுகளே உங்களுக்கு வணக்கம்!



காந்திக்கு தியாகத்தை சொல்லிக் கொடுத்த தில்லையாடி வள்ளியம்மையின் வாரிசுகளே உங்களுக்கு வணக்கம்!

புரட்சிகவி பாரதிதாசனின் கனவுகளை நினைவாக்கிக் கொண்டிருக்கும் செங்குந்த சொந்தங்களே உங்களுக்கு வணக்கம்!

பேரறிஞர் அண்ணாவின் வழி நின்று மீண்டும் ஆட்சியை நாம் பிடிப்போம் என்று சொல்லிக் கொண்டிருக்கும் செங்குந்த சொந்தங்களே உங்களுக்கு என் வணக்கம்!





48 ஆண்டுகாலம் - ஒரு மண்டலம் முடிந்துவிட்டால் அடுத்தது புதுவாழ்வுதான்! செங்குந்தனுக்கு புது எற்றம்தான்! வாழ்க வளமுடன் என்று நமக்கெல்லாம் உரைத்த வேதாத்திரி மகரிஷியின் வாரிசுகளே வாருங்கள்! வாருங்கள்! என்று அழைத்து இம்மாநாடு சிறக்க கடைசி வரை 10 மணியானாலும், 11 மணியானாலும் இருந்து நமது 20 ஆண்டுகாலக் கனவுகளை ஒரே நாளில் நிறைவேற்றிக் கொள்ளப் போகும் நாள்தான் 2016 ஜனவரி 31 என்றால் மிகையாகாது.

கடந்த 60 நாட்களில் 60 ஆயிரம் கிலோ மீட்டர்கள் நான் சுற்றிச் சுழன்ற பயணித்து 60 ஆயிரத்திற்கும் மேற்பட்ட செங்குந்த மக்களை சந்தித்துவிட்டு வந்திருக்கிறேன்.

அத்தனை பேரும் நான் சொன்னபடி வந்திருக்கிறீர்கள். எப்பொழுது ஒரு தலைவன் சொல்படி எந்த சமுதாயம் நடக்கிறதோ அந்த சமுதாயம் எழுச்சி பெற்றுவிட்டது என்று பொருள். நமது சமுதாயம் எழுச்சி பெற்று விட்டது! இதுவரை செங்குந்தன் எப்படியோ, இந்த ஜனவரி 31 முதல் செங்குந்தன் தமிழகத்தில் சிறந்த வீரன் என்பதை நிரூபித்துக் காட்ட இருக்கிறான்.

சாதாரண மக்களல்ல நாம், சரித்திரம் கூறுகிறேன். வீரபாகுத் தேவரிலிருந்து வேல் கொண்ட பரம்பரை, முருகனுக்கு உறுதுணையாக இருந்த பரம்பரைதான் நம்முடைய செங்குந்த பரம்பரை. வேலும் மயிலும் நமக்குத் துணை. கொடியிலே புலிக்கொடியை வைத்துள்ளோம். எதற்கு சோழ பரம்பரையின் சின்னம். இது சோழ நாட்டிலே ஆண்ட பரம்பரை.

இப்போது எங்கே போனது செங்குந்தம்! வரப்போகிறது - வந்து கொண்டிருக்கிறது - விடியல் வரப்போகின்றது. சேவல் கூவி விடியப் போவதில்லை என்று சொல்வார்கள். ஆனால், இனி சேவல் கூவினால்தான் விடியலே வரப்போகின்றது.

காலையிலிருந்து உங்களைப் பார்க்கும்போது என்னை மிகவும் 'டச்' பண்ணிவிட்டீர்கள்! எப்படியென்றால், நான் ஊர்வலமாக வரும்போது அத்தனை பேரின் கைகளையும் பிடித்து நாடி பார்த்துவிட்டேன். அத்துணை பலத்தையும் இந்தத் தலைவனுக்கு நீங்கள் கொடுத்து விட்டீர்கள் அந்த 'டச்'சின் மூலமாக!

இதை வைத்துக்கொண்டு தமிழகத்தின் புதிய சக்தியாக செங்குந்தனை உருவாக்குவதற்கு நான் தயாராகிவிட்டேன். நீங்களெல்லாம் தங்கக் கட்டிகள். ஆனால், 100 சதவீதம் தங்கக் கட்டிகளாக மட்டும் இருந்துவிட்டால் பயனில்லை. 91.6 சதவீதமாக இருந்தால்தான் ஆபரணமாக மாற்ற முடியும். செங்குந்தனுக்கு நேர்வழி மட்டும்தான் தெரியும். நெளிவு சுழிவு தெரியாது. நெளிவு சுழிவு தெரிந்தால்தான் வாழ்க்கையில் முன்னேற முடியும். நீங்களெல்லாம் 91.6 தங்கமாக மாற வேண்டும்.

இது வகுப்பெடுக்கும் இடமல்ல. இருந்தாலும் நான் வரலாற்றைச் சொல்கின்றேன். முதலியார் என்பது முதலமைச்சர் என்பதிலிருந்து வந்தது. முன்பெல்லாம் மன்னர் ஆட்சியில் முதலமைச்சர்களாக இருந்தவர்கள் செங்குந்தர்கள். அப்படியெல்லாம் வாழ்ந்த பரம்பரை. நவீன காலத்தில் முதலமைச்சராகவும் இருந்தோம், 1967-லே.

வரலாற்றிலே பார்த்தால் நாம் எல்லாம் நெசவுத் தொழிலைச் செய்து வந்தவர்கள். சுத்தமான கைத்தறியிலே நெசவு செய்து வந்தோம். நெசவுத் தொழிலை செய்து வந்தவர்கள் ஒரு சொந்தமாக்கப்பட்டார்கள். அதுதான் செங்குந்தர்கள். அதுதான் ஒரு ஜாதி. இதுதான் ஜாதியினுடைய வரலாறு. விவசாயம் செய்து வந்தவர்கள் வேளாளர்கள். தொழிலை அடிப்படையாகக் கொண்டு உருவானதுதான் ஜாதி. இதுதான் ஜாதிக்கான Definition.





எப்படி ஒரு தொழில் செய்பவர்கள் வர்த்தகர்கள் சங்கம் என்று வைத்துக்கொள்வதைப் போல, வழக்கறிஞர்கள் வழக்கறிஞர்கள் சங்கம் என்றும், ஆடிட்டர்கள் ஆடிட்டர் சங்கம் என்றும், இன்ஜினியர்கள் இன்ஜினியர் சங்கம் என்றும் வைத்துக் கொள்கின்றார்கள். ஒரு தொழிலை செய்பவர்கள் அந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள அனைவரையும் ஒருங்கிணைத்து சங்கமாக, அசோசியேசனாக கட்டமைத்துக் கொள்கிறார்கள். இவ்வாறு சங்கம் அமைத்தால்தான் அவர்களுடைய தொழிலுக்கு மேம்பாடுகள் கிடைக்கும். குறைபாடுகளைத் தீர்க்கலாம். பிரச்சனைகளை சரி செய்யலாம்.

அதுபோலத்தான் நெசவுத் தொழிலை செய்து வந்தவர்கள் எல்லாம் ஒன்றிணைந்து உருவாக்கியதுதான் செங்குந்தர் ஜாதி. இதில் ஏதேனும் தவறு உள்ளதா? பிறகு ஏன் ஜாதி பிடிக்கவில்லை என்று சிலர் சொல்கிறார்கள்.

ஜாதி மாநாடு நாம் போட்டால், ஜாதி பிடிக்கவில்லை- ஜாதிக்கு நாங்கள் மரியாதை தருவதில்லை என்ற சொல்லும் கட்சிக்காரர்கள் தேர்தலுக்கு விருப்ப மனு வாங்கும்போது விண்ணப்பப் படிவத்தில் உங்கள் தொகுதியில் உங்கள் ஜாதி ஓட்டு எத்தனை என்று ஒரு கேள்வியும், ஜாதிச் சான்றிதழையும் இணைத்துக் கேட்பது ஏன்? இது எந்த விதத்தில் நியாயம்?

அப்படியானால் நாம் ஜாதிச் சங்கம் நடத்துவது சரிதான். இதை அனைவரும் ஒத்துக்கொள்ளவேண்டும்.

"சாது மிரண்டால் காடு கொள்ளாது" 1969-ல் விட்ட கோட்டையை பிடிக்கப் போகிறோம் 2016-ல். திராவிடத்தை ஆரம்பித்தது செங்குந்தர்களே. காஞ்சி புரத்தில் பிறந்த அண்ணா அப்போது திராவிடத்தை ஆரம்பித்துவைத்தார். அன்று முதல் இன்று வரை அவர் பெயர் இல்லாமல் யாரும் வாழ்க்கை நடத்த



முடியாது. போஸ்டருக்கும் பிளக்சுக்கும் அறிஞர் அண்ணா தேவை. அனைத்திற்கும் அவர் செங்குந்தர் என்ற போர்வை தேவை. ஆனால், செங்குந்தர்களுக்கு மட்டும் எந்த சீட்டும் கிடையாது. எந்த மாவட்டச் செயலாளர் பதவியும் கிடையாது. இதற்கெல்லாம் முடிவு கட்டும் நாள்தான் 2016 ஜனவரி 31.

காலண்டரில் எந்த நாள் முக்கியமான நாளாக இருந்தாலும், இனிமேல் செங்குந்தனுக்கு 2016 ஜனவரி 31 தான் முக்கியமான நாளாக இருக்கப் போகிறது.

அறிவு, புத்திக்கூர்மை, தொழிலிலே நாட்டம் அத்தனையிலும் சிறந்த விளங்கக்கூடியவன் செங்குந்தன். அப்பேர்பட்ட செங்குந்தன் அவன் வேலையை மட்டும் பார்த்துக் கொண்டிருக்கிறான் இப்போது.

சுதந்திரத்திற்கு முன்பாக 19 மற்றும் 20ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டுடன், கேரளா, கர்நாடகா, ஆந்திராவின் பகுதிகள் இணைந்து சென்னை மாகாணமாக இருந்தபோது செங்குந்தர் களின் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. செங்குந்தர்கள் இல்லாத துறையே இல்லை என்ற நிலை இருந்தது.

அதிலும் குறிப்பாக ஆசிரியர்கள். நான் பயணம் சென்ற இடங்களில் எல்லாம் பணியிலிருக்கும், பணி ஓய்வு பெற்ற எண்ணற்ற ஆசிரியர்களை சந்தித்தேன். தமிழ், பூகோளம், அறிவியல் என்று எல்லாத் துறை ஆசிரியர்களும் இருக்கிறார்கள். அன்று முதல் இன்று வரை தமிழகம் மட்டுமல்ல தென்னகம் எங்கும் ஆசிரியப் பணியை செம்மையாக செய்து வருபவர்கள் செங்குந்தர்கள்தான் என்று ஆணித்தரமாகக் கூறுவேன்.

ஒரு நாட்டைக் கட்டமைக்கும் ஆசிரியர் பணியை சிறப்புடன் செய்து வரும் பரம்பரை செங்குந்தப் பரம்பரை. இப்படிப்பட்ட ஆசிரியர்கள்தான் 19ஆம் நூற்றாண்டிலும் 20ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் ஆட்சிப் பணியில் செங்குந்தர்கள் முக்கியப் பங்கு



வகிக்கக் காரணமாக ஆசிரியர்கள் இருந்தார்கள். இது படிப்படியாக மங்கி குறைந்து விட்டது. அவர்கள் ஆட்சிப் பணியில் இருந்தபோது எங்கும் நிர்வாகம் ஒழுங்காக நடந்து கொண்டிருந்தது. அவர்கள் பிடிவாதமாக இருப்பார்கள் - ஆனால், நேர்மையாக இருப்பார்கள். ஒரு அலுவலகத்தில் லஞ்சம் வாங்காதவர் யார் என்று கேட்டால் அவர் செங்குந்த னாகத்தான் இருப்பார்.

அப்பேர்ப்பட்ட செங்குந்தனுக்கு பிரம்மாண்டமான ஒரு வாய்ப்பு வந்தது. மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்ப்பதற்கான வாய்ப்பு அது. கமிஷன்கள் அமைக்கப் பட்டன. அப்போது நாம் தெளிவாகவும் உறுதியாகவும் இருந்திருந்தால் மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் (MBC) இணைந்திருப்போம். அப்படி சேர்க்கப்பட்டிருந்தால் நம் சொந்தங்கள் எல்லாம் ஆட்சியிலும், ஆட்சிப்பணி யிலும், கல்வியிலும், வேலைவாய்ப்பிலும் பயன்பெற்று தமிழகத்தில் முதல் நிலையில் முன்னேறிய சமுதாயமாக இருந்திருப்போம். ஆனால், இன்று நாம் முதல் இடத்திலும் இல்லை; முதல் பத்து இடங்களிலும் இல்லை; பூஜ்ஜியமாக இருக்கிறோம்.

தமிழக அளவில் ஆட்சியிலும் அதிகாரத்திலும் ஒரு பட்டியல் போடுவார்கள். தேவர்கள் இவ்வளவு பேர், நாடார்கள் இவ்வளவு பேர், கவுண்டர் இவ்வளவு, செட்டியார் இவ்வளவு என்று! இந்த எல்லாப் பட்டியலிலும் இடம்பெறாதவன் செங்குந்தன். எப்படி இதனை இத்தனை நாள் பொறுத்துக்கொண்டிருந்தோம்.

2015-ல் எல்லாரும் சகிப்புத்தன்மை பற்றி பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த சகிப்புத்தன்மைக்கு அர்த்தம் வேண்டுமென்றால் அவன்தான் செங்குந்தன். யார் ஆண்டால் என்ன, நம் குடும்பம், மனைவி, மக்கள் நலம் போதும் என்று சுயநலமாக ஒரு கட்டத்துக்குள்ளாக வாழ்க்கையை சுருக்கிக் கொண்டு வாழ்கிறான். மாமன், மச்சான், பங்காளிகளைக் கூட சேர்த்துக் கொள்வதில்லை. இது உண்மையா.. இல்லையா?

நமக்குள் மாற்றம் வேண்டும் - பொதுநலம் - சமூக நலத்தை எண்ணும் வகையில் மாற்றம் வேண்டும். சமூகத்தில் அங்கம் வகித்தால்தான் உங்களுக்கு வேண்டிய சலுகைகளை கேட்டுப் பெறமுடியும். செங்குந்தர் குரல் சட்டமன்றத்திலும் நாடாளு மன்றத்திலும் ஒலிக்க வேண்டாமா?

நாடாளுமன்றத்திலே நமக்கு ஒரே ஒரு எம்.பி. கிடைத்திருக்கிறார். குடியாத்தம் வேலூரிலே இருக்கிறார். தமிழகத்திலே இரண்டு எம்.எல்.ஏ.க்கள். ஒருவர் ஈரோடு V.C.சந்திரகுமார் அவர்கள், மற்றொருவர் காஞ்சிபுரம் சோமசுந்தரம் அவர்கள்.

உலக அளவில் மக்கள் தொகை 720 கோடி. அதில் தமிழகத்தில் 7 1/4 கோடி பேர் இருக்கிறார்கள். அதில் செங்குந்தர்கள் ஒரு கோடிப் பேர் இருக்கிறோம். மற்ற சமூகத்தார் நாங்கள் இரண்டு கோடி, இரண்டைக் கோடி பேர் இருக்கிறோம் என்று சொல்கிறார்கள். ஒரு கோடிப் பேர் என்பது நாம் கணக்கிட்டு வைத்துள்ள உண்மையான கணக்கு. இதில் ஒரு கட்-ஆப் வைத்துக் கொள்வோம். சுமார் 70 இலட்சம் என்று செங்குந்தர்கள் என்று. இது தமிழகத்தின் மக்கள் தொகையில் 10 சதவீதம். நாம் கேட்பதெல்லாம் நெசவாளி குடும்பத்தில் பிறந்த செங்குந்தனுக்கும் ஆட்சி, அதிகாரம் கிடைக்க வேண்டும் என்பதே.

நெசவாளிக்கு ஆட்சியில் உரிய பங்கு கொடுக்காமல் இருப்பது என்ன நியாயம்? அவன் கேவலமானவன் என்று எண்ணுகிறீர்களா? ஒரு நெசவாளிக்கு கொடுக்கும் கூலி என்ன? சென்னிமலையில் பெட்சீட் தயாரிக்கும் தொழிலாளிக்கு கூலி ஒரு பெட்சீட்டுக்கு 40 ரூபாய் கூலி. மூன்று முதல் நான்கு பெட்சீட்கள் வரை ஒரு தொழிலாளி தயாரிக்கலாம். அப்படியானால் 120 ரூபாய் அல்லது 160 ரூபாய் ஒரு நாள் கூலி. அதைக்கொண்டுதான் குடும்பத்தை காப்பாற்ற வேண்டும். நெசவுத் தொழிலை விட்டு வெளியேறுங்கள் என்றால், அதற்கு

மறுக்கிறார்கள். பரம்பரையாக செய்து வருகிறோம் மாறமுடியாது என்கிறார்கள்.

அப்படி கீழ்மட்டத்தில் இருக்கும் நெசவாளிக்கு சலுகைகளையும், கூலி உயர்வையும் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்றால் சட்டமன்றத்திலும் நாடாளுமன்றத்திலும் நமது செங்குந்தர்கள் இருக்கவேண்டும்.

நாம் அரசியல் கட்சி ஆரம்பிக்கப் போவதில்லை. நமக்கு அரசியல் தேவையில்லை. நாம்தான் ஒரு கட்சியை ஆரம்பித்தோம். அது ஆட்சியைப் பிடிக்க நம் செங்குந்தன்தான் உதவியும் செய்தான். ஆனால், அன்று உருவான கட்சியும் இன்று இருக்கிறது. அதிலிருந்து பிரிந்த கட்சிகளும் இருக்கின்றன. ஆனால், ஒருவரும் செங்குந்தனை மதிப்பதில்லை - உள்ளே விடுவதுமில்லை. அதற்கெல்லாம் யார் காரணம்? அவர்கள் அல்ல, நாம்தான்.

நாம் விட்டுக்கொடுத்ததன் விளைவு. வல்லவர்கள் உள்ளே இருக்கிறார்கள். புத்திசாலிகளாக இருந்தும் விட்டுக்கொடுத்து நாம் வெளியே நிற்கிறோம். ருசி கண்ட பூனைகளாக அவர்கள் இருக்கிறார்கள். அரசியல் ருசியே காட்டப்படாதவர்களாக நாம் இருக்கிறோம். இந்த ஜனவரி 31 இன்று முதல் உங்களுக்கு ருசியை காட்டப்போகின்றோம். உணவுக்கு அறுசுவை எப்படி முக்கியமோ அதுபோல செங்குந்தர் வாழ்வில் ஐந்து சுவைகளுடன் ஆறாவது சுவையாக அரசியல் சுவையை காட்டப்போகின்றோம். எங்களுக்கான அரசியல் பங்கை உங்களிடம் கேட்க வருகிறோம்.

ஒரு வீட்டில் ஒரு வாரிசு இருந்தால் பிரச்சினையில்லை. இரண்டு, மூன்று, நான்கு அண்ணன் தம்பிகள் இருந்தால் சொத்தில் பங்கு கேட்கிறோம். அவர்கள் கொடுப்பதை வாங்கிக்கொண்டு வருவதில்லை. சரிசமமான பங்கு வேண்டும் என்று கேட்கிறோம். அதுபோலத்தான், தமிழகம் என்பது அனைவருக்கும் சொந்தமானது. செங்குந்தனும் அதில் இருக்கிறான். ஆனால், நடப்பது என்ன? பெரியண்ணன், சின்ன அண்ணன் எல்லோரும் எடுத்துக் கொண்டார்கள். செங்குந்தன் சவலைப் பிள்ளையாக எதுவும் கிடைக்காமல் இருக்கின்றான். சின்னத்தம்பியாக இருக்கும் செங்குந்தன் பெரிய தம்பியாக வளர்வதற்கு முதல் அடிக்கல்தான் இந்த ஜனவரி 31.

70 லட்சம், ஒரு கோடி ஜனத்தொகை என்று கணக்கு சொல்லிக் கொண்டிருக்கிறோம். இவையெல்லாம் வேண்டாம். நாம் ஓட்டு வங்கியாக மாற வேண்டும்.

நாளிதழ்களைப் படித்துப் பார்க்கிறோம். என்றாவது சிந்தித்துப் பார்த்தோமா? செங்குந்தன் பெயர் எங்காவது இருக்கிறதா? முன்பெல்லாம் செங்குந்தன் இல்லாமல் அரசியல் இல்லை. ஆனால், இன்று செங்குந்தனுக்கு அரசியல் இல்லை.

இந்த நிலையை மாற்றவேண்டித்தான் இந்த மாநாட்டைக் கூட்டியுள்ளோம். நான் கேட்டுக் கொண்டபடி அனைவரும் வந்திருக்கிறீர்கள். அதற்கு நான் முதலில் நன்றி சொல்லிக் கொள்கின்றேன். இப்போதுதான் தலைவன் சொல்வதை கேட்கத் தொடங்கியிருக்கிறீர்கள். முன்பே கேட்டிருந்தால் நமது சமுதாயம் முன்னேறியிருக்கும். இப்போதுதான் எல்லோரும் என் வழிக்கு வந்திருக்கிறீர்கள். நான் நல்ல வழியைத்தான் உங்களுக்குக் காட்டப்போகின்றேன். நேர்மையான வழி, கொஞ்சம் நெளிவு சுழிவான வழி. நான் முன்பே கூறியதைப் போல தங்கம் 100



சதவீதமாக இருந்தால் போதாது. 91.6 ஆக இருந்தால்தான் ஆபரணமாக மாறும். அதுபோல நாமும் நெளிவு சுழிவுகளைத் தெரிந்து அரசியல் நடத்த வேண்டும்.

நாம் அதற்காக அரசியல் கட்சி எதுவும் ஆரம்பிக்கப்போவதில்லை. புதுமாதிரியான ஒரு திட்டத்தை உருவாக்கியிருக்கின்றேன். கட்சி, கூட்டணியெல்லாம் இல்லாமல் அரசியலில் பங்கு வாங்குவதுதான் சாமார்த்தியம்.

நமக்கு அத்தகைய சாமார்த்தியம் இருக்கிறதா என்றால் இருக்கிறது. பத்மஸ்ரீ பட்டம் வாங்கும் அளவிற்கு சாமார்த்தியம் இருக்கிறது.

சந்திரனுக்கு விண்கலம் அனுப்பி வெற்றி பெற்ற இந்தியன் - தமிழன் - செங்குந்தன் மயில்சாமி அண்ணாதுரை. ஆனால், அவருக்கு உரிய அங்கீகாரம் வழங்காமல் மூன்றாண்டுகள் கடந்து பத்மஸ்ரீ கொடுப்பது என்ன நியாயம். அதற்கு எவ்வளவு வேலைகள் செய்ய வேண்டி இருக்கிறது. தமிழக அரசு ஒரு ஓட்டப்பந்தய வீரர் வெற்றி பெற்ற உடனே வீடு, கார், 25 லட்சம் ரூபாய் பரிசு வழங்குகிறது. அரசுப் பணத்திலிருந்து எடுத்துக் கொடுக்கிறது. சந்திரனுக்கு விண்கலம் அனுப்பியவருக்கு ஒரு வீடு கேட்டதற்கு தமிழக அரசு கொடுக்கவில்லை. இது நியாயமா? நம்முடைய எம்.எல்.ஏ.க்கள் 10 பேர் சட்டமன்றத்தில் இருந்தால் விட்டிருப்பார்களா?

இதுபோல எத்தனையோ பத்மஸ்ரீகள் நம்மிடம் இருக்கிறார்கள். அவர்கள் பட்டமும் பதவியும் பெற வேண்டுமென்றால் நாமும் அரசியல் ருசியை அனுபவிக்க வேண்டும்.

செங்குந்தர்கள் பல்வேறு கட்சிகளில் இருக்கிறார்கள். நினைவு தோன்றிய நாள் முதல் இருந்த கட்சியை விட்டு மாறி வரமாட்டார்கள் என்றெல்லாம் நான் சென்ற இடங்களில் சொன்னார்கள். இதெல்லாம் ஜனவரி 30 நேற்றோடு முடிந்துவிட்டது. இன்று ஜனவரி 31. புதுப்புனல் ஆரம்பித்துவிட்டது.

அவர்களெல்லாம் மனம் வெம்பிக் கிடக்கிறார்கள். ஒன்றியச் செயலாளர் பதவிகூட செங்குந்தனுக்கு கொடுக்க மறுத்து வேறு ஜாதிக்கு கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று சொல்கின்றார். இனி அவர் அந்தக் கட்சிக்கு உண்மையாக உழைப்பாரா? மாட்டார். அதைத்தான் செங்குந்தர்களாக நாம் வசமாகப் பிடித்துக் கொள்ளவேண்டும். அதுதான் தந்திர வலை.

நாம் எந்தக் கட்சிக்கும் ஆதரவு கொடுக்க மாட்டோம். எல்லாக் கட்சிகளையும் ஒரே தராசில் வைத்துக் கொள்வோம். யார் நமக்கு பங்கு கொடுக்கிறார்களோ அவர்களுடன் நமது கூட்டணி.

ஆளும் கட்சி மத்தியிலும் இருக்கிறது மாநிலத்திலும் இருக்கிறது. இதுவரை இந்த ஆண்டு வருகின்ற சட்டமன்றத் தேர்தலுக்கு தேதி நிர்ணயம் செய்யப்படவில்லை. ஆகவே, அரசு நினைத்தால் எதை வேண்டுமானாலும் செய்யலாம். அவர்கள் தேர்தலுக்கு முன்பாக ஜாதிக்கட்சியோ மற்ற கட்சியோ எதைக் கேட்டாலும் கொடுப்பார்கள். மத்திய, மாநில ஆளும் கட்சிகளுக்கு நாம் ஒரு கோரிக்கையை வைக்கிறோம். வருகின்ற பிப்ரவரி 28 ம் தேதிக்குள்ளாக இங்கிருக்கும் செங்குந்தர்களில் 4 அல்லது 5 பேருக்கு மத்தியிலோ, மாநிலத்திலோ ஒரு சிறந்த பதவியைத் தரவேண்டும். அவ்வாறு கொடுத்தால் கண்டிப்பாகப் பெற்றுக்கொள்வோம்.

தமிழகத்திலே 5 கோடியே 79 லட்சம் வாக்காளர்கள் இருக்கிறார்கள். அவர்களிலே சரியாக 10 சதவீதம் என்று கொண்டால் 57 லட்சத்து 90 ஆயிரம் பேர்கள். அதில், ஒரு 30 சதவீதம் நீக்கினால் 40 லட்சம் ஓட்டுப்போடக்கூடிய செங்குந்த வாக்காளர்கள் இருக்கிறார்கள். 40 லட்சம் செங்குந்தர்களை வைத்துக் கொண்டு செங்குந்தன் இதுவரை என்ன செய்தான்.

பல்வேறு கட்சிகளில் இருக்கிறார்கள். அவரவர் இருக்கும் கட்சியிலே இருந்து கொள்ளுங்கள். அங்கு உங்களுடைய பங்களிப்பை வழங்குவதில் எந்த ஆட்சேபணையும் இல்லை. ஆனால், இன்று மறுமலர்ச்சி செங்குந்த சமுதாயத்திற்கு கிடைக்கும்போது 40 லட்சம் வாக்குகளும் திரளவேண்டும். தயிரைக் கடைந்து வெண்ணெய்யை திரட்டுவதுபோல திரட்டவேண்டும். அவ்வாறு திரள்வதற்கான நாள்தான் இந்த ஜனவரி 31.

பத்து சதவீதம் ஓட்டு வங்கியுள்ள செங்குந்தருக்கு சட்டமன்றத்தில் 24 எம்.எல்.ஏ. சீட்டுகளை ஒவ்வொரு கட்சியும் வழங்கவேண்டும். அதைக் கேட்பதற்கு உங்களுக்கு தைரியம் இல்லையென்றால் அந்தக் கட்சியை விட்டு வெளியே வந்துவிடுங்கள். உங்களுக்கு நிற்பதற்கான வாய்ப்பை நாங்கள் ஏற்படுத்தித் தருகிறோம். வருவதற்கு நீங்கள் தயாராக இருக்கிறீர்களா?

மத்திய, மாநில அரசுகளை நாங்கள் கேட்டுக் கொள்கிறோம். இன்னும் 28 நாட்கள் இருக்கின்றது.

மத்தியிலோ, மாநிலத்திலோ ஒரே ஒரு அமைச்சர் பதவியாவது தந்தால் ஏற்றுக் கொள்வோம். 40 லட்சம் ஓட்டுக்களும் உங்களுக்குத்தான். இதுவரை அனுபவிக்காத செங்குந்தர்கள் அனுபவிக்கட்டும். இது கத்தியின்றி இரத்தமின்றி யுத்தம். ஜெயிப்பது நம் செங்குந்தர்தான்.

அமைச்சர் பதவி கொடுப்பது தேர்தல் மூலமாகத்தான் நடக்கும் என்பதில்லை. ஆறு மாதங்கள் வரை தேர்தலில் நிற்காமலே அமைச்சராக இருக்கலாம் என்று சட்டம் சொல்கிறது. மத்திய அரசோ, மாநில அரசோ ஒரு அமைச்சர் பதவியை செங்குந்தருக்கு கொடுக்கவேண்டும். அந்த ஆறு மாதங்களில் செங்குந்தரின் வாழ்வில் முன்னேற்றத்தை ஏற்படுத்தி விடலாம். இது சரியான 'டீல்'தானே! (கூட்டத்தில் ஆரவாரம், கைதட்டல்)

இத்தனை பேர் ஆரவாரத்துடன் ஆமோதிப்பதால் செங்குந்தனுக்கு அமைச்சர் பதவி கிடைக்கப்போவது உறுதியாகிவிட்டது. நாங்கள் ஒரு அமைச்சர் பதவியைத்தான் கேட்கிறோம். அதன் மூலமாக செங்குந்தர் வாழ்வில் மறுமலர்ச்சியை ஏற்படுத்திவிடுவோம்.

ஆட்சியும், அமைச்சர் பதவியும் யாருக்கானது! அது மக்களுக்கானது. எங்கள் செங்குந்த மக்களுக்கும் கொடுங்கள்! தேர்தல் வரை காத்திருக்கப் போவதில்லை. பிப்ரவரி 28 வரை கெடு வைக்கிறோம். அதற்குள்ளாக கொடுக்கவேண்டும். யார் பதவி கொடுக்கிறார்களோ, அவர்களுக்கே 40 லட்சம் செங்குந்தர் வாக்கும் வழங்கப்படும். செங்குந்தரின் முழு ஒத்துழைப்போடு இந்த பகிரங்க சவாலை விடுகிறேன்.

மைக் கிடைத்தது என்பதற்காக பேசுபவன் நானல்ல – சாதித்துக் காட்டுவேன். அதில் எவ்வித மாறுதலும் இல்லை. இதில் சட்டப்பிரச்சனைகள் இருக்கிறது என்பவர்கள் பத்மவிபூசன் கொடுக்கும்போது எந்த சாதனைக்காக கொடுக்கிறீர்கள். உண்மை சாதனையாளர்




செங்குந்தனுக்கு அதைக் கொடுக்கவேண்டியதுதானே. அது முடியும் என்றால் இதுவும் முடியும். செங்குந்தனுக்குத் தேவை அங்கீகாரம்தான்.

ஒரு சிலர் சொல்கிறார்கள். நமக்கெதற்கு எம்.எல்.ஏ., எம்.பி., பதவியெல்லாம். வீட்டில் இருந்து கொண்டு நம் வேலையைப் பார்க்கலாமே என்று. இப்படித்தான் 48 ஆண்டுகளைக் கழித்துவிட்டோம். இனியும் சும்மாயிருக்க முடியாது. இன்று இளைஞர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சாதிப்பார்கள். யாரும் உணர்ச்சிவசப்படவேண்டாம்; உணர்வுப்பூர்வமாக சிந்தித்துப் பாருங்கள். நாம் சொல்வதில் தவறிருந்தால் விட்டுவிடுவோம். ஆனால், செங்குந்தனுக்கு சமூகத்தில் மதிப்பும் அங்கீகாரமும் வேண்டுமென்றால் இதுபோன்ற தீர்மானங்களை இயற்றிக்கொண்டே இருக்க வேண்டும்.

லயன்ஸ்கிளப், ரோட்டரி கிளப், வர்த்தகர் சங்கம் என்று எண்ணற்ற சங்கங்கள் சமூகத்தில் இருக்கின்றன. அவற்றிலெல்லாம் செங்குந்தருக்கு எந்த அங்கீகாரமும் இல்லை. அங்கு உறுப்பினராக இருக்கும் 40 பேரில் 35 பேர் செங்குந்தர். ஆனால், மீதியிருக்கும் 5 பேரில் ஒருவர்தான் தலைவராக வருகிறார். ஏன்? நமக்கிடையே ஒற்றுமை இல்லாதது தான். நாம் இனி ஒருங்கிணைப்புடன் செயல்படவேண்டும்.

அனுபவஸ்தர்கள் இளைஞர்களுடன் இணைந்து செயல்பட வேண்டும். 50 சதவீதம் அனுபவஸ்தர்களும் 50 சதவீதம் இளைஞர்களும் கொண்ட "50:50" திட்டம்தான் என்னுடையது. 40 லட்சம் செங்குந்தர் ஓட்டில் 25 லட்சம் இளைஞர்களுடையது. அதை மறுக்க முடியாது.

நம்மை எந்த அளவிலே வைத்திருக்கிறார்கள் என்பதை ஒரு உதாரணம் மூலம் சொல்கின்றேன். ஒரு கட்சி, ஒரு தொகுதியில் உள்ள பிரபலமானவரிடம் ஜாதி வாரியாக கணக்கெடுப்பு எடுத்துத் தாச் சொல்கிறது. அமைச்சர்

சொன்னார் என்பதற்காக கணக்கெடுப்பு எடுத்துக் கொடுக்கும்போது, அவர் சார்ந்த ஜாதியின் எண்ணிக்கையைக் கூட்டி பட்டியல் கொடுக்கிறார். அதனை மேலிடத்தில் இருப்பவர்களும் நம்பிக் கொள்கிறார்கள். அதில் தவறு கண்டுபிடித்தால், 22 ஆயிரம் பேர் கொண்ட அவர் ஜாதியை முதலில் போட்டுவிட்டு, 28 ஆயிரம் பேர் கொண்ட செங்குந்தனை கீழே போட்டு சமர்ப்பிக்கிறார்கள். அதிலும் ஏன் இப்படி என்று கேட்டால் ஜம்பிங் மிஸ்டேக் என்கிறார்கள். இப்படித்தான் பலவும் நடக்கின்றன. இதெல்லாம் செங்குந்தனுக்குத் தெரியும். ஆனால், அதைச் சொல்ல முடியாமல் அந்தந்தக் கட்சிகளிலே மருகிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வெளியே வரவேண்டும். தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தில் உறுப்பினராகுங்கள். உங்களுக்கான வாய்ப்பினை நாங்கள் ஏற்படுத்தித் தருகிறோம்.

நாம் மாநாடு நடத்த 20 ஆண்டு காலம் ஆகியிருக்கிறது. ஒரு கோயிலில் ஆறு மாதத்திற்கு ஒரு முறை, ஆண்டிற்கு ஒருமுறை என்று காலக்கெடு வைத்து விசேஷங்கள் நடக்கின்றன. 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை கும்பாபிஷேகமும் நடத்துகிறார்கள். ஆனால், ஒரு சங்கத்தை வைத்துக்கொண்டு 20 ஆண்டுகளாக மாநாடு நடத்தாமல் இருப்பது என்ன நியாயம்? மாநாடு நடத்தாமல் சங்கம் எப்படி சிறப்பாக இயங்க முடியும்? இனி மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை மாநாடு நடத்துவதென்று தீர்மானம் இயற்றுவோம். அதற்கு நீங்கள் ஆதரவு தரவேண்டும். (கூட்டத்தில் கரகோஷம், ஆரவாரம்)

சட்ட திட்டங்களை ஏற்படுத்திக் கொள்வதை பிறகு பார்ப்போம். முதலில் நமக்குள் ஒருங்கிணைப்பை ஏற்படுத்தவேண்டும். 48 ஆண்டுகாலம் அரசியல் அனாதைகளாக ஆக்கப் பட்டிருக்கிறோம். அதை நாம் மாற்றவேண்டும். ஓட்டப்பந்தயம் ஒன்று வைத்தால் அதில் ஓடித்தான் ஆகவேண்டும். சிலர் ஜெயிப்பார், சிலர் தோற்பார். அதெல்லாம் நமக்கு எதற்கு ஓரத்தில் நின்று வேடிக்கை பார்ப்போம் என்றிருப்பதில் பலன் ஒன்றுமில்லை. நாமும் ஓட வேண்டும்.

மீண்டும் சொல்கிறேன்! தமிழகம் அவர்களுக்கு மட்டுமே சொந்தமானதல்ல. செங்குந்தனுக்கும்





சொந்தமானதுதான். தமிழகத்தில் மற்ற ஜாதிகள் எந்த வழியில் செல்கின்றனவோ, அதே வழியில் நாமும் செல்வோம். அதனால் எந்த பாவமும், பழியும் நமக்கு வரப்போவதில்லை. புதிதாக நாம் எதையும் செய்யப்போவதில்லை. அவர்கள் செய்ததையே நாமும் பின்பற்றி செய்யலாம். ஆனால், அதில் நான் கொடுத்திருக்கும் ஃபார்முலா புதிது. யார் அமைச்சர் பதவி கொடுக்கிறார்களோ அவர்களுடன் நாம் கூட்டணியில் சேர்ந்துவிடுவோம்.

இது அரசியலுக்கான நுழைவுச்சீட்டு. இந்த நுழைவுச்சீட்டைப் பெறுவதற்குத்தான் இதுபோன்ற வழிகள் எல்லாம். எம்.எல்.ஏ., எம்.பி. ஆகித்தான் ஆட்சியைப் பிடிக்க முடியும் என்பதல்ல, இது அல்லாமலும் ஆட்சியைப் பிடிக்க முடியும். ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ்., படித்து ஆட்சிப்பணியில் செங்குந்தர்கள் அதிகமாக சேரவேண்டும். இப்படியும் ஆட்சி அதிகாரத்தைப் பெற முடியும். சாதிக்க முடியும்.

இதற்காகத்தான் சென்னை சேத்துப்பட்டு வள்ளல் சபாபதி மெட்ரிக் பள்ளியில் ஒரு ஐ.ஏ.எஸ். அகாடமி தொடங்கப்பட்டுள்ளது. அதன் மூலமாக பயிற்சிகள் வழங்கப்பட்டு வருகின்றன. உங்களுக்குத் தெரிந்த திறமையான செங்குந்தர்களை அனுப்புங்கள். அவர்களுக்கு இலவசமாக கற்றுக் கொடுத்து, அவர்களை ஆட்சிப் பணிக்கு அனுப்பிவைக்கிறோம். (கூட்டத்தில் ஆரவாரம்)

அதிகாரிகளின் ஆட்சிதான் நடக்கிறது. அதிகமான செங்குந்தர்களை ஆட்சிப்பணிக்கு அனுப்புவதன் மூலம் செங்குந்தர் ஆட்சி இன்னும் 10 ஆண்டுகளில் வரப்போகிறது. சமுதாயம் வலுவிழந்து இருப்பதால், இத்தகைய வேலைகள் பலவும் செய்ய வேண்டியிருக்கிறது.

மற்ற ஜாதியினரைவிட நாம் கீழ்மட்டத்தில் இருக்கிறோம். நம்மிடம் ஆன்மீகத்தில், விஞ்ஞானத்தில், தொழில் துறையில் தொழிலதிபர்களாக என்று சாதனையாளர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால் அவையெல்லாம் தனிப்பட்ட சாதனைகள். பலர் முகம் தெரியாதவர்களாகவும், சங்கத்திற்கு வரமுடியாதவர்களாகவும் இருக்கிறார்கள். காரணம், ஜாதி சங்கத்திற்கு சென்றால் அவர்களை நீக்கிவிடுவார்களோ என்ற பயத்தால் வரமுடியாதவர்களாக இருக்கிறார்கள். ஆடிட்டர் சங்கம், இன்ஜினியர் சங்கத்திற்கு செல்வதுபோல ஒரே தொழிலைச் செய்ததால் - நெசவுத் தொழில் செய்ததால் - உருவான செங்குந்தர் சங்கத்திற்கும் வரலாமே! என்ன தவறு இருக்கிறது. ஒரு தொழிலைச் செய்பவர்கள் கூடிப் பேசுவதுதான் சங்கம். இதைப் புரியாமல் நம்மை ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இந்த மாற்றத்தை ஏற்படுத்தும் நாள் வெகுதூரம் இல்லை. இன்று அதற்கு அஸ்திவாரம் போட்டுவிட்டோம். கட்டடத்தை எழுப்பிவிடுவோம் என்று சொல்லுகின்றேன்.

நெசவாளர்களுக்கு பசுமை வீடுகள் கொடுக்கப்பட்டதாகச் சொல்லுகிறார்கள். 2 லட்சத்து 60 ஆயிரம் ரூபாய் கொடுக்கிறார்கள். ஆனால், அது கட்சிக்காரர்களுக்குத்தான் போய்ச்சேருகிறது. நெசவாளிகளுக்கு கிடைப்பதில்லை. இதற்காக போராடப்போவதில்லை. உரிமையைக் கொண்டாடுவோம்! உறுதியோடு கேட்போம்!

அரசு ஊழியர்களுக்கு அதிக சம்பளம், மானம் காக்கும் ஆடையை நெய்யும் நெசவாளிக்கு குறைந்த கூலி. கூலி உயர்வும் ஆண்டிற்கு 10 சதவீதம் மட்டுமே. இது போதாது. 30 சதவீதமாக உயர்த்த வேண்டும் என்று தீர்மானம் மூலமாக இங்கே நிறைவேற்ற இருக்கிறோம் என்பதை இத்தருணத்தில் சொல்லிக் கொள்கிறேன்.

நெசவாளிக்கு ஏற்படும் இன்னல்களையெல்லாம் களையும் விதத்தில் தீர்மானங்களை உருவாக்கியிருக்கிறோம். தீர்மானம் என்பது மாநாட்டிற்கு சடங்காக இல்லாமல் நடைமுறையில் சாத்தியமுள்ளவைகளை மட்டும் தீர்மானங்களாகப் போட்டு நிறைவேற்றி, அதனை அமல்படுத்தச் சொல்ல இருக்கிறோம்.

செங்குந்தன் சாதாரணமானவன் என்று யாரும் நினைத்துவிடமுடியாத வகையில் தீர்மானங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. அவை விரைந்து நிறைவேற்றி அமல்படுத்த நடவடிக்கை எடுக்கப்படும்.

அரசியல் பற்றி மீண்டும் பேச வருகின்றேன். நான் 30 ஆண்டுகாலமாக அந்தக் கட்சியில் இருக்கிறேன், 20 ஆண்டுகாலமாக இந்தக் கட்சியில் இருக்கிறேன். இப்போது வெளியேறினால் சீனியாரிட்டி போய்விடும் என்று சொல்பவர்களுக்கு நான் ஒன்றைச் சொல்லிக் கொள்கின்றேன். இத்தனை காலம் இருந்ததற்கே பதவி கொடுக்காதவர்கள் இனிமேல்தான் கொடுக்கப் போகிறார்களா? இன்னும் அங்கிருந்து எதைச் சாதிக்கப் போகிறீர்கள்.

வருகின்ற சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க., அ.தி.மு.க., பா.ஜ.க., என்று எந்தக் கட்சியைச் சார்ந்தவராக இருந்தாலும் அந்தக் கட்சியில்





தேர்தலில் போட்டியிட சீட் கேட்டிருந்தால் எங்களுக்குத் தெரிவியுங்கள். அந்தக் கட்சியுடன் பேசி உங்களுக்கு வாய்ப்பை வாங்கித் தருகிறோம். எந்தக் கட்சி வேட்பாளர்களை தேர்வு செய்தாலும், அந்த வேட்பாளர்களில் 10 சதவீதம் செங்குந்தர்களுக்கும் வழங்கப்படவேண்டும். அதாவது, ஒரு கட்சி 100 தொகுதியில் போட்டியிட்டால் அதில் 10 வேட்பாளர்கள் செங்குந்தர்களாக இருக்கவேண்டும். அப்படி கொடுக்கும் கட்சிக்குத்தான் எங்களது ஓட்டு.

இதுவரை நம்மை ஒருங்கிணைக்கக்கூடிய தலைவர் கிடைக்கவில்லை. இப்போது நான் கிடைத்திருக்கிறேன். பயன்படுத்திக் கொள்ளுங்கள். நம்மிடம் நல்ல தலைவர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால், ஒருங்கிணைப்பில்லை. இப்போது ஒருங்கிணைந்திருக்கிறோம். உங்கள் ஊருக்கு நாளையே கூப்பிடுங்கள் வருவதற்கு நான் தயாராக இருக்கிறேன். நீங்கள் கூப்பிடவில்லையே என்ற குறைதான் எனக்கு இருக்கிறது.

நீங்கள் எங்கு, எப்போது கூப்பிட்டாலும் வருவேன். காரணம், நான் நிறைய சொத்துக்களை சம்பாதித்துவிட்டேன். செங்குந்த சொந்தங்களை நிறைய சம்பாதித்துவிட்டேன். நான் எங்கு சென்றாலும் தங்குவதற்கு இடமும், உண்ண உணவும் கொடுக்கும் சொந்தங்கள் நீங்கள் இருக்கிறீர்கள். இதைவிட பெரிய சொத்து எனக்கு வேறு என்ன வேண்டும். இந்த சொந்த சொத்துக்களை பராமரிக்க நான் ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டே இருப்பேன்.

தமிழகத்தில் நமக்கு பல்லாண்டு காலமாக நிறைய இடங்கள் இருக்கின்றன. அறக்கட்டளைகள், கோயில்கள், பள்ளிகள், கல்யாண மண்டபங்கள் என்று நிறைய இருக்கின்றன. இவற்றை முறையாகப் பராமரிப்பவர்கள் பாதிப்பேர் இருக்கிறார்கள். மீதிப்பாதிப் பேர் சொத்துக்களை இழந்து இருக்கிறார்கள். வழக்குகள் நடந்து கொண்டிருக்கின்றன. முறையான பத்திரங்கள் இருந்தால் அந்த சொத்துக்களை தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் மீட்டெடுக்கும் என்பதை இங்கு உறுதிபடக்கூறிக்கொள்கின்றேன்.

மீண்டும் சொல்கின்றேன். வருகின்ற தேர்தலில் அவர்கள் சொன்னார்கள் இவர்கள் சொன்னார்கள் என்பதையெல்லாம் விட்டுவிட்டு, நான் சொல்வதைக் கேளுங்கள். சுற்றறிக்கை



# வரலாற்றுச் சிறப்பு மிக்க செங்குந்தர் 19வது மாநில மாநாட்டின் தீர்மானங்கள்

செங்குந்தர்களின் நலன் கருதி இம்மாநாடு கீழ்க்கண்ட கோரிக்கைகளை முன் வைக்கின்றது.

1. உலக வரலாற்றிலேயே தனது நாட்டுக் கொடிக்காக தன் உயிரை ஈந்த தியாகி கொடி காத்த **திருப்பூர் குமரன்** பிறந்த நாளினை அரசு விழாவாக அறிவித்ததற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம். தியாகி திருப்பூர் குமரனின் நினைவை என்றும் போற்றும் படியாக சென்னையில் அவருக்கு ஒரு **மணி மண்டபம்** அமைத்து அவரது வாழ்க்கை வரலாற்றினை அனைவரும் தெரிந்து கொள்ளும் வகையில் **புகைப்படக் கண்காட்சி** அமைத்துத் தரும்படி தமிழக அரசை இம்மாநாடு கோருகிறது.

2. தமிழகத்தின் முதலமைச்சராக **பேரறிஞர் அண்ணா** அவர்கள், இருந்த போது சென்னை மாகாணம் என்று இருந்ததை **"தமிழ்நாடு"** என்று மாற்றம் செய்து நேர்மையான ஆட்சியை கொடுத்து. மக்கள் மனதில் நீங்கா இடம் பெற்று **"தென்னாட்டு காந்தி"** என மக்களால் போற்றப்பட்டார். தன்னுடைய பேச்சாற்றல், எழுத்தாற்றல் இவற்றால் மக்களை தட்டியெழுப்பிய பேரறிஞர் அண்ணா அவர்களுக்கு (செங்குந்தர் இனத்தைச் சேர்ந்த பேரறிஞருக்கு) மத்திய அரசின் உயரிய விருதான **"பாரத ரத்னா"** விருது வழங்கி கௌரவிக்க இம்மாநாடு மத்திய அரசை கோருகிறது.

3. நீதிக்கட்சி ஆட்சியில் அமைச்சராக இருந்த புதுச்சேரியைச் சேர்ந்த **திரு. அ.வெ.முத்தையா முதலியார்** அவர்கள்தான், **வகுப்பு வாரி இட ஒதுக்கீடு முறையை** அறிமுகப்படுத்தினார். அந்த இனத்தைச் சேர்ந்த எங்களின் நீண்ட நாள் கோரிக்கையான மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் (MBC) செங்குந்தர் இனத்தைச் சேர்க்கவேண்டும் என்று தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகா, கேரளா, புதுச்சேரி ஆகிய மாநில அரசுகளை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

4. தமிழ்க்கடல், ஆன்மீக குரு மற்றும் 64வது நாயன்மார் என போற்றப் படுபவரான **திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்** பெயரில் ஒரு **பல்கலைக் கழகத்தை** தமிழக அரசு தொடங்க வேண்டும் என இம்மாநாடு கோருகிறது.

5. செங்குந்தர்களின் பூர்விகமும், பட்டு நெசவுக்கும் மற்றும் திருக்கோயில்களுக்கும் புகழ்ப் பெற்ற, பழம் பெருமை வாய்ந்த பெருநகரமான **காஞ்சிபுரத்திற்கு "பாரம்பரிய நகரம்"** என்ற சிறப்புத் தகுதியினை வழங்க மத்திய அரசை இம்மாநாடு கோருகிறது.

6. மத்திய அரசு எடுத்த **சாதி வாரி கணக்கெடுப்பை** உடனடியாக அறிவிக்க வேண்டும் என இம்மாநாடு கோருகிறது.

7. தமிழக அரசு **மாநில ஜவுளி குழு** அமைக்கப்பட்டதை வரவேற்கிறோம். அதே சமயத்தில் **நெசவாளர்களுக்கும்** அதில் பிரதிநிதித்துவம் கொடுக்கவேண்டும் என இம்மாநாடு கோருகிறது.

8. செங்குந்தர்களுக்கு பாத்தியப்பட்ட அனைத்து சொத்துக்களையும் அபகரித்துள்ளவர்களிடம் இருந்து அச்சொத்துக்களை மீட்டெடுக்க செங்குந்தர்களாகிய நாம் அனைவரும் ஒன்றிணைந்து செயல்படுவோம் என்று தீர்மானிக்கிறோம்.

9. வருகின்ற சட்டமன்றத் தேர்தலில் செங்குந்தர்களாகிய எங்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு ஆதரவு அளிப்பவரை ஆதரிப்பதும், **அரசியலில் செங்குந்தர்களுக்கான இடங்களை** பெறுவதற்கும் இது பற்றிய **முடிவு எடுக்கும் அதிகாரத்தை** நம் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவரான உயர்திரு. **K.P.K.செல்வராஜ்** அவர்களுக்கு அதிகாரம் அளிக்கலாம் என தீர்மானிக்கப்படுகிறது.







10. நெசவாளர்களுக்கு வழங்கப்பட்டு வந்த **கூலி உயர்வு** ஆண்டு ஒன்றுக்கு 10 சதவீதம் என்றிருப்பதை **30 சதவீதமாக** உயர்த்தியும் மாதம் ஒன்றிற்கு மின்சார மானியம் 50 யூனிட் என்றிருப்பதை **100 யூனிட்டாக** உயர்த்திடவும், வரி மற்றும் மீட்டர் கட்டணத்தை இரத்து செய்திட வேண்டும் எனவும் தமிழக அரசை இம்மாநாடு கோருகிறது.

11. நெசவாளர்களுக்கு வழங்கப்பட்டு வரும் **காப்பீட்டுத் தொகை** ரூ.1,00,000/- (ரூபாய் ஒரு லட்சம்) என்பதை **ரூ.5,00,000/-** (ரூபாய் ஐந்து இலட்சம்) என உயர்த்தப்பட வேண்டும் என்றும் மற்றும் ஓய்வூதியத் தொகை ரூ.1,000/- (ரூபாய் ஓராயிரம்) என்றிருப்பதை **ரூ.5,000/-** (ரூபாய் ஐந்தாயிரம்) ஆக உயர்த்தப்பட வேண்டும் என்று கோருகிறது.

12. கணவன் அல்லது மனைவி இறந்தால் வழங்கப்படும் **உதவித் தொகை** இன்றைய விலைவாசி உயர்வினை மனதிற்கொண்டு ரூ.1,000/- (ரூபாய் ஓராயிரம்) த்திலிருந்து **ரூ.5,000/-** (ரூபாய் ஐந்தாயிரம்) ஆகவும் உயர்த்தப்படவேண்டும் என்றும் மேலும், உதவித் தொகையினை அவர்கள் ஆயுள் முழுவதும் கொடுக்கப்பட வேண்டும் என்றும் மாநாடு வலியுறுத்துகிறது.

13. நெசவாளர் குடும்பத்தில் பிறந்தவருக்கு வீட்டுக்கு ஒருவருக்கு **இலவச கல்வியும்,** அரசு பணிகளில் **பணி இட ஒதுக்கீடு** கொடுக்க வேண்டும் என்று கோருகிறது.

14. நெசவாளர் அனைவருக்கும் பசுமை வீட்டிற்கு வழங்கப்பட்டு வரும் மானியத் தொகை ரூ.2,60,000/- (ரூபாய் இரண்டு இலட்சத்து அறுபதாயிரம்)த்திலிருந்து ரூ.5,00,000/- (ரூபாய் ஐந்து இலட்சம்) ஆக உயர்த்தி கொடுக்க வேண்டும் என கோருகிறோம்.

15. நெசவாளர்களுக்கு தேவையான **கைத்தறி உபகரணங்கள்** வருடத்திற்கு ஒருமுறை அவசியம் வழங்கப்படவேண்டும். அரசு கூட்டுறவு சங்கங்களுக்கு அளித்து வரும் தள்ளுபடி (Rebate) தொகைகளை 30 நாட்களுக்குள் கூட்டுறவு சங்கங்களுக்கு அனுப்பி வைத்து நிதி பிரச்சனை இல்லாமல் சங்கங்கள் இயங்க வழி வகை செய்யவேண்டும் என இம்மாநாடு கோருகிறது.

16. **நெசவாளர்களின் நலன்** மற்றும் தொழில் முன்னேற்றம் அடைவதற்காக ஜவுளி தொழிலின் மூலப்பொருளான நூலின் விலையினை குறைந்த பட்சம் 6 மாதங்கள் வரையாவது **ஒரே சீரான மற்றும் நிலையான விலையை** வழங்க வேண்டும் என கோருகிறது.

17. தமிழக மக்களின் நலன் கருதி **பூரண மது விலக்கை அமல்படுத்த வேண்டும்** என இம்மாநாடு கோருகிறது.

18. **புரட்சி கவிஞர் பாரதிதாசன்** பிறந்த நாள் மற்றும் நினைவு நாளை கவிஞர்கள் தினமாக அறிவித்த தமிழக அரசுக்கு இம்மாநாடு நன்றி தெரிவித்துக் கொள்கிறது.





# மாநாடு பற்றி செங்குந்த சொந்தங்களின் கருத்துகள்

சேலம் மாநகரில் ஒரு லட்சத்துக்கும் அதிகமான உறவுகளை ஒன்று திரட்டி தமிழகத்தின் பார்வையை நம் மீது திசை திருப்பிய தங்களுக்கு எங்கள் பகுதி இளைஞர் அமைப்பின் சார்பில் நன்றியை காணிக்கையாக சமர்ப்பிக்கின்றோம். மாற்றம் முன்னேற்றமாக விரைவில் மலரும் அப்போது நம் சேவல் குரல் ஒலிக்கும்..

- **அ.சுந்தரேஸ்வரன்,** தென்காசி.

***

செங்குந்தர் இனத்துக்காக சேலம் மாநாட்டில் போர் பரணி பாடி, பகை நடுங்கச் செய்த செங்குந்தர் செம்மலே! சுபாஸ் சந்திர போஸ் போன்று போர் முரசு முழங்கிய முற்போக்குகாரரே! வாழ்க! வாழ்க!! செங்குந்தர் வையம் உள்ளவரை வாழ்க.

- **கனகசபாபதி,** B.A., D.A.,
Rtd. Dy.Agri Officer, கரூர்.

***

இதுவரை எத்தனையோ மாநாடுகள் நடைபெற்று இருந்தாலும் இந்த மாநாடு செங்குந்தர்கள் வாழ்வில ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தி உள்ளது. எழுச்சிப் பேரணியில் யாரையும் பணம் கொடுத்து கூட்டி வரவில்லை. அவர்களாகவே தனது சொந்த செலவில் வந்து எழுச்சிப் பேரணியில் கலந்து மாநாட்டையும் சிறப்பித்தார்கள். ஆண்களுக்கு சரிசமமாக அதிக அளவில் பெண்கள் கலந்து கொண்டார்கள். இந்த பெருமை தங்களையே சேரும். கடந்த இரண்டு மாதகாலமாக எல்லா மாவட்டங்களுக்கும் சென்று ஊர் ஊராக கூட்டம் நடத்தி செங்குந்த சொந்தங்கள சந்தித்ததின் பலன்தான் இந்த மாநாடு வெகு சிறப்பாக நடந்தது.

**-செ.மோகன்,**
பரமக்குடி.

***

தங்களுடைய பத்து மாத கால கடின உழைப்பாலும், நிர்வாகக்குழு மற்றும் மாநில செயற்குழு உறுப்பினர்கள், நமது சமுதாய சொந்தங்களின் கூட்டு முயற்சியிலும் கிடைத்த இந்த 19வது மாநாடு என்னும் வெற்றிக்கனி.

- **T.தயாநிதி,** காஞ்சிபுரம்.

***

31.01.2016 அன்று சேலத்தில் மிகப் பிரமாண்டமான பேரணி மற்றும் நம் சமூக மாநாட்டை மிகச்சிறப்பாக நடத்தி நமது சமூக வலிமையை சக்தியை எழுச்சியை ஏனைய மக்களுக்கும் குறிப்பாக தமிழகத்தின் அரசியல் கட்சிகளுக்கும் மிகச்சிறப்பாக தெளிவாக விளக்கியுள்ளீர்கள்!

சுமார் 39 ஆண்டுகளுக்கு முன், 1976இல் ஈரோடு நகரில் காலஞ்சென்ற கைத்தறி நெசவாளர் நம் செங்குந்த சமூக மாநிலத் தலைவர் திரு.எம்.பி.நாச்சிமுத்து முதலியார் அவர்கள் மிகப் பிரமாண்டமான பேரணி மற்றும் மாநில செங்குந்த மாநாட்டை நடத்தினார்கள். அதற்குப்பிறகு, இத்தனை ஆண்டு காலமாக, நம் சமூகத்தாரால் பெரிதும் ஆர்வத்துடன் எதிர்பார்க்கப்பட்ட நமது சமூக மாநாட்டை, மிகமிகச் சிறப்பாக ஒருங் கிணைத்த தங்களுக்கும், அனைத்து நிர்வாகி களுக்கும் அலைகடலென பல ஊர்களிலிருந்தும் திரளாகப் பங்கேற்ற நம் சமூகத்தினர் அனைவருக்கும் எம் மகிழ்ச்சியுடன் கூடிய இனிய நல்வாழ்த்துக்கள்!

தாங்கள் மற்றும் நிர்வாகிகள் அனைவரது மேலான ஒருங்கிணைப்பு, அயராத சேவை மூலம் நம் சமூகம், குறிப்பாக நம் சமூக இளைஞர்கள் உற்சாகமும் எழுச்சியும் பெறுவார்கள் என்பது உறுதி.

**-சண்முகம் பெரியசாமி,**
நியூயார்க், அமெரிக்கா.

***

கடந்த 31.01.2016 அன்று சேலம் 19வது செங்குந்தர் மாநாடு பார்போற்றும் வண்ணம் தங்கள் தலைமையில் நடைபெற்றதை கண்டு நாங்கள் பெரும் மகிழ்ச்சியுற்றோம். தங்கள் பணி சிறக்க நம் குலகடவுள் செந்தூர் வேலவர் திருவடிகளை வணங்குகிறோம்.

- **சொ.சம்பத்,** செயலாளர், லோகநாதபுரம்.

***





## மாநாட்டின் வெற்றிக்கு அல்லும் பகலும் உழைத்து களப்பணியாற்றிய சேலம் செங்குந்த சொந்தங்கள்


P.ஆனந்தன்


A.ஆனந்த்


M.சதீஷ்


R.கோபி


K.தேவராஜ்


விஸ்வநாதன்


பானு


M.செந்தில்குமார்


S.கோவிந்தவேல்


A.மேகநாதன்


S.காளிமுத்து


A.சீனிவாசன்


M.N.சிவா


N.P.பிரபு


P.சிவசண்முகம்


S.திருச்சிற்றம்பலம்


M.லோகநாதன்


திருப்பதி லோகு


S.சுகதேவ்


S.சுப்ரமணி


P.மாதேஸ்வரன்


M.K.அரிபுத்திரன்


D.கோபால்


K.V.ராமலிங்கம்


S.பானு


A.சேஷாசலம்


S.செல்வராஜ்


R.கார்த்திகேயன்


H.ரஞ்சித்

மொழியால்தான் நால்வர்; ஆனால், கலாச்சாரத்தால், பண்பால், பழக்க வழக்கங்களால், உடையால், உள்ளத்தால் ஒருவரே திராவிட இனத்தவர்.

\- அறிஞர் அண்ணா





# நமது எழுச்சி மாநாடுகள் 1929-2016

**1 வது மாநாடு**

## முதலாவது மாநாடு

1929-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 19, 20 தேதிகளில் கோயம்புத்தூர் ஜில்லா, ஈரோட்டில் செங்குந்த நகர் நவவீரர் மாளிகையில் தென்னிந்திய செங்குந்தர் முதல் மாநாடு பெரும் சிறப்புடன் நடந்தேறியது.

| | |
|---|---|
| கொடி உயர்த்தியவர் | திரு. ம.த. சாமிநாத முதலியார், காஞ்சிபுரம். |
| சமூக மாநாட்டுத் திறப்பாளர் | திவான் பகதூர் கனம் எம். கிருஷ்ணன் நாயர், அரசாங்க சட்ட அங்கத்தினர், சென்னை. |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | திரு. வி.எஸ். செங்கோட்டைய முதலியார், கோவை. |
| சமூக மாநாட்டு தலைவர் | திரு. ஆ.வே. முத்தைய முதலியார் பி.ஏ., பி.எல், புதுவை பிரஞ்சு அரசாங்க பிரதம மந்திரி, புதுச்சேரி. |
| வர்த்தகர் மாநாட்டுத் திறப்பாளர் | திரு. தி. நா. சபாபதி முதலியார், திருவாரூர் முனிசிபல் கவுன்சிலர், மடப்புரம், திருவாரூர். |
| வர்த்தகர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | திரு. தி.ரா. கந்தப்ப முதலியார், தாலுக்கா போர்டு அங்கத்தினர், திருச்செங்கோடு. |
| வர்த்தகர் மாநாட்டுத் தலைவர் | திரு. டி.பி.கே. ஆறுமுக முதலியார், பேங்கர், தென்காசி. |
| வாலிபர் மாநாட்டுத் திறப்பாளர் | திரு. கு. முத்துக்குமரசாமி முதலியார், கொல்லங்கோடு. |
| வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | திரு. மா.ரெ. பீமராஜ முதலியார், முனிசிபல் சேர்மன், குடியேற்றம். |
| கண்காட்சி திறப்பாளர் | பெரியார் திரு. ஈ.வே. இராமசாமி நாயக்கர், ஈரோடு. |
| தொண்டர் படைத்தலைவர் | திரு. எஸ். மீனாட்சி சுந்தர முதலியார், தலைமை ஆசிரியர், மகாஜன ஹைஸ்கூல், ஈரோடு. |
| பொதுக் காரியதரிசி, | திரு. வி.வி.சி.வி. நடேச முதலியார், திருச்செங்கோடு. |

2 வது மாநாடு

## இரண்டாவது மாநாடு

1931-ஆம் ஆண்டு மே மாதம் 16,17 தேதிகளில் செங்கற்பட்டு ஜில்லா, காஞ்சிபுரத்தில் நம்மவர்களுக்குச் சொந்தமான ஸ்ரீ கச்சாபேஸ்வரர் ஆலயத்தில் அமைக்கப்பெற்ற முத்தைய நகரில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் இரண்டாவது சமூக, வாலிபர் மகாநாடுகள் நடைபெற்றன.

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. வி.எஸ். செங்கோட்டைய முதலியார், கோயம்புத்தூர். |
| சமூக மாநாட்டு திறப்பாளர் | : | திரு. ஆ.வே. முத்தைய முதலியார், பி.ஏ.,பி.எல்., புதுவை. |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. ம.த. சாமிநாத முதலியார், நகராட்சி கழகத் தலைவர், காஞ்சிபுரம். |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : | திரு. தி.நா. சபாபதி முதலியார் அவர்கள், மதராஸ் பாளையகாட் கம்பெனி கூட்டாளி, மடப்புரம், திருவாரூர். |
| வாலிபர் மாநாட்டுத் திறப்பாளர் | : | திரு. அ.ரா. செல்லப்ப முதலியார், நிலக்கிழார், தக்கோலம். |
| வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. சா.ரா. தங்கவேல் முதலியார், நிலக்கிழார், காஞ்சிபுரம். |
| பொதுக் காரியதரிசி | : | திரு. கனக. தெய்வசிகாமணி முதலியார், கைலி வணிகர், திருநாகேஸ்வரம் குன்றத்தூர். |
| தொண்டர் படைத் தலைவர் | : | திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி., ஆசிரியர், பச்சையப்பன் உயர் நிலைப்பள்ளி, காஞ்சிபுரம். |

3 வது மாநாடு

## மூன்றாவது மாநாடு

1931-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 26-ம் நாள் தென்னிந்திய செங்குந்தர் மூன்றாவது மாநாடு சென்னை, மயிலாப்பூர் சுந்தரேஸ்வரர் மண்டபத்தில் நடைபெற்றது.

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. எஸ்.கே.எம். முருகைய முதலியார், மதராஸ் பாளையகாட் கம்பெனி கூட்டாளி கவர்மெண்ட் பென்ஷனர், திருவாரூர். |
| திறப்பாளர் | : | கனம் பி.டி.ராஜன் பார் அட் லா, எம்.எல்.சி., அரசாங்க மந்திரி, சென்னை. |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. எஸ். குழந்தைவேல் முதலியார், பிங்கர் பிரிண்ட் பிரோவ் மேனேஜர், மயிலாப்பூர். |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : | திரு. கே.என். சுப்பிரமணிய முதலியார், பி.ஏ., கல்லிடைக்குறிச்சி வக்கீல், அம்பாசமுத்திரம். |





| | | |
|---|---|---|
| வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு.வீ. இரத்தின முதலியார், பி.ஏ., பி.எல்., அட்வகேட், மயிலாப்பூர். |
| வாலிப மாநாட்டுத் தலைவர் | : | திரு. வி.எஸ். சங்கரசுப்ரமணிய முதலியார், பி.ஏ., பி.எல்., அட்வகேட், வீரவநல்லூர். |
| பொதுக் காரியதரிசி | : | திரு. எஸ்.கே. விநாயக முதலியார், பி.ஏ., பி.எல்., அட்வகேட், மயிலாப்பூர். |

4வது மாநாடு

## நான்காவது மாநாடு

1933-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 12-13 தேதிகளில் தஞ்சை மாவட்டம் திருவாரூரில் தென்னிந்திய செங்குந்தர் நான்காவது சமூக, வாலிபர், வர்த்தகர் மாநாடு நடைபெற்றது.

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. எம்.ஏ. வேலாயுத முதலியார், நகராட்சிக் கழக அங்கத்தினர், குடியாத்தம். |
| சமூக மாநாட்டுத் திறப்பாளர் | : | திரு. ஆ.வே. முத்தைய முதலியார், பி.ஏ.,பி.எல்., புதுவை. |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. தி.நா. சபாபதி முதலியார், மடப்புரம், திருவாரூர். |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : | திரு. எம். சண்முகசுந்தர முதலியார், எம்.ஏ., எல்.டி., ஆசிரியர். 'செங்குந்த மித்திரன்' செயலாளர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம், சென்னை. |
| வர்த்தகர் மாநாட்டு திறப்பாளர் | : | திரு. கே.ஏ. சண்முக முதலியார், திருப்பத்தூர். |
| வர்த்தகர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. ஆர்.பி.ஆர்.எம். நடராஜ முதலியார், முனிசிபல் கவுன்சிலர், மன்னார்குடி. |
| வர்த்தகர் மாநாட்டுத் தலைவர் | : | திரு. வி.எஸ். செங்கோட்டைய முதலியார், கோயம்புத்தூர். |
| வாலிபர் மாநாட்டுத் திறப்பாளர் | : | திரு. பாவா, கோபால்சாமி முதலியார், முனிசிபல் சேர்மன், திருவாரூர். |
| வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு.ஆர். விநாயகமூர்த்தி முதலியார், மஞ்சக்கொல்லை. |
| வாலிபர் மாநாட்டுத் தலைவர் | : | திரு. சி. பன்னிருகைப்பெருமாள் முதலியார், பி.ஏ., பி.எல்., ராஜா கல்லூரி லெக்சரர், திருவாங்கூர். |
| தொண்டர் படைத் தலைவர் | : | திரு. டி.எஸ். தெட்சிணாமூர்த்தி முதலியார், மடப்புரம், திருவாரூர். |
| பொதுகாரியதரிசி | : | திரு. எஸ்.கே.எம். முருகையா முதலியார், மடப்புரம், திருவாரூர். |



5 வது மாநாடு

## ஐந்தாவது மாநாடு

வட ஆர்க்காடு ஜில்லா திருவத்திபுரத்தில் சபாபதி வள்ளலார் மாளிகையில் 1935-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 2, 3, தேதிகளில் தென்னிந்திய செங்குந்தர் ஐந்தாவது மாநாடு நடைபெற்றது.

| | |
|---|---|
| கொடி உயர்த்தியவர் | : திரு. பி.ஏ. பத்மநாப முதலியார், அம்பாசமுத்திரம். |
| திறப்பாளர் | : கனம் ராவ் பகதூர் எ.டி. பன்னீர்செல்வம் அரசாங்க உள்நாட்டு மந்திரி, சென்னை. |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : திரு. மா. லோகநாத முதலியார், ஜில்லா போர்டு அங்கத்தினர், திருவோத்தூர். |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : திரு. டி.பி.கே. ஆறுமுக முதலியார், பேங்கர், தென்காசி. |
| வர்த்தகர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : திரு. எம்.வி. பீமராஜ முதலியார், முனிசிபல் சேர்மன், குடியாத்தம். |
| வர்த்தகர் மாநாட்டுத் தலைவர் | : திரு. பி.ஆர்.பி.எம். நடராஜ முதலியார், முனிபல் சேர்மன், மன்னார்குடி. |
| வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : திரு. ஏ.ஆர். செல்லப்ப முதலியார், தக்கோலம். |
| வாலிபர் மாநாட்டுத் தலைவர் | : திரு. வி. இரத்தின முதலியார், பி.ஏ., பி.எல்., அட்வகேட், சென்னை. |
| பொதுக் காரியதரிசி | : திரு. கே.எஸ். குப்புசாமி முதலியார், அசனமாபேட்டை. |
| தொண்டர்படைத் தலைவர் | : திரு. வி. மாரிமுத்து முதலியார், அசனமாபேட்டை. |

6 வது மாநாடு

## ஆறாவது மாநாடு

திருநெல்வேலி ஜில்லா அம்பாசமுத்திரத்தில் 1936-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 27, 28 தேதிகளில் திருமூலர் மாளிகையில் தென்னிந்திய செங்குந்தர் ஆறாவது சமூக, கைத்தறி, நெசவாளர், மாதர் மகாநாடுகள் நடைபெற்றன.

| | |
|---|---|
| கொடி உயர்த்தியவர் | : திரு. ச. பழனியப்ப முதலியார், பாங்கர், மதுரை. |
| மாநாட்டுத் திறப்பாளர் | : திரு. வி.எஸ். செங்கோட்டைய முதலியார், ஸ்ரீ சாரதா மில்ஸ் மேனேஜிங் டைரக்டர், கோயம்புத்தூர். |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : திரு. கே.என். சுப்பிரமணிய முதலியார், பி.ஏ.பி.எல்., வக்கீல், அம்பாசமுத்திரம். |



| | | |
|---|---|---|
| மாநாட்டு பொதுச் செயலாளர் | : | திரு. ஏ.வி.ஆர்.எம். வேலாயுத முதலியார், சங்கரன்கோவில் |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : | திரு. ம.க. சுவாமிநாத முதலியார், முனிசிபல் சேர்மன், காஞ்சிபுரம். |
| வர்த்தகர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. டி.பி.கே. ஆறுமுக முதலியார், தென்காசி. |
| வர்த்தகர் மாநாட்டுத் தலைவர் | : | ராவசாஹிப். டி.வி. நடேச முதலியார் பெஞ்சகோர்ட் பிரசிடெண்ட், திருச்செங்கோடு. |
| வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. வி.எஸ். சங்கரசுப்பிரமணிய முதலியார் பி.ஏ.,பி.எல்., வக்கீல், திருநெல்வேலி. |
| வாலிபர் மாநாட்டுத் தலைவர் | : | திரு. கே. முத்துக்குமாரசாமி முதலியார், கொல்லங்கோடு, எஸ். மலபார். |
| பொதுக் காரியதரிசி | : | திரு. பி.ஏ. கணபதி முதலியார், பி.ஏ., எல்.டி., அம்பாசமுத்திரம். |
| முதலாவது மாதர் மாநாட்டுக் காரியதரிசி | : | திருமதி. எம். முத்தம்மாள், வீரவநல்லூர். |
| வரவேற்புத் தலைவர் | : | திருமதி. எஸ். குற்றாலம்மாள், அம்பாசமுத்திரம். |
| மாநாட்டுத் திறப்பாளர் | : | திருமதி. ஆர். கோகிலாம்பாள், திருநெல்வேலி. |

முதன் முதலாக கைத்தறி மாநாடும், மாதர் மாநாடும் திருநெல்வேலியில் கூட்டப்பெற்றது சிறப்பு நிகழ்ச்சியாகும்.

7 வது மாநாடு

## ஏழாவது மாநாடு

மதுரை ஜில்லா, மதுரை பழனியப்ப நகரில் 1937-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 29, 30ஆம் தேதிகளில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 7-வது சமூக வர்த்தக, வாலிபர் மாதர் மாநாடுகள் சிறப்பாக நடைபெற்றன.

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. ஏ.என்.கே. சிவசிதம்பர முதலியார், ஆண்டிமடம். |
| திறப்பாளர் | : | திரு. தி.நா. சபாபதி முதலியார், திருவாரூர். |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. ச.ப. சண்முக சுந்தர முதலியார், மதுரை. |
| வாலிபர் மாநாட்டின் வரவேற்புத் தலைவர் | : | திரு. எஸ். சாலை முதலியார், மதுரை. |
| வாலிபர் மாநாட்டுத் தலைவர் | : | திரு. ஏ. ஏகாம்பர முதலியார், நீர்ப்பாசன இலாகா சூப்ரண்டெண்டு, இலங்கை. |
| வர்த்தகர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. நா.ப. பழனிக்குமார் முனிசிபல் கவுன்சிலர், ஜவுளி வியாபாரம், மதுரை. |
| வர்த்தக மாநாட்டுத் தலைவர் | : | திரு. டிஆர். சுந்தரம் பி.ஏ.பி.எஸ்.சி. (லீட்ஸ்) மாடர்ன் தியேட்டர்ஸ், சேலம். |

| | | |
|---|---|---|
| தொண்டர் படைத் தலைவர் | : | திரு. ச.வீ.வீரப்ப முதலியார், மதுரை. |
| பொதுக் காரியதரிசி | : | திரு. எஸ். மாணிக்க முதலியார், முனிசிபல் ஹெட்கிளார்க், மதுரை. |
| மாதர் மாநாட்டுத் திறப்பாளர் | : | திருமதி சி.என். கௌரியம்மாள், சென்னை. |
| வரவேற்புத் தலைவர் | : | திருமதி. பிச்சையம்மாள், மதுரை. |
| மாநாட்டுத் தலைவர் | : | திருமதி. ஆ.அன்னபூரணியம்மாள்,கோடம்பாக்கம். |

8 வது மாநாடு

## எட்டாவது மாநாடு

திருச்சிராப்பள்ளி ஜில்லா திருவானைக்காவலில் அமைக்கப் பெற்ற செங்குந்தர் மாளிகையில் 1939 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 2,3 தேதிகளில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க 8-வது மாநாடு நடைபெற்றது.

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. ம.பா.ராம. இருளாண்டி முதலியார், பரமக்குடி. |
| திறப்பாளர் | : | திவான்பகதூர். திரு. டி.எம்.நாராயணசாமிப் பிள்ளை, அட்வகேட், திருச்சிராப்பள்ளி. |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. ஏ.என்.கே. சிவசிதம்பர முதலியார், ஆண்டிமடம். |
| தலைவர் | : | திரு. எஸ். மீனாட்சி சுந்தரம், பி.ஏ., எல்.டி., ஈரோடு. |
| வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. கே.ஆர். வேலாயுத முதலியார், ஜவுளி நூல் வியாபாரம், பொன்பரப்பி. |
| வாலிபர் மாநாட்டுத் தலைவர் | : | திரு. ஏ.எஸ். முத்தையா முதலியார், எம்.ஏ., ஆர்ட்ஸ் காலேஜ் லெக்சரர், திருவனந்தபுரம். |
| தொண்டர் படைத் தலைவர் | : | திரு. முத்துசாமி முதலியார் |
| பொதுக் காரியதரிசி | : | திரு. சி.பி. குமாரசாமி முதலியார், பி.ஏ., |
| மாதர் மாநாட்டுத் திறப்பாளர் | : | திருமதி அபிராமி அம்மாள் |
| வரவேற்புத் தலைவர் | : | திருமதி சாவித்திரி தேவி |
| தலைவர் | : | திருமதி சி.ப. பகவதி அம்மாள். கோட்டாறு. |

## சிறப்பு மாநாடு

1940-ஆம் ஆண்டு ஏப்ரல் 28ஆம் நாள் சென்னை அரண்மனைக்காரன் தெரு. கோகலேஹாலில் சிறப்பு மாநாடு நடைபெற்றது.

| | | |
|---|---|---|
| தலைவர் | : | திரு. எஸ். மீனாட்சிசுந்தர முதலியார், ஈரோடு. |
| திறப்பாளர் | : | திரு. எம். சுவாமிநாத முதலியார். காஞ்சிபுரம் |

சம்பந்தப்பட்ட அமைச்சர்களைச் சந்தித்து நம் சமூகத்தவர்கள் - கல்வி, பொருளாதாரத்தில் பின்தங்கியவர்கள் என்பதை ஆதாரத்துடன் விளக்கிக் கூறியதின் பயனாக மீண்டும் செங்குந்தர் சமூகம் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்கப்பட்டது.





9 வது மாநாடு

## ஒன்பதாவது மாநாடு

இடம் : பரமக்குடி இராமசாமி மாளிகை. நாள் : 26 மற்றும் 27 டிசம்பர் 1940

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. க. முருகேச முதலியார், சிதம்பரம். |
| சமூக மாநாட்டு திறப்பாளர். | : | திரு. எச்.பி. ஆரிகவுடர், நீலகிரி. |
| சமூக மாநாட்டு வரவேற்பு தலைவர் | : | திரு. ம.பா. ராம இருளாண்டி முதலியார், பரமக்குடி. |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : | திரு. டி.என். சபாபதி முதலியார், திருவாரூர். |
| இளைஞர் மாநாட்டுத் திறப்பாளர் | : | திரு. வை.ச. ராமலிங்க முதலியார், கண்டாச்சிபுரம். |
| இளைஞர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. வி.எஸ். கோதண்ட ராமச்சந்திர முதலியார், அபிராமம். |
| இளைஞர் மாநாட்டுத் தலைவர் | : | திரு. வி.வி.சி.ஆர். முருகேச முதலியார், திருச்செங்கோடு. |
| மாதர் மாநாடு திறப்பாளர் | : | திருமதி. சி.கே. சுசீலா அம்மாள் |
| வரவேற்புத் தலைவர் | : | திருமதி. பி.எம்.எஸ். பெரியபாப்பம்மாள் |
| தலைவர் | : | திருமதி.ஏ.ஏ. கமலபூஷணியம்மாள், இலங்கை |
| பொதுக் காரியதரிசி | : | திரு. டி.எஸ். சேது முதலியார், பரமக்குடி. |
| தொண்டர்படைத் தலைவர் | : | திரு. நாகரத்தின முதலியார் |

10 வது மாநாடு

## பத்தாவது மாநாடு

இடம் : குறிஞ்சிப்பாடி, தென்னாற்காடு ஜில்லா

நாள் : 25 மற்றும் 26 ஜூன் மாதம் 1947

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. ஆர்.வி. கோபால் முதலியார், திருச்செங்கோடு. |
| சமூக மாநாடு திறப்பாளர் | : | திரு. தி.நா. சபாபதி முதலியார், திருவாரூர் |
| சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. எஸ்.கே. வேலாயுத முதலியார், குறிஞ்சிப்பாடி |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : | திரு. வி.எஸ். செங்கோட்டைய முதலியார், கோயம்புத்தூர். |
| இளைஞர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு. பி. முத்தைய முதலியார், குறிஞ்சிப்பாடி. |
| இளைஞர் மாநாட்டுத் தலைவர் | : | திரு. வி.எஸ். சங்கரசுப்பிரமணிய முதலியார், எம்.எல்.ஏ., திருநெல்வேலி. |







எட்டாவது மகாநாட்டில் தலைவர்கள் – 1939



ஒன்பதாவது மகாநாட்டில் தலைவர்கள் – 1940

வர்த்தக மாநாட்டு வரவேற்புத் தலைவர் : திரு. வி.கே. பழனிச்சாமி முதலியார், புதுச்சேரி

வர்த்தக மாநாட்டு தலைவர் : திரு. ச.மு. சபாபதி முதலியார், சோளிங்கபுரம்.

மாதர் மாநாடு தலைவர் : திருமதி இ.வி.எஸ். கௌசல்யா

வரவேற்புத் தலைவர் : திருமதி டி. எம். உலகநாயகியம்மாள்

பொதுக்காரியதரிசிகள் : திரு. அ.ந.சோ. கோவிந்தசாமி முதலியார்
திரு பி.பி. நாராயணசாமி முதலியார், குறிஞ்சிப்பாடி

தொண்டர் படைத்தலைவர் : திரு. எஸ்.கே. சம்பந்த முதலியார், குறிஞ்சிப்பாடி

11 வது மாநாடு

## பதினொன்றாவது மாநாடு

இடம்: திருச்செங்கோடு, சேலம் மாவட்டம் நாள்: பிப்ரவரி 12, 13-1956

கொடி உயர்த்தியவர் : திரு. வேங்கான் பொன்னுசாமி முதலியார், சத்திரவாடி

மாநாட்டுத் திறப்பாளர் : திரு. பி. கக்கன், எம்.பி. அமைச்சர், தமிழக அரசு.

வரவேற்புத் தலைவர் : திரு. வி.வி.சி.ஆர். வையாபுரி முதலியார், திருச்செங்கோடு

மாநாட்டுத் தலைவர் : திரு கா.அ. சண்முக முதலியார், திருப்பத்தூர்

வாலிபர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் : டாக்டர் பி.எம். பிரமநாத முதலியார்,எம்.பி.பி.எஸ்., நாமக்கல்

வாலிப மாநாட்டுத் தலைவர் : திரு. சு. ராமலிங்க முதலியார், ஆக்கூர்

12 வது மாநாடு

## பன்னிரெண்டாவது மாநாடு

இடம் : திருத்தணி நாள் : மார்ச் 20, 1960

சமூக மாநாட்டுத் தலைவர் : திரு எம்.பி. நாச்சிமுத்து முதலியார் பி.ஏ.பி.எல்., ஈரோடு.

மாநாட்டுத் திறப்பாளர் : திரு. எம்.ஏ. மாணிக்கவேலு பி.ஏ.பி.எல்., சென்னை.

கைத்தறி மாநாட்டுத் தலைவர் : திரு ராம.ச. சம்மந்தமூர்த்தி முதலியார், மஞ்சக் கொல்லை

கைத்தறி மாநாட்டுத் திறப்பாளர் : திரு ஆர். வெங்கட்ராமன் எம்.ஏ.பி.எல்., தொழில் அமைச்சர், சென்னை.

கொடி உயர்த்தியவர் : திரு வி.எம். ஜெகநாத முதலியார், ஈரோடு

சமூக மாநாட்டு வரவேற்புக்குழுத் தலைவர் : திரு இ.எஸ். தியாகராஜன், பொதட்டூர்பேட்டை

கைத்தறி மாநாட்டு வரவேற்புக்குழுத் தலைவர் : திரு வே. பொன்னுசாமி முதலியார்

பொதுச் செயலாளர் : திரு வி.கே. சஞ்சீவி முதலியார்





| | | |
|---|---|---|
| பொருளாளர் | : | திரு ஆர்.என்.கே. அண்ணாமலை முதலியார் |
| கைத்தறி மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு காசி. விஸ்வநாத முதலியார், திருச்செங்கோடு. |
| கைத்தறி மாநாட்டுத் தலைவர் | : | திரு வி.எஸ். சங்கரசுப்ரமணிய முதலியார், திருநெல்வேலி |
| மாதர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | டாக்டர் திருமதி நீலாம்பாள் ராமசாமி, சேலம். |
| மாதர் மாநாட்டுத் தலைவர் | : | திருமதி வி.பி. மீனாட்சியம்மாள், திருநெல்வேலி. |

13 வது மாநாடு

## பதின்மூன்றாவது மாநாடு

இடம் : ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப் பள்ளி வி.எம்.மொட்டையப்ப முதலியார் மாளிகையில் வி.வி.சி.ஆர். முருகேச முதலியார் அரங்கில் சிறப்பாக நடைபெற்றது.

நாள் : 1976 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 25 மற்றும் 26

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு. டிவி. வெங்கடசுப்ரமணியம், எம்.ஏ.பி.எல், காஞ்சிபுரம். |
| மாநாட்டு திறப்பாளர் | : | திரு ஜி. கருப்பையா மூப்பனார், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவர் |
| வரவேற்பு தலைவர் | : | திரு எம்.பி. நாச்சிமுத்து முதலியார், பி.ஏ.பி.எல்., ஈரோடு. |
| தலைவர் | : | திரு சி. நடராஜ முதலியார், சென்னை |
| மாதர் மாநாட்டு வரவேற்பு தலைவர் | : | திருமதி செல்லம் சுந்தரம், ஈரோடு |
| திறப்பாளர் | : | திருமதி வி. சரோஜினி வரதப்பன், சென்னை |
| மாநாட்டுத் தலைவர் | : | திருமதி எம். சரஸ்வதி முத்துசாமி, பி.எஸ்சி., பி.டி., |
| கைத்தறி மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு கே.ஜி.பி. ஆறுமுகம், பி.ஏ., ஊத்துக்குளி |
| கைத்தறி மாநாட்டுத் திறப்பாளர் | : | மாண்புமிகு சி. சுப்பிரமணியம், மத்திய அரசு நிதியமைச்சர், டெல்லி. |
| கைத்தறி மாநாட்டு தலைவர் | : | திரு கொண்ட லெஷ்மண் பாபுஜி, ஆந்திர முன்னாள் அமைச்சர், சென்னை. |
| பொதுச் செயலாளர் | : | திரு இ.எம். பாலசுப்பிரமணியம், ஈரோடு |
| தொண்டர் படைத் தலைவர் | : | திரு ஏ. பெரியசாமி, தலைமை ஆசிரியர் செங்குந்தர் உயர்நிலைப் பள்ளி, ஈரோடு. |

## பொன்விழா

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்க பொன்விழா மாநாடு சேலம் அம்மாபேட்டையில் 1981 டிசம்பர் 12, 13 தேதிகளில் நடைபெற்றது.

| | | |
|---|---|---|
| தலைவர் | : | பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து பி.ஏ.பி.எல்.<br>தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம். |

14வது மாநாடு

## பதினான்காவது மாநாடு

இடம் : காஞ்சிபுரம்    நாள் : பிப்ரவரி மாதம் 4 மற்றும் 5 - 1984

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு பி.எஸ். பாலசுப்ரமணிய செங்குந்தர், சென்னை |
| சமூக மாநாட்டுத் திறப்பாளர் | : | திரு ஏ. சங்கர செங்குந்தர், சேலம் |
| சமூக மாநாட்டு வரவேற்பு தலைவர் | : | திரு எம்.எம். சரவண செங்குந்தர், காஞ்சிபுரம் |
| சமூக மாநாட்டுத் தலைவர் | : | திரு ஏ.வி.ஆர்.எம்.வி. சங்கரநாராயண செங்குந்தர், அம்பாசமுத்திரம் |
| மகளிர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திருமதி கே.ஜி. திருஞானம், காஞ்சிபுரம் |
| திறப்பாளர் | : | திருமதி முத்துலெட்சுமி ராமலிங்கம், ஆக்கூர் |
| தலைவர் | : | திருமதி யசோதா சண்முகம், சென்னை |
| கைத்தறி மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | திரு எம்.எம். தணிகைமலை செங்குந்தர், காஞ்சிபுரம் |
| திறப்பாளர் | : | மாண்புமிகு திரு. இராம. வீரப்பன்<br>செய்தி மற்றும் அறநிலையத் துறை அமைச்சர், தமிழ்நாடு அரசு. |
| தலைவர் | : | கைத்தறிக் காவலர் பத்மஸ்ரீ<br>எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர், ஈரோடு |
| சிறப்பு வாழ்த்துரை | : | மாண்புமிகு திரு. எம். பக்தவத்சலம்,<br>தமிழ்நாடு முன்னாள் முதலமைச்சர். |
| இளைஞர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் | : | டாக்டர் நா. ஆறுமுகம் எம்.ஏ.பி.எச்.டி., |
| திறப்பாளர் | : | மாண்புமிகு நீதிபதி டி.என். சிங்காரவேலு பி.ஏ., பி.எல்.,<br>உயர்நீதி மன்றம், சென்னை. |
| தலைவர் | : | நெசவாளர் நேசன்<br>திரு. ஜெ. சுத்தானந்தன், பி.எஸ்சி., ஈரோடு |
| பொதுச் செயலாளர் | : | திரு. ஏ. சம்பந்தன், காஞ்சிபுரம் |
| மாநிலப் பொதுச் செயலாளர்கள் | : | திரு. தி.ரா. செல்வராசன், எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி., சென்னை<br>திரு தெ. சேதுராமன், திருவாரூர் |





## எழுச்சிப் பேரணி மாநாடு

இடம் : சென்னை பெரியார் திடல் நாள் : டிசம்பர் 3 - 1988

| | | |
|---|---|---|
| தலைவர் | : | நெசவாளர் நேசன் ஜெ. சுத்தானந்தன்,பி.எஸ்.சி., தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் |

15 வது மாநாடு

## பதினைந்தாவது மாநாடு

இடம் : சென்னைப் பெருநகர் நாள் : மே மாதம் 12 மற்றும் 13 - 1990

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு ஆர்.என்.சந்தான இராஜகோபால செங்குந்தர், மன்னார்குடி |
| சமூக மாநாட்டு வரவேற்புரை | : | திரு பி.எஸ். சாம்பசிவ செங்குந்தர், சென்னை |
| திறப்பாளர் | : | திரு. பா.கா. ஆறுமுக செங்குந்தர், நகரி |
| தலைவர் | : | நெசவாளர் நேசன் திரு ஜெ.சுத்தானந்தன்,பி.எஸ்சி., ஈரோடு |
| நெசவாளர் மாநாட்டு வரவேற்பு | : | திரு ஏ. பழனிச்சாமி செங்குந்தர், சங்கரன் கோவில் |
| திறப்பாளர் | : | மாண்புமிகு திரு எஸ். தங்கவேல் பி.எஸ்சி., தமிழ்நாடு கைத்தறி துறை அமைச்சர் |
| தலைவர் | : | திரு டி.எஸ். சுப்ரமணிய செங்குந்தர், சென்னை |
| மகளிர் மாநாட்டு வரவேற்புரை | : | திருமதி நீலாவதி சுப்ரணியம், எம்.ஏ., எம்.எட்., சைதாப்பேட்டை |
| திறப்பாளர் | : | திருமதி பரமேஸ்வரி ரெத்தினவேல், சென்னை |
| தலைவர் | : | திருமதி செல்லம் சுந்தரம், ஈரோடு |
| இளைஞர் மாநாட்டு வரவேற்புரை | : | டாக்டர் ஏ.ஜெகநாதன், திரைப்பட டைரக்டர், சென்னை |
| திறப்பாளர் | : | அரிமா எம்.எஸ். சம்பத், எம்.காம்., சைதாப்பேட்டை |
| தலைவர் | : | டாக்டர் டி.கே.தேவராஜன், எம்.பி.பி.எஸ்., திருமழிசை |
| தொண்டர் படைத் தலைவர் | : | திரு டி. நாகப்பன், சென்னை |
| மாநில சங்கப் பொதுச் செயலாளர் | : | டாக்டர் தி.ரா. செல்வராசன், எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி., |
| மாவட்ட சங்கப் பொதுச் செயலாளர் | : | திரு. பொ.கா. சாமிநாதன் பி.காம்., சென்னை |





16 வது மாநாடு

## பதினாறாவது மாநாடு

இடம் : கும்பகோணம், தஞ்சை மாவட்டம்

நாள்: ஜூலை 27-28, 1991 சமூக, நெசவாளர், மகளிர், இளைஞர் மாநில மாநாடுகள்

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு.கே.எம்.கோவிந்தராஜ செங்குந்தர்,<br>குடியாத்தம் |
| சமூக மாநாட்டு வரவேற்புரை | : | திரு ஆர்.என். சந்தான ராஜகோபால செங்குந்தர்,<br>மன்னார்குடி |
| திறப்பாளர் | : | திரு. டி.எஸ். சாமிநாத உடையார், மன்னார்குடி |
| தலைவர் | : | நெசவாளர் நேசன்<br>திரு. ஜெ. சுந்தானந்தன் பி.எஸ்.சி., தலைவர்<br>தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம். |
| மகளிர் மாநாட்டு வரவேற்புரை | : | திருமதி முத்துலெட்சுமி ராமலிங்கம்,<br>புரவலர், தஞ்சை மாவட்டம் |
| திறப்பாளர் | : | திருமதி செல்லம் சுந்தரம், ஈரோடு |
| தலைவர் | : | டாக்டர் சரோஜினி சேதுராமன், திருவாரூர் |
| இளைஞர் மாநாட்டு வரவேற்புரை | : | திரு எஸ். சோலைமுத்து செங்குந்தர், குடந்தை |
| தலைவர் | : | திரு ஆ. ராஜவேலு செங்குந்தர், பெண்ணாடம் |
| திறப்பாளர் | : | டாக்டர் மு. கருணாநிதி, எம்.பி.பி.எஸ்.,<br>திருச்சி மாவட்ட பொதுச் செயலாளர்,<br>ஜெயங்கொண்டம் |
| நெசவாளர் மாநாட்டு வரவேற்புரை | : | நெசவாளர் நேசன்<br>திரு. ஜெ. சுத்தானந்தன், பி.எஸ்.சி, ஈரோடு |
| திறப்பாளர் | : | மாண்புமிகு இ. மதுசூதனன்,<br>தமிழ்நாடு கைத்தறி துறை அமைச்சர் |
| தலைவர் | : | திரு இ.எஸ். தியாகராச செங்குந்தர்<br>சட்டமன்ற முன்னாள் உறுப்பினர்,<br>பொதட்டூர் பேட்டை |
| சிறப்புரை | : | திரு ஏ. தேவராஜன், எம்.எல்.ஏ., செய்யாறு<br>திரு காஞ்சி பன்னீர் செல்வம், எம்.எல்.ஏ., சென்னை<br>திரு. ஏ. கே. சி. சுந்தரவேல் எம்.எல்.ஏ., திருப்பத்தூர்<br>திரு இராம.ராமநாதன், எம்.எல்.ஏ., கும்பகோணம்<br>திரு எம். பாலசுப்ரமணியம், எம்.ஏ., எம்.எல்.ஏ.,<br>பாண்டிச்சேரி |



17வது மாநாடு

## பதினேழாவது மாநாடு

இடம் : வடஆர்காடு அம்பேத்கார் மாவட்டம் குடியாத்தம்

நாள் : 1993 ஆம் ஆண்டு ஜூன் 26 மற்றும் 27 திருவள்ளுவர் மேல்நிலைப் பள்ளியில் திருமுருக கிருபானந்த வாரியார் வளாகத்தில் பெரியவர் திரு. கா.அ.ஷண்முக செங்குந்தர் பந்தலில் அமரர் கே.ஏ.எஸ். பத்மநாப செங்குந்தர் அரங்கில் சமூக, இளைஞர், மகளிர், நெசவாளர் மாநாடுகள் மாண்புற நடைபெற்றன.

| | | |
|---|---|---|
| கொடி உயர்த்தியவர் | : | திரு ஜெ. சுத்தானந்தன் பி.எஸ்.சி., தலைவர்,<br>தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம் |
| சமூக மாநாட்டு வரவேற்புரை | : | திரு கே.எம். கோவிந்தராஜன், குடியாத்தம் |
| திறப்பாளர் | : | சமுதாய கொடை வள்ளல்<br>திரு. பா.க. ஆறுமுக செங்குந்தர், தலைவர்,<br>ஆந்திர மாநில செங்குந்தர் சங்கம் |
| தலைவர் | : | திரு ஜெ.சுத்தானந்தன், பி.எஸ்சி., தலைவர்,<br>தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம் |
| மகளிர் மாநாட்டு தலைவர் | : | திருமதி யசோதா சண்முகம், சென்னை |
| இளைஞர் மாநாட்டு வரவேற்பு | : | திரு கே.எம். தண்டபாணி, குடியாத்தம் |
| தலைவர் | : | திரு கு.ப. கண்ணன், செங்கை செங்குந்தர்<br>இளைஞர் பேரவைத் தலைவர் |
| திறப்பாளர் | : | திரு எம். சுகானந்தம், பி.ஏ., பி.எல்., புதுச்சேரி |
| முன்னிலை | : | திரு எம். எத்துராஜ் செங்குந்தர்,<br>நிர்வாக இயக்குநர், திருமகள் நூற்பாலை லிட்<br>குடியாத்தம் & தலைவர் பி & சி மில்ஸ், சென்னை. |
| நெசவாளர் மாநாட்டு தலைவர் | : | நெசவாளர் நேசன்<br>திரு ஜெ. சுத்தானந்தன், பி.எஸ்சி., |
| சிறப்புரை | : | ஜனாப் அக்பர் பாட்சா எம்.பி., வேலூர்<br>திரு வி. தண்டாயுதபாணி, எம்.எல்.ஏ., குடியாத்தம்<br>திரு ஏ. தேவராஜ், எம்.எல்.ஏ., செய்யாறு<br>திரு காஞ்சி பன்னீர்செல்வம், எம்.எல்.ஏ., உத்திரமேரூர்<br>திரு ஏ.கே.சி. சுந்தரவேல், எம்.எல்.ஏ., திருப்பத்தூர்<br>திரு எம். பாலசுப்ரமணியம், எம்.எல்.ஏ., புதுவை .<br>திரு சி. கோபால், முன்னாள் எம்.எல்.ஏ., சோளிங்கர்<br>திரு எஸ்.பி. மணவாளன், முன்னாள் எம்.எல்.ஏ., திருப்பத்தூர்<br>திரு டி.ஆர். கெஜபதி, முன்னாள் எம்.எல்.ஏ., ஆற்காடு |
| தொண்டர்படைத் தலைவர்கள் | : | திரு எஸ்.கே. தனசேகர், திரு புகழனார்,<br>திரு எம்.கே. தண்டபாணி |
| மாநிலச் சங்க பொதுச்செயலாளர் | : | டாக்டர் தி.ரா. செல்வராஜன், எம்.ஏ.,எம்.லிட்.,பி.எச்டி., சென்னை. |
| மாநில மாநாட்டு நிர்வாக பொதுச் செயலாளர் | : | திரு பு.க. சிவஞானம் |



18 வது மாநாடு

## 18வது மாநாடு

23, 24-12-1995 சனிக்கிழமை - தமுக்கம் மைதானம், மதுரை

குலக்கொடி ஏற்றியவர் : திரு. வை. ஆனந்தன் செங்குந்தர், கடலூர்.

செங்குந்தர் வரலாற்று அரங்கம்

தலைமை : திரு. எஸ். சாலை, மதுரை

முன்னிலை : திரு. V.V.C.R.M. கந்தசாமி, கோவை.

திறப்பாளர் : திரு. எம்.எஸ். ரெங்கையா, சென்னை.

கண்காட்சி மற்றும் வணிக வளாகம்

முன்னிலை : திரு. சரவண பழனிவேலு, சென்னை

திறப்பாளர் : திரு. S.K.C. குப்புசாமி - திண்டுக்கல்.

செங்குந்தர் எழுச்சிப் பேரணி

இடம்: மாரியம்மன் தெப்பக்குளம்

தலைவர் : திரு. K. நாராயணன், எட்டையபுரம்.

தொடங்கி வைப்பவர் : திரு. எம். மாணிக்கம், செயல்தலைவர், மதுரை.

பேரணித் தளபதிகள் : திரு. எம். சங்கரபாண்டியன், திருபுவனம்.
திரு. பி. அருணாசலம், நாகர்கோயில்.
திரு. ஏ. நடராசன், நீலமலைக்கோட்டை
திரு. சி. காசிவிஸ்வநாதன், கல்லிடைக்குறிச்சி.
திரு. எஸ்.வி. ராஜாபாதர், சென்னை.
திரு. ஜி. எஸ். துரைசாமி செங்குந்தர் அம்மையார் குப்பம்
திரு. கே. எம். கோவிந்தராஜன், குடியாத்தம்.
திரு. எம்.எஸ்.கே. உத்தண்டி , தருமபுரி
திரு. ஆர். என். சாமி, ஆரணி
திரு. பா.கா. ஆறுமுகம், புதுப்பேட்டை (ஆந்திர மாநிலம்)
திரு. ஆ. பழனியாண்டி, ஆயந்தூர்
திரு. பி.வி. ராமலிங்கம், ஜெயங்கொண்டம்
திரு. எஸ். சுந்தரராஜன், கொல்லங்கோடு (கேரள மாநிலம்)

செங்குந்தர் மாநில மாநாடு

தலைவர் : நெசவாளர் நேசன் திரு. ஜெ. சுத்தானந்தன்

திறப்பாளர் : மாண்புமிகு நீதியரசர் திரு . எஸ்.ஜெகதீசன்

வரவேற்பாளர் : திரு. ஏ.வி. ஆர்.எம்.வி.சங்கரநாராயணன் வரவேற்புக்குழு சிறப்புத்தலைவர்

மாநாட்டுச் சிறப்புமலர் :

வெளியிட்டவர் : திரு. எம். எத்துராஜன் (சேர்மன், பின்னி மில்ஸ்)

பெற்றுக்கொண்டவர் : திரு. ஆர். சண்முகம், ஐ.ஏ.எஸ் (ஓய்வு)





நெசவாளர் மாநாடு

வாழ்த்துரையாளர்கள் : மாண்புமிகு சேடப்பட்டி எம். முத்தையா,
தமிழ்நாடு சட்டப்பேரவைத் தலைவர்
மாண்புமிகு கே.ஏ. செங்கோட்டையன்,
போக்குவரத்துத்துறை அமைச்சர்
மாண்புமிகு புலவர் ஆர். இந்திரகுமாரி, கைத்தறித்துறை அமைச்சர்
மாண்புமிகு அ.மா.பரமசிவம், தொழிலாளர் நலத்துறை அமைச்சர்
மாண்புமிகு டாக்டர் அம்மமுத்துபிள்ளை, அறநிலையத்துறை அமைச்சர்
திரு.வி. ராஜன் செல்லப்பா, எம்.பி. மதுரை
திரு. பி. முத்துமணி, எம்.பி. மதுரை
திரு. எஸ்.வி. சண்முகம், எம்.எல்.ஏ. மதுரை
திரு. ஓ.எஸ். அமர்நாத். எம்.எல்.ஏ. மதுரை
திரு. ஏ. தேவராஜ், எம்.எல்.ஏ. செய்யாறு
திரு. காஞ்சி பன்னீர் செல்வம், எம்.எல்.ஏ. உத்திரமேரூர்
திரு. ஏ.கே.சி. சுந்தரவேலு, எம்.எல்.ஏ. திருப்பத்தூர்
திரு. எம். பாலசுப்ரமணியம் எம்.எல்.ஏ. புதுவை
திரு. சி. கோபால் முன்னாள் எம்.எல்.ஏ. சோளிங்கர்
(தலைவர் வேளாண் பொறியில் வாரியம்)
திரு. தேங்காய்கடை மாரியப்பன், மதுரை
திரு. அனகாபுத்தூர் இராமலிங்கம், முன்னாள் எம்.எல்.சி.
திரு. பி.எல். சித்திரபுத்திர செங்குந்தர், சங்கரன்கோயில்
திரு. ஜி. குமாரவேல், சென்னை

செங்குந்தர் எழுச்சிப்பாடல்கள்

கேசட் வெளியிட்டவர் : திரு. கு.ப. கண்ணன், காஞ்சிபுரம்
கேசட் பெற்றுக்கொண்டவர் : திரு. பி. நடராஜன், திருப்பூர்
நன்றியுரை : முனைவர் தி. இரா. செல்வராசன் (மாநிலப் பொதுச்செயலாளர்)

* * *



மாதர் மகாநாட்டுத் தலைவியர்கள் – 1937






தென்னாப்பிரிக்கா திரான்ஸ்வால் செங்குந்தர் சங்கம் – 1929



இலங்கை செங்குந்தர் சங்கம் – 1929

# கோவை ஜில்லா செங்குந்தர் மகாஜன சங்கம்

திருப்பூரில் (20.-05.1934) வருடம் நடந்த 21-வது மஹாநாட்டின்

போட்டோ-குரூப்-காப்பி



1.ஸ்ரீ M.ஷண்முக முதலியார் (திருப்பூர் கமிட்டி பிரசிடெண்டு) 2.K.ஸ்ரீ கிருஷ்ண முதலியார் (ஜில்லா கமிட்டி பிரசிடெண்டு) 3.ஸ்ரீ பெரியார் E.V.ராமசாமி நாய்க்கர் (ஈரோடு) 4.ஸ்ரீ S.முத்தையா முதலியார் (மினிஸ்டர் மதருஸ்) 5.ஸ்ரீ V.T.அரசு B.A. M.L.C. (மதருஸ்)

6.ஸ்ரீ HON V.C.வெள்ளியங்கிரி கவுண்டர் (ஜில்லா போர்டு பிரசிடெண்ட், கோவை) 7.ஸ்ரீ கண்ணப்பர் (பத்திராதிபர் மதருஸ்) 8.ஸ்ரீ R.V.ராமசாமிக் கவுண்டர் (மிராஸ்தார் & லேண்டுலார்டு திருப்பூர் புதூர்.) 9.ஸ்ரீ C.N.அண்ணாத்துரை (காஞ்சிபுரம்)

1.ஸ்ரீ கூனப்ப முதலியார் (மாதப்பூர்) 2.ஸ்ரீ ராஜு முதலியார் (சிவன்மலை) 3.ஸ்ரீ நடேசன் (திருப்பூர்) 4.ஸ்ரீ N.M.நடேச முதலியார் (ஜில்லா கமிட்டி காரியதரசி) 5.ஸ்ரீ E.V.சாமியப்ப முதலியார் (திருப்பூர் கமிட்டி காரியதரசி) 6.ஸ்ரீ S.A.கணேச முதலியார் (கமிட்டி காரியதரிசி, ஈரோடு)

7.ஸ்ரீ அங்கப்ப முதலியார் 8.ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை (மதருஸ்) 9.K.ஸ்ரீ அய்யாசாமி (திருப்பூர்) 10.ஸ்ரீ கருப்பஞ் செட்டியார் (விஜயாபுரம்) 11.ஸ்ரீ R.கதிர்வேல்ராஜு (திருப்பூர்) 12.ஸ்ரீ B.முத்துகிருஷ்ணன் (திருப்பூர்)

போட்டோ By. B.ராஜு







# Certificate of Registration of Societies.

ACT XXI OF 1860.

No. 9. of 1938 1939.

I hereby certify that the South Indian Sengunthar Mahajana Sangam, Madras.

has this day been registered under the Societies Registration Act, XXI of 1860.

Given under my hand at Madras this the 9th day of December One thousand nine hundred and thirty eight.

[signature]

Addl. Asst. Registrar of Joint Stock Companies. Chingleput District



J. S. C. 36.



Attested

PROFESSOR AND HEAD
FARMERS TRAINING CENTRE

சங்கப் பதிவுச் சான்றிதழ் 1938 – 1939

# மானங்காக்கும் நெசவாளன்!

மானங்காக் குமாடையினை
மதித்துஉரு வாக்குகின்ற
ஞானக்குடும் பத்தில்தான்
நான்பிறந்து வளர்ந்திட்டேன்;
மோனநிலைக் கொண்டியங்கும்
முறையான நெசவும்தான்
தானாக என்னையதில்
தடம்பதிக்கச் செய்ததுவே !

அச்சுப்பிணைத் துதார்சுற்றி
அவசரமாய் அள்ளுகட்டி
மிச்சமுள்ள வேலையெலாம்
மெருகேற்றி செய்தாலும்
அச்சமுண்டு மனதினிலே
அந்திசாயும் நேரமதில்
வெச்சகுறி தவறிவிடும்
வெகுநாள்கன வுசிதைத்திடும் .

ஓடுகின்ற நாடாபோல்
ஓய்வின்றி உழைத்திடினும்
ஆடுகின்ற மிதியாக
அத்தனைக்கும் ஈடுதந்து
வாடுகின்ற மனதிற்கு
வாய்திறந்து பாடிவைத்து
நாடுகின்ற அன்பர்க்கு
நல்லுதவி தான்புரிவர் .

பாவுநூலைப் பண்படுத்தி
பாவடியில் அதைத்தோய்த்து
ஆவலுடன் தறியினிலே
அழகாக பூட்டிதினம்
நாவல்கனி நிறம்போல
நல்மனது கறுத்திருக்க
கூவியழும் தறிகூட
கூக்குரலும் எழுப்பிடுமே !

ஊடையும் பாவுமாக
ஒவ்வொன்றின் இழையோடு
ஆடையினை நெய்கின்ற
அழகுக்கு இணையில்லை,
கூடையினைச் சுமந்துவந்து
கூலிப்பணம் மனைவிகேட்க
தாடையிலே கைவைத்து
தருவதற்கு ஏதுபணம் !

இப்படித்தான் நெசவாளன்
இருக்கின்ற காரணத்தால்
எப்படியும் பிழைப்பதற்கு
இறுமாப்பு சிறிதுமின்றி
தப்பேதும் நினையாமல்
தன்மானம் காப்பதுடன்
முப்போதும் பிறர்மானம்
முனைப்போடு காத்திடுவான் .



- கவிஞர். அ.முத்துசாமி, தாரமங்கலம்







# சேலம் மாவட்டச் சிறப்புகள்

சேலம் அரசியல், ஆன்மீகம், இயற்கை வளம் நிறைந்த மாவட்டம். சேலத்தில் திரைத்துறையின் முடிசூடா மன்னனாக திகழ்ந்தவர் மாடர்ன் தியேட்டர்ஸ் என்ற நிறுவனத்தை நிறுவிய திரு.T.R.சுந்தரம் முதலியார் ஆவார். இவர் மூன்று முதல்வர்களை உருவாக்கிய (அண்ணா, கருணாநிதி, எம்.ஜி.ஆர்.) பெருமைக்குரியவர்.

சேலத்தில் தொடங்கிய நீதிக்கட்சியின் மூலம் இன்று வரை பல அரசியல் கட்சிகள் முக்கிய முடிவுகள் எடுக்கும் இடமாக விளங்குகின்றது.

சேலத்தில் விளையும் மாம்பழம் உலகப் புகழ் பெற்றவை. இங்கு ஏழைகளின் ஊட்டி என்றழைக்கப்படும் ஏற்காடு கோடைவாஸ்தலம் உள்ளது. இதே போன்று தமிழகத்திற்கே வளம் கொழித்து கொண்டு இருக்கும் வற்றாத ஜீவ நதியாம் காவிரி பாய்கின்றது. இந்த நதியின் குறுக்கே மேட்டூர் என்ற இடத்தில் தமிழகத்தின் பெரிய அணையான மேட்டூர் அணை உள்ளது. இங்கு நீர் மின்நிலையம் மற்றும் அனல் மின்நிலையங்கள் உள்ளது.

சேலத்திற்கு மிக அருகில் கெட்டி முதலியார் கட்டிய தாரமங்கலம் கைலாசநாதர் திருக்கோயில் உள்ளது. இங்கு உள்ள சிற்பங்கள் பிரசித்திப் பெற்றது. இங்கு மாசி மாதத்தில் 3 நாட்கள் சிவலிங்கத்தின் மீது சூரியஒளி விழுவது கெட்டி முதலி கட்டிய கட்டிட கலைக்கு சான்றாக உள்ளது.

இங்கு 150 ஆண்டுகளுக்கு முன்பு திரு.ராமசாமி













முதலியார் வெளிநாடு சென்று பார்ட்லா படித்து பட்டம் பெற்றமைக்கு சேலம் மாநகராட்சியின் முன்பு நினைவு தூண் நிறுவப்பட்டுள்ளது. நம் சமுதாயத்திற்கு கிடைத்த பெருமை.

சேலத்தில் அதி நவீன வசதிகளுடன் கூடிய சூப்பர் ஸ்பெசாலிட்டி மருத்துவ மனைகள் உள்ளது.

இங்கு தெற்கு இரயில்வேயின் சேலம் மண்டல அலுவலகம் உள்ளது. விமானநிலையம் உள்ளது. மேலும் சவ்வரிசி உற்பத்தியாளர்களுக்கென அகில இந்திய அளவில் சேகோசர்வ் என்ற கூட்டுறவு நிறுவனம் உள்ளது. தரமான எவர்சில்வர் தகடுகளை உற்பத்தி செய்யும் சேலம் உருட்டாலை இங்குதான் உள்ளது. மேலும் சித்தர் வாழும் கஞ்சமலையும் இங்குள்ளது. மேலும் தென்னகளவில் பட்டு உற்பத்திக்கான மேம்பாட்டு ஆணையம் இங்குள்ளது.

சேலம் மாநகரத்தில் பிரசித்தி பெற்ற கோயில்களில் அருள்மிகு ராஜகணபதி கோயில் கடைவீதி பகுதியில் அமைந்துள்ளது. மேலும் திருமணிமுத்தாறு கரையில் அருள்மிகு சுகவனேஸ்வரர் கோயிலும், உத்தம சோழபுரத்தில் கரபுரநாதர் சிவன் கோயிலும் அமைந்துள்ளது.



கோலவிழி கொண்ட கோட்டை மாரியம்மன்

அகத்தியர், அகத்தியம் என்றும் நூலை இங்குதான் எழுதியதாகவும், இங்கு அவர் முருகனை பூஜித்தற்கான ஆதாரங்கள் உள்ளன.

உடையாப்பட்டி பைபாஸ் அருகில் ஸ்ரீகந்தாஸ்ரமம் குன்றின்மேல் உள்ளது. அதன் அருகில் குமரகிரி மலை உள்ளது. இதில் கருப்பண்ண சுவாமிகளால் நிறுவப்பட்ட தண்டாயுதபாணி முருகன் உள்ளது. கோவை பைபாஸில் 1008 சிவாலயங்கள் உள்ளது.

சேலம் அம்மாப்பேட்டையில் செங்குந்தர் குமரகுரு சுப்ரமணிய திருக்கோயிலும், செங்குந்தர் அருள்மிகு மாரியம்மன் திருக்கோயிலும், செங்குந்தர் அருள்மிகு அஷ்டசித்தி விநாயகர் திருக்கோயில்களும் உள்ளன. இக்கோயில் செங்குந்தர் சமுதாயத்திற்கு பாத்தியப்பட்டவையாகும்.

சேலத்தில் மிகவும் பிரசித்தி பெற்ற எட்டுபட்டி மக்களும் வணங்கக்கூடிய தெய்வமாக கோட்டை மாரியம்மன் கோவில் அமைந்துள்ளது. அருகில் பக்தர்கள் அனைவரும் சிறப்பாக வழிபடக்கூடிய கோட்டை பெருமாள் கோயில் அமைந்திருப்பது சேலத்திற்கு மேலும் பெருமை சேர்ப்பதாகும்.







# திருப்பூர் மாவட்டச் சிறப்புகள்

திருப்பூர் நகரம் சுதந்திர போராட்டத்தில் மிக முக்கியமான இடத்தைக் கொண்டுள்ளது. தன் தாய் நாட்டின் கொடிக்காக தன் உயிரைக் கொடுத்து காலத்தால் அழியாப் புகழ் பெற்றவர் நம் செங்குந்த குலத்தில் தோன்றி திருப்பூருக்கும், குலத்திற்கும் பெருமை சேர்த்தவர் குமரன் அவர்கள்.

1932 ஆம் ஆண்டு ஜனவரி 10 ஆம் தேதி நடந்த போராட்ட அணிவகுப்பின் போது கையில் இந்திய தேசியக் கொடியினை ஏந்தி, தொண்டர் படைக்குத் தலைமை ஏற்று முன் நடந்தார் குமரன். அந்த போராட்டத்தின் போது ஆங்கிலேய காவலர்களால் தலையில் தடியால் தாக்கப்பட்டார். தலையிலிருந்து ரத்தம் வழிய கீழே சரிந்தபோதும், கையில் இந்திய தேசியக் கொடியை ஏந்தியபடி தேசியக்கொடி தரையில் விழாமல் காத்தார். சிகிச்சைக்காக மருத்துவமனை சென்றவர் அங்கேயே உயிர் துறந்தார். திருப்பூரில் நடந்த போராட்டதில் உயிர் நீத்ததால் **'திருப்பூர் குமரன்'** என்றும் தேசியக் கொடியை ஏந்தியபடி வீரமரணம் அடைந்ததால் **'கொடிகாத்த குமரன்'** என்றும் அழைக்கப்படுகிறார்.

திருப்பூருக்கும் காந்திக்குமான உறவைப் போற்றும் விதமாக காந்திநகர், வித்யாலயம் ஆகிய இரு இடங்களில் காந்திக்கு மண்டபம் எழுப்பப்பட்டு அங்கே அவரது அஸ்தி வைக்கப்பட்டுள்ளது. காந்தியடிகள் ஒருநாள்கூட ராட்டையிலிருந்து நூல் நூற்பதை நிறுத்தியதில்லை. அந்தளவிற்கு நெசவின் மீது பற்றுக் கொண்டிருந்தார்.

## கதரின் தலைநகரம்

1925 மார்ச் 19-ல் திருப்பூர் பொதுக்கூட்டத்தில் பேசிய மகாத்மா காந்தி, 'கதரின் தலைநகரம் திருப்பூர்' என்றார். 'இந்தியாவின் எந்தப் பகுதிக்குச் சென்றாலும் எனது கூட்டங்களுக்கு கதர் ஆடை அணிந்தவர்கள் மிகவும் குறைவாகவே வருவதை நான் கவனித்துள்ளேன். ஆனால், தென் இந்தியாவில், திருப்பூரில் எனது பொதுக் கூட்டங்களுக்கு வந்த பெரும்பாலான ஆண்களும், பெண்களும் கதர் ஆடை உடுத்தியிருந்தது எனக்கு நம்பிக்கையை அளித்தது' - 'யங் இந்தியா' நூலில் இப்படிக் குறிப்பிடுகிறார் காந்தி. அந்த அளவுக்கு கதர் உற்பத்தியிலும், கதர் உடுத்துவதிலும் மற்ற ஊர்களுக்கு முன்னோடியாக இருந்தது திருப்பூர். இப்போதும் அந்த இயல்பை தொலைத்து விடவில்லை இந்த நகரம்.

1921-ல், திருப்பூர் ரயில் நிலையம் பகுதியில், ஐநூற்றுக்கும் மேற்பட்ட பெண்கள், இந்திய சுதந்திரத்தின் சீருடையாகப் பார்க்கப்பட்ட கதர் ஆடையை அணிந்து வரிசையாக அமர்ந்து ராட்டை நூற்று காந்திக்கு வரவேற்பு அளித்தனர். அதற்கடுத்த நான்கு ஆண்டுகளில் அகில இந்திய நூற்போர் சங்கம் என்ற நிறுவனத்தை ஆரம்பித்தார் காந்தி. அப்போது, அந்த சங்கத்தின் தமிழகத்தின் முதல் கிளை திருப்பூரில் தொடங்கப்பட்டது. காந்தி மீது திருப்பூர் மக்கள் வைத்திருந்த பற்றுதலும் கதர் மீது கொண்டிருந்த காதலும் இங்கு கிளை தொடங்க முக்கியக் காரணம்.





## சர்வோதய சங்கம் உதயம்

1936-ல், திருப்பூர் காந்திநகரில் 13 ஏக்கரில் நூற்போர் சங்க நிறுவனத்துக்கு சொந்தக் கட்டிடம் கட்ட ஜவ ஹர்லால் நேருவே திருப்பூருக்கு வந்து அடிக்கல் நாட்டினார். கட்டிமுடிக்கப்பட்ட இந்தக் கட்டிடத்தை பிற்பாடு திறந்து வைத்தவர் சத்திய மூர்த்தி. காந்தி நகரை தலைமையிடமாகக் கொண்டு, அன்றைய தமிழகம் மற்றும் கேரளப் பகுதிகளில் கதர் உற்பத்தி, விற்பனை பணிகள் நடைபெற்றன. இதன் மூலம் பெண்கள் உள்பட பல்லாயிரக்கணக்கானோருக்கு வேலை வாய்ப்பும் உறுதிசெய்யப்பட்டது.

நூற்போர் சங்கத்தை விரிவுபடுத்தும் வகையில் 1942-ல், பல்லடம் சாலை வீரபாண்டி வித்யாலயத்தில் பயிற்சி நிலையம் ஒன்று தொடங்கப்பட்டது. இங்கு, கதர் தத்துவம், நூற்பு, நெசவு மற்றும் காந்தியக் கொள்கை கோட்பாடுகள் குறித்து ஊழியர்களுக்கு பயிற்சி அளிக்கப்பட்டது. இந்த நூற்போர் சங்கம் தான் 1958-ல், தமிழ்நாடு சர்வோதய சங்கமாக பரிணாம வளர்ச்சி கண்டது.

திருப்பூர் மக்கள் காந்தியை இன்றைக்கும் கொண்டாடுகிறார்கள். அதன் அடையாளம் தான் இன்னமும் கதருக்கு இவர்கள் செய்யும் மரியாதை.

திருப்பூர் பனியன் ஆலை மற்றும் பருத்தி சந்தைக்கு மிகவும் பிரபலம். அதே போல் ஊத்துக்குளி வெண்ணை உலகப் புகழ் பெற்றது ஆகும். திருப்பூர், பனியன் ஏற்றுமதிக்கு மிகவும் பெயர் பெற்ற மாவட்டம் ஆகும். திருப்பூர், அவினாசி, பல்லடம், உடுமலைப்பேட்டை, தாராபுரம், காங்கேயம், மடத்துக்குளம் ஆகிய ஏழு தாலுக்காகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது





திருப்பூர் மாநகரம் தொழில்துறையில் முதன்மை பெற்ற மாவட்டமாகும். இது இந்தியாவிலேயே பனியன் அதிக உற்பத்தித் திறன் கொண்ட நகரமாக திகழ்ந்து குட்டி ஜப்பான் என்ற பெருமையைப் பெற்றது.

ஆன்மீகத்தை வளர்க்கும் ஆலயங்கள் திருப்பூரில் பல உள்ளன. குறிப்பாக அவிநாசி அவிநாசியப்பர் கோயில், திருமுருகன்பூண்டி முருகநாதேசுவரர் கோயில் என தேவாரம் பாடல் பெற்ற இரு சிவாலயங்கள் திருப்பூர் மாவட்டத்தில் அமைந்துள்ளன. திருப்பூருக்கு மத்தியில் ஸ்ரீ காமாட்சி அம்மன் ஆலயமும், ஊத்துக்குளி ரோட்டில் சுக்கிரீஸ்வரர் ஆலயமும் புகழ் பெற்றவை.

## திருப்பூருக்கு பெருமை சேர்த்தவர்கள் :

உடுமலை மு.சிவசண்முகம் அவர்கள் இளம் வயது முதலே சங்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டு செயல் வீரராய் இருந்து சமுதாய மக்களுக்கு எண்ணில் அடங்கா நற்பணிகளையும் , ஆயிரக்கணக்கான திருமணங்களுக்கு வித்திட்டு செங்குந்த மக்களின் மனதில் நீங்கா இடம் பெற்றவர்.

தனி ஒரு மனிதனால் சாதிக்க முடியாததை சங்கத்தால் சாதிக்க முடியும் என்ற சிந்தனை கொண்டு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்திற்காக உழைத்து தொடர்ந்து இரண்டு முறை மாநிலத் தலைவராக முடிசூட்டிக் கொண்டவர், நமது சமுதாயத்தின் சிகரம் திரு K.P.K.செல்வராஜ் அவர்கள். இது திருப்பூருக்கு மிகப்பெரிய கௌரவமாகும்.



# ஈரோடு மாவட்டச் சிறப்புகள்

ஈரோடு மாவட்டம் என்றவுடன் நினைவுக்கு வருவது கைத்தறி பெட்ஷீட், துண்டு, பவானி ஜமுக்காளம் தான். இம்மாவட்டம் விவசாயம், மஞ்சள், சாக்கரை, காகிதம், புகையிலை மற்றும் நெசவுத் தொழிலுக்கு பெயர் பெற்றது. காவேரி, பவானி, நொய்யல் என மூன்று ஆறுகள் மாவட்டத்தை வளம் சேர்க்கிறது. நெசவுத் தொழிலுக்கு கூட்டுறவு சங்கங்களை ஆரம்பித்து பல்லாயிரக்கணக்கான நெசவாளர்கள் குடும்ப வாழ்வில் ஒளி விளக்கை ஏற்றிய பத்ம ஸ்ரீ M.P. நாச்சிமுத்து முதலியார் அவர்களும், சுதந்திர போராட்ட தியாகி கொடி காத்த திருப்பூர் குமரன் பிறந்து வாழ்ந்த இடம், ஈரோடு மாவட்ட சென்னிமலை ஆகும்.



செங்குந்த மகாஜன சங்க வரலாற்றில் திரு.M.P.நாச்சிமுத்து முதலியார் அவர்கள் 26.05.1947 முதல் 13.02.1952 வரை பொதுச் செயலாளர் ஆகவும், 20.12.1976 முதல் 27.06.1987 வரை மாநிலத் தலைவராகவும், முற்றுப் பெறாமல் இருந்த வள்ளல் சபாபதி மெட்ரிகுலேஷன் பள்ளி கட்டிட வேலையை முடித்து பள்ளி சிறப்பாக நடக்க ஏற்பாடு செய்தார். திரு.J.சுத்தானந்தன் அவர்கள் 23 ஆண்டுகள் செங்குந்த மகாஜன தலைவராக பதவி வகித்து ஈரோடு மாவட்டத்தின் பெருமையை வரலாற்றுப் பக்கங்களில் பதியவைத்த பெருமை இவர்கள் இருவரையே சாரும்.



பவானி சங்கமேஷ்வரர் கோவில், கொடுமுடி மகுடீஸ்வரர் ஆலயம், பண்ணாரி அம்மன், பாரியூர் அம்மன், ஈரோடு கொங்கலம்மன் கோவில், சோழீஸ்வரர் கோவில் திருத்தொண்டீஸ்வரர் கோவில், திண்டல் வெற்றி வேலாயுதசாமி கோவில், சென்னிமலை முருகன் கோவில் என பிரசித்தி பெற்ற பல திருத்தலங்கள் உள்ளன. இக் கோவில்களுக்கு நிலங்கள், இடங்கள், கட்டிடங்களை வாங்கிக் கொடுத்து அதன்மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு பூஜைகள் நடத்த ஏற்பாடுகள் செய்துள்ளனர்.

பழனி தண்டாயுதபாணிக் கோவிலுக்கு வெள்ளையர்கள் ஆட்சிக் காலத்திலேயே ஈரோடு VV.C.R. முருகேச முதலியார் அவர்களால் கலை நயமிக்க தங்கத்தேரை வழங்கியதுடன் இன்று வரை பராமரித்தும் வருகிறார்கள்.

செங்குந்தர் கல்விக்கழகம் மூலம் நடத்தப்படும் 6500 மாணவர்களைக்





கொண்ட செங்குந்தர் மேல்நிலைப்பள்ளி, மகளிர், பள்ளிகளுக்கு 1945ஆம் ஆண்டிலேயே நிலம் வழங்கியதுடன் ரூ.65,000/- கட்டிடம் கட்ட வெள்ளையர்கள் காலத்திலேயே வழங்கி உள்ளார்.

ஈரோட்டில் உள்ள வ.உ.சிதம்பரனார் பூங்காவிற்கும், ஈஸ்வரன் கோவிலுக்கும் நிலங்களை அளித்துள்ளனர். பெருந்துறை ராமலிங்கம் காசநோய் மருத்துவமனைக்கு 100 ஏக்கர் நிலம் வரை திரு.ராமலிங்க முதலியார் அவர்களால் வழங்கப் பட்டது. பவானிசாகர் அணைக்கு 1100 ஏக்கர் நிலங்களை கோவை சிறுவாணி குடிநீர் திட்டத் தந்தை C.S.R. என்று அனைவராலும் அன்புடன் அழைக்கப்படும் C.S.ரத்தின சபாபதி முதலியார் அவர்களால் வழங்கப்பட்டது. நமது சமுதாயத்திற்கு மிகவும் பெருமை சேர்க்கிறது.

ஈரோடு மாவட்டத்தில் கல்விச் சாலைகள் அமைப்பதில் நமது சமூகப் பெரியவர்கள் முன்னோடியாக இருந்துள்ளனர். ஈரோடு மாவட்டத்தில் மூன்று பொறியியல் கல்லூரிகள் ஒரு பாலிடெக்னிக், ஒரு ITI மற்றும் நான்கு கலைக் கல்லூரிகளும் நடைபெற்று வருகிறது. 16 உயர்நிலை, மேல்நிலைப் பள்ளிகளும் இரண்டு CBSE பள்ளிகளும் இயங்குகின்றன. மாவட்டத்தில் நமது சமுதாயத்தை சேர்ந்த திருமண மண்டபங் களும், நமது சொந்தங்களின் திருமண மண்டபங்களும் உள்ளன.

தென்னிந்திய செங்குந்த சங்க முதல் மாநில மாநாடு 19 மற்றும் 20-01-1929ல் ஈரோட்டில் மிகப் பிரமாண்டமாக நடத்தப்பட்டது. இந்த மாநாட்டிற்கு சென்னையிலிருந்து ஈரோட்டிற்கு இரண்டு சிறப்பு இரயில்கள் விடப்பட்டு, அதில் நம் சொந்தங்கள் வருகை தந்துள்ளனர்.

13வது மாநாடு செங்குந்தர் 1976இல் டிசம்பர் 25, 26 ஆகிய தேதிகளில் திரு.M.P.நாச்சிமுத்து



செங்குந்தர் அவர்கள் தலைமையில் செங்குந்தர் உயர்நிலைப்பள்ளி மைதானத்தில் நடைபெற்றது. 03-10-2004 செங்குந்தர் மேல்நிலைப் பள்ளியில் மாநாடும், J.S. அவர்களின் 60வது பிறந்த நாள் விழாவும் நடைபெற்றது. 12-07-2009ல் ஈரோடு பிரட் ரோட்டில் உள்ள C.S.I. மைதானத்தில் முப்பெரும் விழா பேரணி மாநாடு நகரமே அதிசயத்தக்க வகையில் மிகப் பிரமாண்டமான ஊர்வலமும், பொதுக்கூட்டமும் முன்னாள் தலைவர் திரு.J.சுத்தானந்தன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

பவானி முக்கூடல், பவானிசாகர் டேம், தாளவாடிமலை, கொடிவேரி அணைக்கட்டு காளிங்கராயன் அணைக்கட்டு, ஜேடர்பாளையம், அணைக்கட்டு, வெள்ளோடு பறவைகள் சரணாலயம், பூந்துறை, பட்டுத்துறை போன்ற சுற்றுலாத் தலங்களும் உள்ளன.



- **S.A.சிவசாமி**

பொதுச் செயலாளர்,
ஈரோடு மாவட்ட செ.ம.சங்கம்.





# தஞ்சையின் தனிப்பெருமை

"தண்ணீரும் காவிரியே! தார் வேந்தனும் சோழனே! மண்ணாவதும் சோழமண்டலமே" - என ஔவையாரால் புகழப்பட்டது தஞ்சைமண். நஞ்சையும், புஞ்சையும் கொஞ்சி விளையாடும் தஞ்சை காவிரித்தாயால் உயிரூட்டப்பட்ட பெருமைக்குரியது. தன் பொன்னுடலில் 96 விழுப்புண்களை பெற்ற பார்த்திப மகாராஜாவால் பல்லவரிடமிருந்து மீட்கப்பட்ட தஞ்சையில் விஜயாலயச் சோழன் தன்மரபை நிறுவினார்.

விண்ணைத்தொடுவது போல் உயர்ந்து நிற்கும் ராஜராஜேஸ்வரம் எனும் பெரியகோவில் கி.பி 1010 இல் மாமன்னர் ராஜராஜ சோழனால் கட்டி முடிக்கப் பெற்று ஆயிரம் ஆண்டுகளைத்தாண்டி கம்பீரமாக, சோழர் கலைகளுக்கு தாயகமாக விளங்கிவருகிறது.

நாயக்கமன்னரும், மராட்டிய வீர சிவாஜி வழித்தோன்றல்களும் ஆட்சி செய்த புண்ணிய பூமியாகும். உலகப்புகழ்பெற்ற சரஸ்வதி மகால் நூலகமும் அரண்மனைகளும் அருங்காட்சியகமும் காண்போர் கண் வியக்கும் மணிமண்டபத்தையும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தையும், மருத்துவக் கல்லூரியையும் தன்னகத்தே கொண்ட மாவட்ட தலைநகரமாக தஞ்சை பெருநகர் விளங்குகின்றது.

அருகில் புன்னைநல்லூர் அருள்மிகு மாரியம்மன் திருக்கோவில் அரண்மனை தேவஸ்தானத்தால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது.

காவிரியின் வெள்ளப்பெருக்கால் தஞ்சை அழிந்துவிடாமல் காக்க கி.பி 2ஆம் நூற்றாண்டில் கரிகால் சோழனால் கட்டப்பட்ட 18 அடி உயர கல்லணை இன்றும் இரும்புக்கோட்டை போல் பலமாய் உள்ளது. ஆங்கிலேயர் காலத்தில் கட்டப்பட்ட கீழணையும் (அணைக்கரை) காவிரி பாசனத்திற்கு உதவியாக உள்ளது.

பஞ்சநதீஸ்வரம் எனப்படும் திருவையாறு அருள்மிகு அய்யாரப்பர் திருக்கோவிலும், சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜர் வாழ்ந்த புண்ணிய பூமியாகவும் விளங்குகிறது. கருகாத்த அம்மன் எழுந்தருளியுள்ள திருக்கருகாவூரும் ஆரியப்படைவீடு, பம்பப்படைவீடு, புதுப்படைவீடு, மணப்படைவீடுக்களுக்கு நடுவே அமைந்துள்ள பழையாறைக்கோட்டைகுட்பட்ட காமதேனுவின் மகள் பட்டியால் வணங்கப்பட்ட அருள்மிகு தேனுபுரிஸ்வரர் திருக்கோவில் மற்றும் சோழர்களின் காவல் தெய்வமான அருள்மிகு துர்க்கை அம்மன் ஆலயமும் பட்டீஸ்வரத்தில் உள்ளது.

திருவலஞ்சுழி கடல் நுரையால் செய்யப்பட்ட அருள்மிகு சுவேத விநாயகர் ஆலயமும் சிவபெருமானுக்கு "ஓம்" எனும் பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்த 4-ம் படைவீடான அருள்மிகு சுவாமிமலை சாமிநாத சுவாமித் திருக்கோவிலும் சிவராத்திரி தோன்றிய திருவைகாவூர் வில்வவன நாதர் திருக்கோவிலும், 12 ஆண்டுகளுக்கு







ஒருமுறை உலக பக்தர்கள் புனித நீராடும் மகாமகக்குளமும் அருள்மிகு ஆதிகும்பேஸ்வரர், அருள்மிகு இராமசாமி, அருள்மிகு சாரங்கபாணி, அருள்மிகு சக்கரபாணி, அருள்மிகு நாகேஸ்வரன் திருக்கோவில்களைக் கொண்ட கோவில் நகரமாக திருக்குடந்தை விளங்குகிறது.

சிற்பக்கலை களஞ்சியமாக தாராசுரம் ஐராவதீஸ்வரர் கோவிலும், சேக்கிழார் பெருமான் உருவாக்கி வணங்கிய அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோவிலும், தென்னக திருப்பதியாம் அருள்மிகு உப்பிலியப்பன் திருக்கோவிலையும், அய்யாவடி அருள்மிகு பிரித்தியங்கராதேவி திருக்கோவிலையும் கொண்டதாக திருநாகேஸ்வரம் விளங்குகிறது. திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்கசுவாமி திருக்கோவிலும் அருள்மிகு கம்பசுரேஸ்வரர் கோவிலையும் உலக புகழ்பெற்ற பட்டுபுடவை கிடைக்கும் பேரூராகவும் திருபுவனம் விளங்குகிறது.

அருள்மிகு வனதுர்க்கை அருள்பாலிக்கும் கதிராமங்கலம் கோவிலும் இலங்கை போர் முடித்து திரும்பிய ஸ்ரீராமரால் வணங்கப்பட்ட 108 சிவாலயமும், 300 ஆண்டுகள் பழமையான நெல் களஞ்சியம் உள்ள திருப்பாலைத்துறை அருள்மிகு பாலைவனநாதர் திருக்கோவிலையும் தன்னகத்தே கொண்ட பாபநாசம் என்னும் பேரூர் உள்ளது.

அசுர பலத்தால் அதர்மம் செய்த வல்லான் எனும் அரக்கனை வதம் செய்த அருள்மிகு செல்வ மாகாளியம்மன் திருக்கோவிலையும கி.பி 10ஆம் நூற்றாண்டில் உத்தம சோழர் எனப்பட்ட சுந்தர சோழரால் கட்டப்பட்ட அருள்மிகு சௌந்தரராஜப் பெருமாள் திருக்கோவிலையும் பூ மணம் வீசும் மண்வளம் கொண்டதாகவும் சுந்தரப்பெருமாள் கோவில் கிராமம் உள்ளது.

தஞ்சையை ஆண்ட இரண்டாம் சரபோஜி மன்னர் மல்லிப்பட்டினத்தில் கட்டிய எட்டு அடுக்குகளும் 120 அடி உயரம் கொண்ட மனோரா காண்போரை கவரும் வண்ணம் கடலோரம் உள்ளது. சைவத்தையும் தமிழையும் வளர்க்கும் திருப்பனந்தாள், திருவாடுதுறை ஆதினங்கள் இயங்கி வரும் ஆன்மீகச் சிறப்பும் வரலாற்றுச் சிறப்புமிக்க தஞ்சை தரணியை தலை வணங்கி போற்றுவோம்.

திருநாகேஸ்வரம் ஞானியார் சுவாமிகளின் பூர்வீகமாகும். தமிழறிஞர் வெள்ளை வாரணனார், P.S.பக்கிரிசாமி முதலியார், P.S.சுந்தரேச முதலியார், E.பொன்னுசாமி முதலியார் வாழ்ந்த இடமாகும். கும்பகோணம் நாடாமன்ற உறுப்பினர் C.இராமசாமி முதலியாரும், நகர்மன்ற தலைவர் C.இராமதாஸ், சங்கம் வளர்த்த P.கந்தசாமி முதலியார், வீ.தங்கராசு முதலியாரும், M.பச்சமுத்து முதலியாரும் வாழ்ந்த ஊராகும்.

பாபநாசம் இரா.இராஜ மாணிக்க முதலியார், ரெத்தின முதலியார், கண்ணையா முதலியார், கோவிந்தராஜ் முதலியார், புலவர் மகாலிங்கம், S.கலியபெருமாள் முதலியார் வாழ்ந்த ஊராகும். தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாத ஐயர் வாழ்ந்த ஊரான உத்தமதானபுரம் பாபநாசம் அருகில் உள்ளது.

சுந்தரபெருமாள் கோயில் ஊராட்சிமன்ற தலைவராகவும், கும்பகோணம் ஒன்றிய பெருந் தலைவராகவும் விளங்கிய தி.சம்பூரையா, தியாகி. கோ.மாணிக்க முதலியார், வே.சோமசுந்தர முதலியார், ஆ.மா. கணபதி முதலியார், ந.சதாசிவ முதலியார் ஆகியோர் சங்கம் வளர்த்த மண் ஆகும்.

சுவாமிமலை சு.வே.தில்லைவன முதலியார், எஸ். கந்தசாமி முதலியார், சோமு முதலியார், S.K.நடராஜ முதலியார், S.K.சாமிநாத முதலியார், ஆறுமுக முதலியார், திருவலஞ்சுழி ப.மருதமுத்து முதலியார், திருபுவனம் யு.சாமிநாத முதலியார், கே.தங்கவேல் முதலியார், கதிராமங்கலம் ஆறுமுக முதலியார், உள்ளிக்கடை N.வாசுதேவ முதலியார், N.V.வரதராஜ முதலியார், மாரியம்மன் கோவில் கோவிந்தராஜ் முதலியார் முதலிய சங்கம் வளர்த்த புகழ்பெற்ற செங்குந்தர்கள் வாழ்ந்த மாவட்டம் தஞ்சை மாவட்டமாகும்.



**நல்லாசிரியர் சோ.காசிநாதன்,**

பொதுச் செயலாளர்,
தஞ்சை மாவட்ட செ.ம.சங்கம்.






# விருதுநகர் மாவட்டச் சிறப்புகள்

சென்னை மாநிலத்திற்கு தமிழ்நாடு என்ற பெயர் மாற்றம் செய்ய தியாகி சங்கரலிங்கனார் அவர்கள் 26 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து மாண்டார். இவர் இருந்து வளர்ந்தது பெருமைக்குரிய விருதுநகர் மாவட்டம்தான். தற்போது அவரது நினைவாக சாத்தூரில் சங்கரலிங்கனார் நினைவு கூட்டுறவு பயிற்சி பள்ளி அமைந்துள்ளது.



கல்விக்கண் திறந்த கர்மவீரர் சரித்திர நாயகன் காமராஜர் 9 ஆண்டு கால ஆட்சி 1954 முதல் 1963 முடிய ஆண்டகாலத்தில் 6500 தொடக்கப் பள்ளிகளை திறந்து வைத்தார். அந்த பெருமைக்குரிய கு.காமராஜர் பிறந்த மண்.

"தூமணி மாடத்து சுற்றும் விளக்கெரிய
தூவம் கமழ துயிலணைமேல் கண்வளரும்
மாமன் மகளே மணிக்கதவம் தாழ் திறவாய்"

என்று மார்கழித் திங்களில் கன்னிப் பெண்களை நீராட அழைத்த கோதை ஆண்டாள் அவதரித்த மண் திருவில்லிபுத்தூர்.

தமிழ்நாடு அரசு சின்னம் கோபுரம், சிறப்புமிகு ஆண்டாள் கோபுரம் (அரசு முத்திரை) இருப்பதும், திருவாரூர் தேர்க்கு அடுத்து மிக பிரம்மாண்டமான தேர் திருவில்லிபுத்தூர் தேர். "ஆடிவரும் தேர்" அழகைக்காண கண்கோடி வேண்டும்.

சித்திரக் கைத்தறி சேலை தயாரிக்கும் ராஜபாளையம், முகவூர், சேத்தூர், சுந்தர பாண்டியம், அருப்புக்கோட்டை, திரு வில்லிபுத்தூர், அம்மையார் பட்டி, சத்திரபட்டி போன்ற சிறப்புமிகு கைத்தறி





நெசவாளர்கள் நிறைந்த ஊர்கள் உள்ளடக்கியது விருதுநகர் மாவட்டம்.

24 ஆண்டுகாலமாக +2 தேர்வில் மாநில அளவில் தேர்ச்சியில் முதலாவது வரும் கல்வி மாவட்டம் பெருமை மிக்க விருதுநகர் மாவட்டம்தான்.



நான் யார்? என்ற கேள்வி உள்ளத்தில் எழுந்து தனது பள்ளிப்படிப்பை இடையே விட்டு நடைப்பயணமாக திருவண்ணாமலை சென்று அவ்வூரையே சொந்தமாக கொண்டு பக்திமார்க்க உபதேசம் செய்து முக்தியடைந்த மகரிஷி ரமணர் அவதரித்த திருச்சுழி இருப்பது விருதுநகர் மாவட்டம் தான்.

ஆயிரக்கணக்கான ஏழை மக்களுக்கு நூற்பு வேலை வாய்ப்பை நல்கிவரும் இராமலிங்க நூற்பாலை அமைந்துள்ளது அருப்புக் கோட்டை, ராஜபாளையம் ஊர்கள் இருப்பது விருதுநகர் மாவட்டம் தான்.



எண்ணிலா சித்தர்கள் உலாவி வருவதாக பெருமைப்படும் வனப்புமிகு மலை சூழ சுந்தரமகாலிங்கம் கோயில் அமைந்துள்ளது பெருமைமிக்க விருதுநகர் மாவட்டம் தான். எண்ணெய் வித்துக்கள், தானியங்கள் வர்த்தகத்தில் முன்னிலையில் உள்ளது விருதுநகர்.

பட்டாசு, தீப்பெட்டி உற்பத்தி மற்றும் காலண்டர், டைரி போன்ற அச்சு வேலைகளுக்கு புகழ்பெற்ற நகரமான சிவகாசியும், சுவைமிக்க பால்கோவா தயாரிக்கும் ஸ்ரீ வில்லிபுத்தூரும், ஆசியாவிலேயே பேண்டேஜ் துணி தயாரிப்பில் சிறந்து விளங்கும் சத்திரப்பட்டி ஆகிய ஊர்கள் இம்மாவட்டத்தில் புகழ்பெற்று விளங்குகின்றன.

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம் மாநில துணைத்தலைவர், மாநில நெசவாளர் அணி துணைத் தலைவர், செங்குந்தமித்திரன், பதிப்பு நடைபெறும் சிவகாசி, இவர்கள் பதவி வகிப்பதும் பெருமைமிக்க விருதுநகர் மாவட்டம்தான். எந்தே எம் மாவட்ட சிறப்பு சொல்லி மாளாது மாளாது.



**ச. அண்ணாதுரை,** M.A.,
தலைவர்,
விருதுநகர் மாவட்ட செ.ம.சங்கம்.



# இராமநாதபுரம் மாவட்ட சிறப்புகள்

இந்துக்களின் மிக முக்கியமான புனிதத் தலமான ராமேஸ்வரம் அமைந்துள்ள மாவட்டம். ராமன் சீதையை மீட்க இலங்கைத்தீவுக்கு இங்கிருந்தே பாலம் அமைத்தார். இராவணனைக் கொன்ற பாவத்தைத் தீர்க்க இராமன் மணலால் ஆன லிங்கத்தை வைத்து பூஜித்த இடமாதலால் இராமேஸ்வரம் என்று பெயர் பெற்றது. காசிக்கு தீர்த்த யாத்திரை செல்பவர்கள், நிறைவாக இராமேஸ்வரம் வந்து கடலில் நீராடி இராமநாத சுவாமியை தரிசித்து தங்கள் பயணத்தை நிறைவு செய்கின்றனர். உலகம் போற்றும் விஞ்ஞானியும், இந்தியாவின் முன்னாள் குடியரசுத் தலைவருமான அப்துல்கலாம் பிறந்த மண் ராமேஸ்வரம்.

தமிழகத்துக்கு பெருமை சேர்க்கும் விஷயங்களில் ஒன்று பாம்பன் ரயில் பாலம். ஆங்கிலேயர்களால் 1913ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட அந்த ரயில் பாலம் நூற்றாண்டை கடந்தும் கம்பீரமாக சேவையாற்றி வருகிறது.

இத்தகைய சிறப்பு மிக்க இராமநாதபுரம் மாவட்டத்தில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 9வது மாநில மாநாடு பரமக்குடியில் நான்கு நாட்கள் நடந்தது. இலங்கையிலிருந்தும் ஆண்களும் பெண்களும் கலந்து கொண்டனர். பெண்கள் மாநாடு 1 நாள் சிறப்பாக நடந்தது. வெளியூர் மாவட்டங்களில் திருமண சம்மந்தங்கள் நடத்த தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பரமக்குடியில் ஸ்ரீ சிவசக்தி விநாயகர் கோவிலில் 100 வருடங்களாக விழாக்களை நடத்தி வருகிறார்கள். ஸ்ரீ விநாயகர் கோவிலுக்கு அருகே உள்ள அம்மன் கோவிலில் சிவராத்திரியன்று குல சுவாமிகள் விழா சிறப்பாக அபிராமம் செங்குந்தர்கள் நடத்தி வருகிறார்கள். ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவில், மற்றும் நயினார் கோவிலில் செங்குந்தர்கள் மண்டகப்படி ஒவ்வொரு வருடமும் சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

அழகன்குளம் நகரில் நமது முத்தாயித்தினர்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு ரோம் நாட்டுடன் வர்த்தகம் செய்துள்ளனர் என்று தொல்பொருள் ஆராய்ச்சி மூலம் தெரிகிறது. மேலும் சமீபத்தில் ஞானி திருமூலர் சுவாமிகள் போற்றிப் பாடிய தில்லை நடராச கோவிலுக்கு 50 லட்சம் செலவில் கும்பாபிஷேகம் நடத்தியுள்ளார்கள். மேலும் ஞானி சிதம்பரம் சித்தருக்கு நிலங்கள் தானமாக கொடுத்துள்ளனர். வருடா வருடம் செங்குந்தர்கள் குருபூஜை நடத்தி வருகிறார்கள்.

1000 தலைக்கட்டு செங்குந்தர்கள் தீமை உணர்வுகளை சரண் அடையச் செய்து நல்உணர்வுகளை வளர்க்கும் முருகன் கோவில் உள்ளது. செங்குந்த திருமண மண்டபம் உள்ளது.

நமது குலகுரு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் குரு ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் பிறந்து வளர்ந்து தவமிருந்து அவருக்கு ஸ்ரீ முருகன், அகஸ்த்தியமா மகரிஷிகள், அருணகிரி சுவாமிகளுடன் காட்சி கொடுத்தது.

இராமநாதபுரம் அரண்மனை 17ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாகும். இங்குள்ள இராமலிங்க விலாசத்தில்தான் வீரபாண்டிய கட்டபொம்மன் ஜாக்சன் என்னும் ஆங்கிலேயே அதிகாரியுடன் காரசாரமான விவாதத்தில்

ஈடுபட்டார். எனவே இந்த அரண்மனை இந்திய விடுதலைப் போராட்டத்தில் தொடர்புடைய ஒரு அரண்மனையாக பார்க்கப்படுகிறது.

ராமநாதபுரத்திற்கு கிழக்கே இராமேஸ்வரம் மேற்கே திருஉத்திரகோசமங்கை தெற்கே திருப்புல்லாணி வடக்கே தேவிபட்டினம் ஆகிய முக்கிய இந்து வழிபாட்டுத் தளங்கள் இம்மாவட்டத்திற்கு பெருமை சேர்க்கின்றன.

மதுரை வாழ் அபிராமம் செங்குந்தர்கள் அபிராமத்தில் பழமை வாய்ந்த முருகன் கோவிலை பராமரித்து வருவதுடன் கோவிலுக்கு அருகே காலி மனையை பல லட்சங்கள் முதலீடு செய்து ஒரு அழகான செங்குந்தர் கல்யாண மண்டபமாக மாற்றி அமைத்துள்ளனர். தலைவர் K.P.K.செல்வராஜ் அவர்கள் 04.06.2017ல் தனது பொற்கரங்களால் திறப்புவிழா நடத்தினார். குட்டி ரெங்கூன் என்று அபிராமம் (1950) அழைக்கப்பட்டது.

அழகன்குளம் என்ற அருள் ஞானி வாழ்ந்த ஊரில் புராதானமான ஸ்ரீ நடராஜர் கோவில் உள்ளது. அங்கு வசிக்கும் செங்குந்தர்களுக்கு பாத்தியப்பட்டது. சிறப்பாக பக்திப்பாடல்கள் பாடப்பட்டு இறைவனை வழிபாடு 100 ஆண்டுகளுக்கு மேல் நடந்து கொண்டுள்ளது.

ஒவ்வொரு ரிஷிகளும் ஞானிகளும் மனிதனைத் தான் தேடி வந்தார்கள். அழகன்குளத்தில் வசித்த நம் முன்னோர்கள் சித்தர்கள், மெஞ்ஞானிகளின் அருள் ஒளியை கூட்டி, வாழ்க்கையில் வரக்கூடிய இருளை மாய்த்தார்கள். அதனால் குடும்பம், மனது, வியாபாரம் நல்லதானது, நோயை நீங்கியது.

சீனா போன்ற நாடுகளிடம் தொழில் நடத்தியதாக தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் சமீபத்தில் கண்டுள்ளார்கள். எங்கள் மாவட்டத்தினர் பர்மா சென்று தொழில்கள் நடத்தினர்.

மேலும் தில்லை சிதம்பரம் என்று அழைக்கப்படும் சித்தருக்கு 100 ஆண்டுகளுக்கு முன்பு 5 ஏக்கர் நிலம் செங்குந்தர்கள் தானமாக கொடுத்திருக்கிறார் கள். அந்த நிலத்தில் நோய் நீக்கும் மருந்து செடி களை வளர்ந்து மக்களுக்கு இலவசமாக வைத்தியம் செய்துள்ளார். வருடா வருடம் செங்குந்தர் குருபூஜை நடத்தி குரு அருள் பெறுகின்றனர்.

பழனியில் வாழ்ந்த போகர் என்ற ஞானியும் தாவர இனங்களை நுகர்ந்து நுகர்ந்து நோய்களை நீக்கும் தாவர சத்துக்களையும் நவகோள்களின் ஆற்றல்களையும், நவபாசனங்களின் அருள் சக்தியும் எடுத்து சேர்த்து முருகன் சிலை செய்து, சிலை மேல் பாத்திரத்தில் நீர் முருகன் சிலை மீது சொட்டு சொட்டாக வடிய செய்து, அதன் ஆவியை பக்தர்களை நுகரச்செய்து நோய்களை நீக்கினார். அதேபோல் அழகன் குல சித்தரும் இலவசமாக மக்கள் நோய்களை குணப்படுத்தினார்.



- **தான் உயரவும் பிறரை உயர்த்தவும் ஏற்ற பயிற்சியும் தொண்டும் மனவளக்கலையில் அடங்கியுள்ளன.**
- **வாங்கும் கடனும் தேங்கும் பணமும் வளர வளர வாழ்வைக் கெடுக்கும்.**

– அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி

ஸ்ரீஇராமனின் குல பெயரையுடைய ரகுநாதபுரம் என்ற ஊரில் ஓம் சரவணபவ, குகா, கடம்பா, கந்தா, கார்த்திகேயா என்ற பொருளை உணர்த்தும் பழைமையான முருகன் கோவில் உள்ளது. தீமைகளை சரண் அடையச்செய்யும் இந்த உடலான குகையில் நின்று கடம்பா வருவதை எல்லாம் அறிந்து கந்தா மாற்ற வல்ல கார்த்திகேயா என்றும் பொருள்படும் கருத்துக்களை வெளிப்படுகிறது.

வள்ளி என்ற வலிமையான ஞானவேல் கொண்டு உடம்பிலுள்ள அறியாது, சேர்ந்த தீமையான உணர்வுகளை தெய்வானையாக நின்று நீக்கும் என்பது பொருள். இது கோவில் சிலைகளில் இருந்து தெரியவருகிறது. மலரைப்போல் மனமகிழ்ச்சி பெற்று மயிலைப்போல் மகிழ்ந்து வாழ் என்று மயில் சிற்பம் நமக்கு உணர்த்துகிறது.

இரகுநாதபுரம் வாழ் செங்குந்தர்கள் அழகான திருமண மண்டபம் நிறுவியிருக்கிறார்கள்.



**I. தனசீலன்**, BA.,
தலைவர், இராமநாதபுரம்
மாவட்ட செ.ம.சங்கம்.







# கடலூர் மாவட்ட சிறப்புகள்

கடலைச் சார்ந்து கடற்கரையில் அமைந்த ஊர்கள் எத்தனையோ இருந்தாலும் இவ்வூருக்கு மட்டும் தான் கடலூர் எனப் பெயர் வந்தது.

**கொடைத்தன்மை :**

இந்தியாவிற்கே ஒளி வழங்கிடும் நெய்வேலி அனல் மின் நிலையம் அமைய 600 ஏக்கருக்கு மேல் தானமாக வழங்கி நீங்காப் புகழ்பெற்ற ராவ்பகதூர், ஜம்புலிங்கம் முதலியார் பிறந்தது, வளர்ந்தது, வாழ்ந்து மறைந்தது கடலூர் மாவட்டம் திருக்கண்டீஸ்வரம் ஆகும்.

**ஆன்மீகம் :**

பல்லவ மகேந்திரவர்ம மன்னன் சமணர்களின் சூழ்ச்சிக்கு உடன்பட்டு பாராங்கல்லைக் கட்டி கடலில் வீசியபோது



எம்பிரான் திருநாவுக்கரசு நாயனார்

"கற்றுணைப்பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாய வே"

என்ற பதிகத்தைப் பாடி கடலூர் கரையேறவிட்ட குப்பத்தில் கரையேறிய திருநாவுக்கரசர் திரு அவதாரம் செய்த திருவாரூர் கடலூர் மாவட்டமாகும்.

சைவத்தின் முதன்மைத்தலமான சிதம்பரம் கடலூர் மாவட்டமாகும். நம்குலத் தோன்றல் மாணிக்கவாசகர் சிதம்பரத்தில் தான் இறைவனோடு ஐக்கியமானார்.

திருஞானசம்பந்தம், திருநாவுக்கரசர், சுந்தரர் பெருமான் ஆகியோரால் பாடல்பெற்ற தலங்களான திருப்பாதிரிப்புலியூர், திருமாணிக்குழி, திருச்சோபுரம், திருத்தினைநகர், திருமுதுகுன்றம் போன்ற சிவத்தலங்களை உள்ளடக்கியது.

திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் பெற்ற திருவகிந்துபுரம், தில்லைத் திருச்சித்திரக்கூடம் போன்ற பல வைணவத்தலங்களும் அமையப்பெற்றது.

சன்மார்க்க நெறியினை உலகுக்கு போதித்த வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் அவதரித்தது கடலூர் மாவட்டம் மருதூர் ஆகும். அவரால் தண்ணீரில் விளக்கெரிய வைத்த மருதூர் முப்போதும், எப்போதும் உணவளிக்கும் தர்ம சாலையையும், சத்திய ஞான சபையையும் அவர் நிறுவியது வடலூரில்.

இராமலிங்க சுவாமிகள் தம் உடலோடு இறைவனிடம் கலந்து சித்தி பெற்ற மேட்டுக்குப்பம், சுவாமி இராகவேந்திரர் அவதரித்த புண்ணிய பூமி புவனகிரி, சின்முத்திரையை உலகுக்கு அறிமுகம் செய்திட்ட பாபா அவதரித்த பரங்கிப்பேட்டை, எண்ணிலடங்கா தமிழ்ப் புலவர்கள் உருவாக காரணமாக காரணமாக இருந்த சிவத்திரு ஞானியார் மடம் அமைந்த திருப்பாதிரிப்புலியூர், நம் குலத்தில் அவதரித்த குறிஞ்சிப்பாடி சுப்புராய சுவாமிகள், கோல சுவாமிகள், சிதம்பரம் குரு நமசிவாயர், புதுப்பாளையம் பகவந்த் சுவாமிகள், தயாணந்தர் போன்ற எண்ணிலடங்கா மகான்களும் சித்தர்களும் அவதரித்ததும், கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசர், கந்தசாமி பிள்ளை, சிவசிதம்பரம் முதலியார், திருவதிகை மணி - அப்பாவு, வெள்ளைவாரணனார், அ.நடேச முதலியார், இராசாக்கண்ணனார், சுந்தர சண்முகனார், ஆ.சிவலிங்கனார், வை.இரத்தின சபாபதி போன்ற எண்ணிலடங்கா புலவர்களைப் பெற்ற சிறப்புடையது கடலூர் மாவட்டம்.



ஆகியோரது சீரிய அனுபவமிக்க வழிகாட்டுதல்படி கடலூர் மாவட்டம் மாநிலத்திலேயே முதன்மை மாவட்டமாக திகழ்ந்து வருகிறது.

## சமுதாய செயல்பாடுகள் :

சென்னை வள்ளல் சபாபதி பள்ளி இடம் வாங்கியபோதும், செங்குந்தர் மாளிகை கட்டிய போதும் பிற மாவட்டங்களுக்கு முன்னராகவும், அதிகமாகவும் நிதி சேர்த்து வழங்கியது கடலூர் மாவட்டமே ஆகும்.

அமரர் J.S. காலத்தில் நடைபெற்ற அனைத்து மாநில மாநாட்டையும் முன்னின்று நடத்தியதும், அதிக நிதி வழங்கியதும் கடலூர் மாவட்டமே ஆகும்.

நம் தற்போதைய தலைவர் திருமிகு. K.P.K.செல்வராஜ் அவர்கள் உறுப்பினர் ஆயுள் சந்தா சேர்க்க சொல்லியபோது பிற மாவட்டங்கள் எவரும் சேர்க்காத அளவில் 6000 உறுப்பினர்களை வரை சேர்த்து தலைவருக்கு பக்க பலமாக இருந்தது கடலூர் மாவட்டமே ஆகும்.

செங்குந்தமித்திரன் ஆயுள் சந்தா சேர்த்ததிலும் அன்று முதல் இன்று வரை முதன்மை நிலையில் திகழ்வது கடலூர் மாவட்டமே ஆகும்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க முன்னாள் தலைவரும், தற்போது கடலூர் மாவட்ட சிறப்புத் தலைவருமான பெண்ணாடம் ஆ.ராஜவேலு மற்றும் மாவட்ட தலைவர் வை.ஆனந்தன்

## தொழில்துறை :

கைத்தறி நெசவுக்கும் துணி தரத்திற்கும் பெயர் பெற்றது கடலூர் மாவட்டமாகும். ஆனால் தற்போது கைத்தறித் தொழில் நலிவுற்று நம் மக்கள் பல்வேறு தொழில்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளனர். நெல்லிக்குப்பம் EID Parry சர்க்கரை ஆலை மிகப் பிரசித்தி பெற்றதாகும். முந்திரி ஏற்றுமதியில் உலகத்தரம் வாய்ந்த வகையில் முந்திரி தரம் பிரித்து தொழில் நடைபெறுகிறது. பண்ருட்டியும் அதன் சுற்று வட்டாரமும்.

## கல்வி :

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் முதுபெரும் கல்வி நிலையமாகும். இந்தியாவில் கல்வியில் எடுத்துக்காட்டாக விளங்கும் பல்கலைக் கழகங்களில் இதுவும் ஒன்றாகும். அத்தகைய கல்விக் கூடம் அமையப் பெற்றது கடலூர் மாவட்டமாகும்.



இறுதியாக..... இயற்கை அன்னை கொடுத்த மிகப் பெரிய வரப்பிரசாதம் கடலூர் கடற்கரை "சில்வர் பீச்" ஆகும். மிக நீளமாகவும் அகலமாகவும் அமைந்த கடற்கரை ஆகும். சனி, ஞாயிறு என்றில்லாமல் அனைத்து நாட்களிலும் மாலை வேளையில் மக்கள் கூட்டம் அலைமோதும்.

**- திரு.வ.ஞானப்பிரகாசம்,**
**கடலூர்.**





பார்வை இல்லாத தண்டியடிகள்தானே திருக்குளம் பாழாகாமல் காப்பாற்றினார். அதனால்தான் 'நாட்டமிகு தண்டி' என்று போற்றினார்.

நீர்நிலைகளைக் காப்பாற்ற வேண்டும் என்று எல்லோரும் முயன்றுவரும் இந்நாளில், தண்டியடிகள் வரலாறு நமக்கெல்லாம் சிறந்த பாடமாகத் திகழ்கிறது. ஆகவே திருவாரூர் மாவட்டம் தண்டியடிகள் பிறந்த ஊர் திருவாரூர் என்பதால் பெறற்கரிய பெருமை பெற்று திகழ்கிறது.

## இறைவனுடன் நட்பு

உலகில் எங்கும் காண இயலாத பெருஞ் சிறப்பாகத் திருவாரூர்ப் பெருமான், சுந்தரமூர்த்தியாருக்கு 'தோழமை உமக்கே தந்தனம்' என்று திருவாய் மலர்ந்தருளி அவரைத் தம் தோழராக ஆக்கிக் கொண்ட இடம் திருவாரூர்.

உலகில் ஒரு மனிதனிடம் இறைவன் நட்பு பூண்ட வரலாறு இது ஒன்றாகத்தான் இருக்க முடியும்.

சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் பெருமக்களும் பாடிப் போற்றிய திருத்தலம் திருவாரூர். பாடிப் பரவிய பெருமான் ஆரூர்ப் பெருமான். திருத்தலத்தில் மூலவராக விளங்குபவர் புற்றிடங்கொண்டார். உற்சவராகப் புகழோடு விளங்குபவர் தியாகராஜர். திருக்கோயிலே தியாகராஜர் திருக்கோயில் என்றே சிறப்பித்துக் கூறப்படுகிறது.

இவ்வாலயத்தில் நவக்கிரகங்கள் ஒரே வரிசையில் உள்ளன.

பதஞ்சலி முனிவருக்குக் காட்சி தந்த மார்கழி திருவாதிரை அன்றும், வியாக்ரபாதருக்குக் காட்சி தந்த பங்குனி உத்திரத்தன்றும் தியாகராஜரின் பாதத்தை அனைவரும் தரிசனம் செய்யலாம்.

முசுகுந்தர் செய்த 1000 நாமம் கொண்ட முகுசுந்தார்ச்சனை, இந்திரன் செய்த சகஸ்ரகாம அர்ச்சனை ஆகியன சிறப்புடையன. எல்லா கோவிலிலும் பாடும் முன்பு திருச்சிற்றம்பலம் என்பர். ஆனால் 'திருவாரூரில் ஆரூரா, தியாகேசா' என இருமுறை கூறிப் பாடத் தொடங்குவர்.

ஐந்து வேலி நிலத்தில் கோயில் என்றால், அதே ஐந்து வேலிப் பரப்பில் திருக்குளமாகிய கமலாலயம் திகழ்கிறது. திருவாரூர்த் தேர் உலகப்புகழ் பெற்றது. அழகும், பெருமையும் கொண்டது.

இந்தத் திருவாரூர் புகழில் சிறந்த பல்லோரின் பிறப்பிடமாக இருக்கிறது. மனுநீதிச்சோழன், நம் செங்குந்தர் குலத்திலகம் T.N.சபாபதி முதலியார், முன்னாள் முதல்வர் கலைஞர் கருணாநிதி போன்ற பெருமக்களால் புகழ்பெற்ற ஊராக விளங்குகிறது.

கர்நாடக இசையுலகில் மும்மூர்த்திகள் என்று புகழப்படும் தியாகய்யர், முத்துசாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் எனும் மூவரும் தோன்றியது இந்தத் திருவாரூரில்தான்.

வைணவத் திருப்பதி மன்னையம்பதி தெப்போற்சவமும், தேரோட்டமும் திருவாரூர் பெருமையை மேலும் சிறக்கவைப்பனவாகும்.

'மன்னார்குடி மதில் அழகு' என்ற சான்றோரின் வாக்கிற்கிணங்க வைணவத் திருத்தலமாகப் போற்றி வணங்கப் பெறும் மன்னார்குடி ராஜகோபாலசாமி ஆலயத்தின் மதில் உயரமும், அழகும் நிறைந்தது ஆகும். ஆண்டுதோறும் இவ்வாலயத்தில் நடைபெறும் 'வெண்ணெய் தாழி' உற்சவம் காண்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாகும்.

இம்மாவட்டத்தில்தான் வாழ்வில் எல்லா வளங்களையும் பெருக்கும் பொங்கி சனீஸ்வரர் திருக்கொள்ளிக்காட்டில் தனி சன்னதி கொண்டு அருள்புரிகின்றார். காசிக்கு நிகரான குப்த கங்கை தீர்த்தம் உள்ள திருவாஞ்சியத்தில் வாஞ்சிநாதர் சகல தோஷங்களையும் போக்கி அருளுகின்றார். எமனுக்குத் தனி சன்னதி கொண்டுள்ள இடம் திருவாஞ்சியமாகும். ஒட்டக்கூத்தரால் சரஸ்வதிக்குத் கூத்தனூர் என்ற இடத்தில் தனி ஆலயம் எழுப்பப்பட்டுள்ளது.

## ஒட்டக்கூத்தரும் – கூத்தனூரும்

கலைமகளுக்கென்று தனிக்கோயில் கூத்தனூரில் மட்டுமே இருக்கிறது. இந்த கூத்தனூர் என்பது ஒட்டக்கூத்தர் பிறந்ததால் பெருமைபெற்ற ஊராகும்.

செங்குந்தர் இனத்தில் புகழ்பெற்ற புலவராக விளங்கியவர் ஒட்டக்கூத்தர் ஆவார். கம்பரும் ஒட்டக்கூத்தரும் சமக்காலப் புலவர்கள் ஆவார்கள். மூவர்உலா போன்ற புகழ்பெற்ற இலக்கியங்களைத் தந்தவர் நம் பெரும்புலவர் ஒட்டக்கூத்தர் ஆவார்.



திருவாரூர் மாவட்டம் தொன்மைச் சிறப்புகளோடு நில்லாமல் புதுமைப் பொலிவுகளையும் தேடித் தேடிச் சேர்த்து வருகின்றது.

– R.M.P.R.S.சுந்தரமூர்த்தி,

தலைவர், திருவாரூர் மாவட்ட செ.ம.சங்கம்.







# தேன் சிந்தும் திருவாரூர் மாவட்டம்

அந்தியும் நண்பகலும் அஞ்சுப தம்சொல்லி முந்தி
எழும் பழைய வல்வினை மூடாமுன் சிந்தை
பராமரியாத் தென்திரு வாரூர்புக்கு எந்தை
பிரானாரை என்றுகொல் எய்துவதே — **சுந்தரர்**

கோயில் என்றாலே தில்லையைக் குறிக்கும். நம் திருவாரூரில் இருப்பதோ பெரியகோயில் என்று போற்றப்படுகிறது. இதற்கு காரணம் திருவாரூர் கோயிலில் உள்ள தேவாசிரிய மண்டபத்தில்தான், சுந்தரமூர்த்தி நாயனாரால் திருத்தொண்டத் தொகை இயற்றப்பட்டு அரங்கேறியது. அந்தத் திருத்தொண்ட தொகையே சைவ அடியார்களின் வரலாறாக எண்ணப்பட்டு சேக்கிழாரால் பெரியபுராணம் இயற்றப்பெற்றுள்ளது. அறுபத்து மூன்று நாயன்மார்களையும் ஒன்பது தொகையடியார் களையும் அறிந்து உணர்ந்து போற்றுவதற்குத் தெய்வச் சேக்கிழாரின் பெரியபுராணமே அடித்தளமாக அமைந்துள்ளது.

திரு + ஆர் + ஊர் என்பதே திருவாரூர் ஆகிறது. திரு என்ற சொல் பல பொருள்களைத் தரக்கூடியதாகும். திருமகள், செல்வம், நல்வினை, அழகு என்றெல்லாம் பொருள் வழங்கும். திருவாரூரில் இவையெல்லாம் நிறைந்திருப்பதால் திரு ஆர்ந்த ஊர் திருவாரூர் என்று மிகப்பழங் காலத்திலிருந்து சிறப்பாகக் குறிக்கப் பெறுகிறது.

## ஆரூரின் அருஞ்சிறப்புகள்

இந்த திருவாரூரைத் தலைநகராகக் கொண்டது திருவாரூர் மாவட்டம்,

திருவாரூரின் பெருமைகளைச் சொல்வதென்றால், அது ஒன்றும் அவ்வளவு எளிதானதல்ல.

சிவபெருமான் திருவாரூர் வீதிகளில் பாதம் தோய நடந்துள்ளார். அதனால், திருவாரூர் வீதிகள் பெருமானின் திருவடிகளின் தாமரை மணம் வீசுகிறது என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு.

இங்கே மனுவேந்தன் என்னும் சோழமன்னன், நீதியின் பெருமையை நிலைநாட்டியுள்ளான். கன்றுக்குட்டியை தேர் காலினால் கொன்றுவிட்டான் தன் மகன் என்று அறிந்தவுடன் அதே தேர்க்காலில் இட்டு இளவரசனாகிய தன் மகனைக்கொன்று நீதி என்றால் என்ன என்று உலகிற்குக் காட்டினான்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகையில் 'நாட்டமிகு தண்டிக்கு அடியேன்' என்று பாடுகிறார். நாட்டமிகு என்றால் பார்வையில் சிறந்த பார்வையுடைய தண்டி என்று சுந்தரமூர்த்தியார் ஏன் சொல்கிறார்? பார்வை இருந்தவர்கள் குளம் தூர்க்கப்படுவதைப் பார்த்தும் பாராமல் சென்றபோது.







# மதுரை மாவட்டச் சிறப்புகள்

உலகின் தொன்மையான நகரங்களுள் ஒன்று நம் மதுரை. இது மாநிலத்தின் 3வது பெரிய நகரமாகும். வைகை ஆற்றங்கரையில் அமைந்துள்ள மதுரை நகரம் இங்கு அமைந்துள்ள மீனாட்சி அம்மன் கோவிலுக்காக அதிகம் அறியப்படுகிறது.

இந்திய துணைக்கண்டத்தில் ஒரு தொன்மையான வரலாற்றை கொண்ட மதுரை மாநகரம் சுமார் 2500 ஆண்டுகளுக்கும் மேற்பட்ட பழமையும், இன்றுவரை அதே சிறப்புடன், தொடர்ந்து மக்கள் வசித்துவரும் உலகின் சில நகரங்களில் ஒன்று என்ற அரிய சிறப்பையும் பெற்றது. தமிழ்மொழி அறிஞர்களைக் கொண்டு மூன்றாம் தமிழ்ச்சங்கம் அமைக்கப்பட்டு தமிழை வளர்த்த பெருமையுடைய நகரம் மதுரை.

நகரத்தில் பல வரலாற்று நினைவிடங்கள் அமைந்துள்ளன மீனாட்சி அம்மன் கோவில் மற்றும் திருமலை நாயக்கர் அரண்மனை போன்றவை அவற்றில் புகழ்பெற்றவை. மதுரை நகரில் ஆண்டு முழுவதும் பல கொண்டாட்டங்கள் நடைபெறுகின்றன. சித்திரைத் திருவிழா என்று பொதுவாக அழைக்கப்படும் மீனாட்சி அம்மன் திருக்கல்யாணம் ஆண்டுதோறும் 10 நாட்கள் கொண்டாடப்படுகிறது. சித்திரை திருவிழாவின் ஒரு பகுதியாக சுமார் 10 இலட்சம் மக்களால் கண்டுகளிக்கப்படும் கள்ளழகர் ஆற்றில் இறங்கும் வைபவம் ஆண்டுதோறும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

பொங்கல் திருநாளை முன்னிட்டு நடைபெறும் ஏறு தழுவல் நகரின் அருகே உள்ள அலங்காநல்லூர், பாலமேடு மற்றும் அவனியாபுரத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் பெயர் பெற்ற நிகழ்வுகளாகும். தென் தமிழகத்தின் முக்கிய தொழில்துறை மற்றும் கல்விமயமாக மதுரை திகழ்கிறது. ரப்பர், ரசாயனம்,







கிரானைட், கைத்தறி ஜவுளி உற்பத்தி மற்றும் புகழ் பெற்ற மதுரை சுங்குடி சேலைகள் உற்பத்தி ஆகிய தொழில்கள் சிறப்பானதொரு நிகழ்வுகளாகும்.

மதுரை மாவட்டத்தில் அழகர் கோவில், கீழக்குயில்குடி, சித்தனவாசல் ஆகிய இடங்களில் சமணர் படுகை இன்றளவும் சுற்றுலா தளமாக அமைந்துள்ளதோடு அதை தொல்லியல் துறை சிறப்பாக பராமரித்து வருகின்றது.

ஆறுபடை வீடுகளில் திருப்பரங்குன்றம் சுப்பிரமணியசுவாமி கோவில் மற்றும் அழகர் கோவிலில் அமைந்துள்ள பழமுதிர்ச்சோலை ஆகிய இருபடைகள் மதுரையில் அமைந்துள்ளது. இம்மாவட்டத்தின் சிறப்பு அம்சமாகும். குறிப்பாக நாம் கும்பிடும் கடவுள் நம்மை காத்தருளும் நிகழ்வுகள் நடைபெறும் ஆனால் அந்த கடவுளையே திருவிழாக்காலங்களில் சுமந்து செல்லும் பாக்கியம் நம் செங்குந்தர் இனத்திற்கு அளிக்கப்பட்ட நிகழ்வு நம் சமுதாயத்திற்கு கிடைத்த பெருமை. நாம் கும்பிடும் முருகப்பெருமானின் ஆசியுடனே இன்றளவும் இந்தப்பணியை சிறப்பாக செய்து கொண்டிருக்கிறோம்.

மதுரை மாவட்ட செங்குந்தர் மகாஜன சங்கம் 1974-ல் திரு.காந்திதாஸ் B.A.B.L. வழக்கறிஞர் அவர்களால் தொடங்கப்பட்டு பதிவு செய்யப்பட்டது அப்போது மாவட்டத்தில் உள்ள 20 உறவின்முறை களை வைத்து 30 செயற்குழு உறுப்பினர்களை தேர்வு செய்து அதிலிருந்து நிர்வாகக்குழு, தலைவர், செயலாளர், பொருளாளர், துணைத்தலைவர், துணைச்செயலாளர், மாநில செயற்குழு உறுப்பினர் ஆகியோர் 3 ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்வு செய்து நிர்வாகத்தை சிறப்பாக வழிநடத்தினார். சங்கத்தின் நோக்கம் கல்வி ஊக்கத்தொகை வழங்குவது ஏழ்மையான மாணவ/ மாணவிகளுக்கு உதவித்தொகை வழங்குவது போன்ற பணிகளை தொடர்ந்து செய்து வருகின்ற நிகழ்வுகளாகும்.



**- இரா.காந்தி,**

தலைவர்,
மதுரை மாவட்ட செ.ம.சங்கம்






# புதுக்கோட்டை மாவட்டச் சிறப்புகள்

புதுக்கோட்டை மாவட்டத்தில் புதுக்கோட்டை, மணமேல்குடி, கந்தர்வகோட்டை, ஆலங்குடி, அறந்தாங்கி, ஆவுடையார்கோவில் மற்றும் பொன்னமராவதி வட்டங்களில் நமது செங்குந்த இன சொந்தங்கள் கணிசமான எண்ணிக்கையில் உள்ளனர். குறிப்பாக மணமேல்குடி மற்றும் புதுக்கோட்டையில் குறிப்பிட்டு சொல்லும் அளவில் எண்ணிக்கையிலும் செயல்திறனிலும் உள்ளனர்.

புதுக்கோட்டையில், மாட்சிமை தங்கிய மன்னர் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராக பணியாற்றிய திரு. கா.மு.சுந்தரகணேசன் அவர்கள் சீரிய முயற்சியினால் உத்யோக ரத்னா உயர்திரு J.சுத்தானந்தன் அவர்கள் தலைமையிலும் திருவாளர்கள் M.A. முருகேசன் B.A.B.L, ஓய்வு பெற்ற மாவட்ட நீதிபதி, மதுரை N.அருணாசலம் M.A.LL.B., D.S.S, வரலாற்று பேராசிரியர் செயின்ட் ஜோசப் கல்லூரி, திருச்சி, J.பழனியாண்டி, நகர குழு உறுப்பினர் செங்குந்த புரம், ஜெயங்கொண்டம், புதுக்கோட்டை முதலியார் சில்க் பேலஸ், திரு. சிவசண்முகம் மற்றும் ஆத்தூர் திரு.கே.பி.மகாலிங்கம், துணைத்தலைவர் செங்குந்த மகாஜனசங்கம், சேலம் ஆகியோர் முன்னிலை வகிக்க 20.4.1989 ஆம் நாளில் சங்கம் துவக்கம் பெற்று சிறப்புற செயல்பட்டு வருகிறது.



புதுக்கோட்டை மாவட்டத்தில் செங்குந்த மகாஜன சங்கத்தின் அங்கமாக உள்ள மணமேல்குடியில் நமது செங்குந்த மரபினரின் சீரிய சமூகப்பணிகள் மற்றும் ஆன்மீகப் பணிகளில் செயல்பாடுகள் அளப்பரியது.

**செங்குந்தர் மரபினரின் சீரிய பணியினால் சிறப்புறும் மணமேல்குடி ஸ்தலம்**

அறுபத்து மூன்று நாயன்மார்களின் ஒருவரான குலச்சிறை நாயனார் பூசித்து வழிபட்ட சிவ ஸ்தலம் இன்றும் அருள்தரும் ஜெகத்ரட்சகி உடனுறை ஜெகதீஸ்வரர் ஆலயம் என்ற பெயரில் செங்குந்தர் மரபினரின் செம்மையான பணியினால் சிறப்புற அருள் பரப்பிக் கொண்டிருக்கிறது.

குலச்சிறையாரின் சீரிய முயற்சியின் பயனாக திருஞானசம்பந்தரை மங்கையற்கரசியின் துணையுடன் பாண்டிய நாட்டிற்கு அழைத்துச் சென்று சைவம் தழைக்க வைத்த பெருமையுடையது.

குலச்சிறையார் தெய்வீகப் பேரவை எனும் பெயரில் அமைப்பினை ஏற்படுத்தி மாணவர்களுக்கு பரிசளித்து விழாக்களில் பங்காற்றுதல் என்பன பணி நடைபெற செய்த பெருமை இந்த அமைப்பினை நிறுவி செங்குந்தர் மரபின் மாண்பினை காத்த மறைந்த K.T.R என்கிற கே.டி.ஆர் தியாகராஜன் அவர்களை சேரும் செங்குந்தர் மரபின் மற்றுமொரு சீரிய பணி குலச்சிறையார் கல்வி அறக்கட்டளை எனும் பெயரில் கல்வி அறக்கட்டளை துவங்கி குலச்சிறையார் மழலையர் மற்றும் துவக்கப்பள்ளி, ஸ்ரீ ஜெகதீஸ்வரா

மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி எனும் பெயரில் இரண்டு கல்வி நிறுவனங்கள் 25 வருடத்துக்கும் மேலாக செங்குந்தர் மரபினரால் சிறப்பாக நிர்வகிக்கப்பட்டு வருகின்றன.

அருள் நெறி தந்தை குன்றக்குடி அடிகளார் அவர்கள் குன்றக்குடிக்கும் நெருங்கிய தொடர்புடையது என்று சொல்லும் அளவிற்கு மணமேல்குடி மாண்பு பெற்றுள்ளது.

அதேபோல் ஆலங்குடியிலும் செங்குந்த சொந்தங்களின் முயற்சியினால் குறிப்பாக DR. V.S. கோவிந்தராஜன் அவர்கள் முயற்சியால் அங்காள பரமேஸ்வரி - மாசாணி அம்மன் ஆலயம் கட்டப்பட்டு ஆன்மீகத் தொண்டு செய்து வருகின்றனர்.

புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஆவுடையார் கோயில் எனும் ஊரில் சைவக்குரவர் நால்வரில் ஒருவரான மாணிக்கவாசகர் கட்டிய திருக்கோயில் அமையப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

ஆதிமனிதன் புதுக்கோட்டை மாவட்டத்தில் வாழ்ந்ததற்கான அறிகுறிகள் கிடைத்துள்ளன. பழைய கற்கால கல்லாயுதம் ஒன்று திருமயம் வட்டம் குருவிக்கொண்டான் பட்டியில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இது சுமார் இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும்.

புதுக்கோட்டையைச் சுற்றியுள்ள இயற்கைக் குகைகளும் பாறை இருக்கைகளும் மனிதன் தொன்று தொட்டே இப்பகுதியில் வாழ்ந்து வந்திருக்க வேண்டுமென்பதற்கு மேலும் சான்றுகள் பகர்கின்றன.

இந்த பழைய கற்கால கல்லாயுதம் ஒன்றைத் தவிர வேறு ஆயுதங்கள் கிடைக்கவில்லை. மேலும் புதிய கற்கால நாகரீகத் தடயங்களும் இதுவரை கிடைக்க வில்லை. ஆனால் உலோகக்கால நாகரீகச் சுவடுகள் நிறைய கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இக்காலத்தின் பிற்பகுதியான இரும்பு காலத்தில் நிலவிய பெருங்கற்காலத்தில் உபயோகத்திலிருந்த செம்பு, இரும்பு ஆயுதங்கள் மட்பாண்டங்கள், மணிகள், அணிகலன்கள் இறந்தோரைப் புதைத்த புதைக் குழிகள், இறந்தோரின் நினைவுச் சின்னங்களாக பயன்படுத்தப்பட்ட கல்லறைகள் புதைகுழித் தாழி கள் ஆகியன நிறைய கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இரும்புக்கால - பெருங்கற்கால நாகரீகத்தின் ஆரம்ப காலம் கி.மு 600 வரை நீளும் என்று கருதப்படுகிறது. இந்த பண்பாடு சங்க காலத்திலும் ஆங்காங்கு நடமுறையிலிருந்ததாக அக்கால



தமிழுக்கும் அமுதென்று பேர் - அந்தத்
தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்
தமிழ் எங்கள் அறிவுக்குத்தோள்! - இன்பத்
தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள்.

- பாவேந்தர் பாரதிதாசன்.

இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. குறிப்பாக இறந்தோரை தாழியிட்டு புதைக்கும் முறை சங்க காலத்தில் பழக்கத்திலிருந்த செய்தியை புறநானூறு, பதிற்றுப்பத்து, நற்றிணை போன்ற நூல்களிலிருந்து அறிகிறோம். இது முதுமக்கள் தாழி, ஈமத்தாழி, முதுமக்கள் சாடி என குறிப்பிடப்பட்டுள்ளது. இறந்தோர் நினைவாக பள்ளிப்படை அமைத்த செய்தியும் காணப்படுகின்றது.

பிராமி (தமிழ்) கல்வெட்டு (எழுத்துகள்) சுமார் கி.மு 200 முதல் கி.பி 200 வரை வழக்கிலிருந்ததாக கல்வெட்டு வல்லுநர்கள் கருதுகின்றனர். தமிழ்மொழியை எழுதுவதற்கு பாமர மக்களிடம் இவ்வெழுத்துப் பரவலாக வழக்கத்திலிருந்து இக்கல்வெட்டுகளில் தூய தமிழ்ச் சொற்களும், பிராகிருத மொழிச் சொற்கள் சிலவும் காணப்படுகின்றன. சித்தன்னவாசல் ஏழடிப்பட்டம் என்னும் குகையில் பிராமி எழுத்துக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. கல்வெட்டு குகையின் தரையில் காணப்படும் வழவழப்பான ஒரு படுக்கையின் விளிம்பில் பொறிக்கப்பட்டுள்ளது.

சமண மதம் அக்காலத்திலிருந்தே புதுக்கோட்டைப் பகுதியில் தழைத்தோங்கி இருந்ததற்கான சான்றுகள் இதன் மூலம் தெரியவருகிறது. இக்காலத்திற்கும் பிற்காலத்திலும் எடுக்கப்பட்ட பல சமண சின்னங்களும் சிற்பங்களும் இடிந்து போன சமணப்பள்ளிகளும் இங்கு நிறையக் காணப்படுகின்றன.

தொல் பொருட்கள், நினைவுச் சின்னங்கள், வரலாற்றுக் குறிப்புகள் செறிந்து காணப்படும் புதுக்கோட்டையின் பன்முக பாரம்பரியத்தை புரிந்து கொள்ள, புதுக்கோட்டையின் அரசியல் வரலாற்றை அறிந்து கொள்வது அவசியமாகிறது. புதுக் கோட்டையின் வரலாறு தென்னிந்திய வரலாற்றுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக கருதத்தக்கது.










# புதுச்சேரி மாநிலச் சிறப்புகள்

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழ் என்று சங்கே முழங்கு"

என்று வெற்றிச் சங்கு முழங்கிய புரட்சிக்கவி பாவேந்தர் பாரதிதாசன் பிறந்த மண் புதுச்சேரி மாநிலம்.

## புதுச்சேரி மாநிலத்தின் சிறப்பு

புதுச்சேரி என்றவுடன் அனைவரின் நினைவிற்கு வருபவர் இன உணர்வையும், மொழி உணர்வையும் மக்களுக்கு ஊட்டிய புரட்சிக்கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள். புதுச்சேரி மாநிலத்தின் முதல் சட்டப்பேரவையின் உறுப்பினராகவும், தற்காலிக சட்டப்பேரவை தலைவராகவும் பதவி வகித்தார்.

அத்தகைய உலகம் போற்றும் உயர்க் கவி தோன்றியது நமது செங்குந்தர் மரபில் என்பதனை மகிழ்வோடும், பெருமையோடும் கூறிக் கொள்ளலாம். அத்தகைய பெரும் புலவரோடு ஏற்பட்ட பழகத்தினால் சுயமரியாதை உணர்வுடன் வாழ்ந்து வரும் பெரியவர் ந.கோ. என்று அன்போடு அழைக்கப்படும் தமிழ்மாமணி, கலைமாமணி, டாக்டர் ந.கோவிந்தசாமி செங்குந்தர் அவர்களாவார்.

இவர் பாரதிதாசன் ஊட்டிய தமிழ் உணர்வால் கம்பன் கழகம் என்ற இலக்கியக் கழகத்தை 50 ஆண்டுகளுக்கு முன் நிறுவி இன்று வரை மிகச் சிறப்பான முறையில் தலைவராக இருந்து நடத்தி வருகிறார். அவருக்கு உறுதுணையாக இருந்து வரும் புரவலர் வேல். சொக்கநாதன் அவர்களும், கல்வி வள்ளல் வே.பொ.சிவக்கொழுந்து அவர்களும் நமது செங்குந்த மரபினர்களே.

புதுச்சேரி மாநிலத்தில் பல்வேறு ஊர்களில் பதிவு செய்யப்படாமல் முதலியார் சங்கம் என்ற பெயரால் இயங்கிய அமைப்புகளைச் சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர் செங்குந்தர் சங்கமாக மாற்றம் செய்யப்பட்டு புதுச்சேரி ஒன்றிய நிலவரை செங்குந்தர் பெருமக்கள் சங்கம் என்ற பெயரால் தொடங்கப்பட்ட அமைப்பு, 1980ஆம் ஆண்டு டாக்டர் ந.கோவிந்தசாமி செங்குந்தர் அவர்கள் தலைமையில் அமரர்கள் சின்னாத்தா முதலியார், கே.குப்புசாமி முதலியார், க.முத்துகருப்பன், சிங்கார ஆடியபாதம், புவிவேந்தன் மற்றும் வேல், சொக்கநாதன் ப. இராஜாக்கண்ணு, மு.சுப்ரமணியன், ஆ.அரிமாப்பாமகன், கோ.கதிர்வேலு ஆகியோரின் பெரு முயற்சியால் பதிவு செய்யப்பட்டு இன்று வரை மிகச் சிறப்பாகச் செயல்பட்டு வருவதோடு துணை அமைப்புகளாக நம் செங்குந்தர் - மரபு அரசு ஊழியர்களை ஒன்றிணைக்கும் வகையில் சமூகப் பொருளியியல் தொண்டு கழகம் என்ற பெயரில் செயல்பட்டு வருகின்றது.

புதுச்சேரி மாநிலத்தில் செங்குந்தர்களிடையே ஒற்றுமையை உருவாக்கி ஒருங்கிணைப்பு செய்த செம்மல், நெசவாளர்களின் நேசன், உத்யோக் ரத்னா, அமரர் ஜெ.சுத்தானந்தன் அவர்கள் புதுச்சேரி நகரம் முதல் கிராமங்கள் வரை ஒவ்வொரு ஊராகச் சென்று நம் குலக்கொடியை ஏற்றி வைத்துச் செங்குந்த மக்களிடத்திலும், இளைஞர்களின் மத்தியிலும் எழுச்சியை உருவாக்கியதின் விளைவாகத்தான் புதுச்சேரி மாநில செங்குந்தர் சங்கம் இன்று பீடு நடை போட்டுக் கொண்டிருக்கிறது.

கடந்த 2000ஆம் ஆண்டு புதுவைச் செங்குந்தர் கல்வி நலச் சங்கம் என்ற பெயரால் பதிவு செய்யப்பட்டுள்ள அறக்கட்டளையில் 650 உறுப்பினர்களைக் கொண்டு நபர் ஒன்றுக்கு ரூ.10000/- வீதம் கட்டணமாகப் பெறப்பட்டு ரூ.65,00,000/-





வங்கியில் வைப்பு நிதியாக வைக்கப்பட்டுள்ளது. இந்தக் கல்வி நலச் சங்கம் டாக்டர் ந.கோவிந்தசாமி அவர்களைச் சிறப்பு தலைவராகவும், வி.பி.சிவக் கொழுந்து தலைவராகவும், ப. இராஜாக்கண்ணு பொதுச்செயலாளராகவும், க.தனகோடி பொருளாள ராகவும் மற்றும் துணை பொறுப்பில் உள்ளவர்களும், செயற்குழு மற்றும் பொதுக்குழு உறுப்பினர்களும் ஒருங்கிணைப்போடு இணைந்து மிகப் சிறப்பாகப் பணியாற்றி வருகின்றனர்.

வங்கியில் உள்ள வைப்பு நிதியின் வட்டி யிலிருந்து ஆண்டுதோறும் 10, 12ஆம் மற்றும் சி.பி.எஸ்.இ. வகுப்பில் பொதுத் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்று சுமார் 600 செங்குந்த மாணவர்களுக்கு ஊக்கப் பரிசும், நினைவுக் கேடயமும், பரிசு பொருட் களும் வழங்குவதோடு உயர்கல்வி படிக்க வசதி வாய்ப்பில்லாத செங்குந்த மாணவர்களை இனங் கண்டு உதவித்தொகை யும் வழங்கப்படுகின்றது.



புதுச்சேரி மாநில செங்குந்தர் சங்கத்தின் சார்பில் திருமணத் தகவல் மையம், புதுச்சேரி மட்டுமல்லாது தமிழகம் உட்பட பிற மாநிலங்களில் உள்ள செங்குந்தர்கள் பயனடைகின்ற வகையில் மிகச் சிறப்பாக பாராட்டு பெறுகின்ற வகையில் நடைபெற்று வருகின்றது.

புதுச்சேரி நகர செங்குந்தர் சங்கத்திற்குச் சொந்தமாகக் நகரப் பகுதியில் சொந்தமாகக் கட்டிடமும், முத்தியால்பேட்டையின் இதயப் பகுதியில் சுமார் 1.75 ஏக்கர் காலி இடமும், அதில் அருள்மிகு செங்குந்த விநாயகர் திருக்கோயில் அமையப்பெற்று பராமரிக்கப்பட்டு வருகின்றது.

### தமிழ்த்தாய் வாழ்த்து

புதுவை மாநிலத்திற்கென்று 1970ஆம் ஆண்டு வரை தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடல் இருந்ததில்லை. தமிழ்மாமணி திரு.ந.கோவிந்தசாமி முதலியார் அவர்கள் புதுவை முதல்வராக இருந்த எம்.ஓ.எச். பாரூக் அவர்களிடம் பாரதிதாசன் இயற்றிய "வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே" என்ற பாடலை இசையுடன் பாடிக்காட்ட அப்பாடலையே புதுவை மாநிலத்தின் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலாக அறிவித்தார். 1971-72ஆம் கல்வியாண்டு முதல் புதுவையின் அனைத்துக் கல்வி நிறுவனங்களிலும் அரசு விழாக்களிலும் தமிழ்த்தாய் வாழ்த்தாகப் பாடப்பட்டு வருகிறது.

### கல்வி நிறுவனங்கள்

செங்குந்த மரபினர் மட்டுமின்றி அனைத்து மக்களும் கல்வி கேள்வியில் சிறந்து விளங்க வேண்டும் என்ற பொது நோக்கில்; முத்தியால்பேட்டை சின்னாத்தா முதலியார் அவர்கள் சொந்தச் செலவில் தனது மனையில் அன்றைய நாளில் பள்ளிக்கூடம் ஒன்றை நிறுவினார். அது இன்றும் சின்னாத்தா அரசு பெண்கள் உயர்நிலைப் பள்ளியென்ற பெயரில் இயங்கி வருகின்றது.

இது மட்டுமின்றி புதுவை, சேதராப்பட்டில் ஸ்ரீ அரவிந்தர் பொறியியல் கல்லூரி, ஸ்ரீ அரவிந்தர் கலை மற்றும் அறிவியல் கல்லூரிகளை நமது செங்குந்த மரபினர் நடத்தி வருகின்றனர்.

### செங்குந்த சான்றோர்களின் பெயரால் அமைந்துள்ள கல்லூரிகளும், பள்ளி மற்றும் ஆய்வுக் கூடங்கள்

புரட்சிக் கவிஞரின் சிறப்பைப் போற்றும் வகையில் அவர் வாழ்ந்த இல்லம் அரசுடைமையாக் கப்பட்டு பாரதிதாசன் நினைவு அருங்காட்சியகம் மற்றும் ஆய்வு மையம் என்ற பெயரில் இயங்குகின்றது.

புதுச்சேரி, முத்தியால்பேட்டையில் பாவேந்தர் அவர்கள் பெயரில், பாரதிதாசன் அரசு மகளிர் கல்லூரி இயங்கி வருகிறது.

பண்டிட் துரைசாமி முதலியார் அவர்களின் தமிழ்ப் புலமையைப் போற்றும் வகையில் அவர் வாழ்ந்த பெத்துசெட்டிப்பேட்டையில் பண்டிட் துரைசாமி அரசு உயர்நிலைப் பள்ளி என்ற பெயரால் அரசுப் பள்ளி நடைபெற்று வருகின்றது.

புதுவையில் சைவமும், வைணவமும் தழைத்தோங்கி வளர்கின்றன. இம்மாநிலத்தில் முத்தியால்பேட்டை அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில், பெத்துசெட்டிப்பேட்டை

அருள்மிகு சித்திவிநாயகர் சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில், செல்லப்பெருமாள்பேட்டை அருள்மிகு ஊத்துக்காட்டு மாரியம்மன் திருக்கோயில், நெட்டப்பாக்கம் அருள்மிகு விநாயகர் திருக்கோயில், கதிர்காமம் அருள்மிகு கதிர்வேல் சுவாமி திருக்கோயில், மாரியம்மன் திருக்கோயில், இலாசுப்பேட்டை அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில், சண்முகாபுரம் அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில், முத்தைய முதலியார்பேட்டை அருள்மிகு ஜெயம்கொண்ட விநாயகர் கோயில், அருள்மிகு சுப்ரமணியசுவாமி கோயில் ஆகிய திருக்கோயில்கள் செங்குந்த மரபினரால் கடந்த 100 ஆண்டுகளுக்கு மேலாகப் பராமரிக்கப்பட்டு வருகின்றன.

### செங்குந்த மரபு சிறுவனின் சாதனை

உலகப் பொதுமறையாம் திருக்குறளின் 1330 திருக்குறளை மனப்பாடமாகக் கூறும் ஆற்றல் பெற்றவர் நமது செங்குந்த மரபைச் சார்ந்த மு.பிரகதீஸ்வரன். அவரின் ஆற்றலைக் கண்டு வியந்த உத்தரகாண்ட் நாடாளுமன்ற உறுப்பினர் திருமிகு. தருண் விஜய் அவர்கள் டெல்லி நாடாளுமன்ற அவையில் நடைபெற்ற திருக்குறள் விழாவில் "திருக்குறள் செல்வர்" விருதினை வழங்கியுள்ளார்.

புதுச்சேரி மாநிலத்தில் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் முன்னாள் தலைவர்கள் பத்மஸ்ரீ எம்.பி. நாச்சிமுத்து முதலியார் அவர்கள், உத்யோகரத்னா ஜெ.சுத்தானந்தன் அவர்கள், பெண்ணாடம் ஆ.இராஜவேலு அவர்கள் ஆகியோர் தலைவர்களாக இருந்த காலத்தில், தலைமைச் சங்கத்தின் செயற்குழு, பொதுக்குழு கூட்டங்கள் மிகச் சிறப்பாக புதுச்சேரி மாநில செங்குந்தர் சங்கத்தின் சார்பாக நடத்தப்பட்டன. இன்றைய தலைவர் கைத்தறிக் கதிரவன் திருப்பூர் கே.பி.கே.செல்வராஜ் அவர்கள் தலைமையில், புதுச்சேரி மாநிலத்தில், தலைமைச் சங்கத்தினுடைய நிர்வாகக் குழு, செயற்குழு மற்றும் பொதுக்குழு மற்ற மாநிலம் மற்றும் தமிழக மாவட்டங்களால் பாராட்டத்தக்க வகையில் மிகச் சிறப்பாக நடத்தப்பட்டன.

புதுச்சேரி ஆளுநர் மாளிகைக்கு அருகில் அமைந்துள்ள அருள்மிகு மணக்குள விநாயகர் ஆலயம், ஒவ்வொரு காலக்கட்டத்திலும் புதுப்பிக்கப்பட்டு, இன்று மிகச் சிறப்பான ஆலயமாகத் திகழ்கின்றது. தேசிய உணர்வூட்டிய பாரதி அமர்ந்து குயில் பாட்டு எழுதிய கருவடிக்குப்பத்தில் நமது செங்குந்தர் சமுதாயத்தைச் சார்ந்த சித்தானந்த சுவாமிகளின் ஜீவசமாதி திருக்கோயில், புதுவை மகாத்மா காந்தி வீதியில் அமைந்துள்ள அருள்மிகு வரதராஜ பெருமாள் திருக்கோயில் 1000 ஆண்டுகள் முன்பு அமைந்த அருள்மிகு வேதபுரீஸ்வரர் திருக்கோயில், வில்லியனூர் அருள்மிகு கோகிலாம்பிகை சமேத திருகாமீஸ்வரர் கோயில், திருக்காஞ்சி, அருள்மிகு காமாட்சி அருள்மிகு மீனாட்சி உடனுறை கங்கா வராக நதீஸ்வரர் திருக்கோயில், வீராம்பட்டினம் கடற்கரை அருகில் அமைந்துள்ள அருள்மிகு செங்கழுநீர் அம்மன் திருக்கோயில் ஆகியவைகள் இந்துக்கள் கோவிலாகும்.

புதுச்சேரியில் மகான் அரவிந்தர் வாழ்ந்த ஆசிரமம் இன்றும் பல்வேறு மதத்தினர்களாலும் போற்றப்பட்டு வருகின்றது.

கிறித்துவ மதத்தைச் சார்ந்த மிஷன் வீதியில் அமைந்துள்ள ஜென்மராக்கினி ஆலயம், ஹாஜியார் வீதியில் அமைந்துள்ள மசூதியும் பிரசித்தி பெற்றவைகள் ஆகும்.

புதுச்சேரி மாநிலத்தின் மற்றொரு மாவட்டமான காரைக்கால் கோவில்கள் நகரமாகவும் பிரெஞ்சு காலாச்சாரத்தைப் பிரதிபலிக்கும் வகையில் விளங்குகிறது. உலகப் புகழ் பெற்ற திருநள்ளாறு அருள்மிகு தர்பாணீஸ்வரர் திருக்கோவிலில் குடிகொண்டிருக்கும் சனீஸ்வர பகவான் திருக்கோவிலும், இலக்கிய வரலாற்றுச் சிறப்புமிக்க காரைக்கால் அம்மையார் திருக்கோவிலும், செங்குந்த மரபினர்களால் பராமரிக்கப்பட்டு வரும் அருள்மிகு சுந்தராம்பாள் சமேத கைலாசநாதர் திருக்கோவில், அருள்மிகு அபிராமி உடனுறை இராஜசோளீஸ்வரர் திருக்கோவில், திருமலைராயன் பட்டினம் அருள்மிகு ஆயிரங்காளியம்மன் திருக்கோவில் செங்குந்த மரபினர்களால் நிறுவப்பட்டு கடந்த 250 ஆண்டுகளாக சிறப்பான முறையில் பராமரிக்கப்பட்டு வருகின்றது.

புதுச்சேரி மாநிலத்தில் தமிழ், ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு, பிரஞ்ச் ஆகிய மொழிகள் மட்டுமல்லாது இந்தியாவில் உள்ள அனைத்து மொழி பேசுகின்ற மக்களும் புதுச்சேரியில் இணைந்து மிகச் சிறப்பாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது பெருமைக்குரிய ஒன்றாகும்.

















# வரலாறு படைத்த இனம் வாழ்வாங்கு வாழியவே!

"வாழையடி வாழை" வந்த இனம் – நம்ம
வாரியார் சுவாமியைத் தந்த இனம்!
வாழையடி வாழை வந்த இனம் – இந்த
வையகம் போற்றிட வாழ்ந்த இனம்!

செங்குந்தம் ஏந்திய வீரஇனம் – அன்று
செங்கோலும் ஏந்தியே ஆண்ட இனம்!
நங்குந்தர் நலமோங்க என்னும் இனம் – என்றும்
நல்லாடை நெய்திங்கே வாழும் இனம்!

திருப்பூர் குமரனைத் தந்த இனம் – திருத்
தில்லையாடி வள்ளியம்மை இனம்!
அருள்தீர்த்தகிரி முதலியார் இனம் – பல
ஆலய நிர்வாகம் ஏற்ற இனம்!

"பாவடி" கண்டிங்கே வாழ்ந்த இனம் – நம்ம
பாவேந்தர்போல் பலர் வந்த இனம்!
சேவற் கொடியோனின் சொந்தஇனம் – திருச்
செந்தூரின் சஷ்டியைச் சார்ந்தஇனம்!

சூரசம் மாரம்செய் தோங்கும் இனம் – நவ
வீரர்களும் தோன்றி வாழ்ந்த இனம்!
ஆற அமர யோசிக்கும் இனம் – சிலர்
அறுபத்து மூவரில் வாழும் இனம்!

ஒட்டக்கூத்தர் புகழ் ஓங்கும் இனம் – என்றும்
உலகெலாம் சென்றுமே வாழ்ந்தஇனம்!
பட்டுத் தொழில் புகழ்பெற்ற இனம் – காஞ்சி
பார்புகழ் அண்ணாவைத் தந்தஇனம்!

அருமை நார்சிமுத்து வாழ்ந்தஇனம் – வள்ளல்
ஆன்ற சுத்தானந்தன் வந்த இனம்!
அரிய சபாபதி வாழ்ந்த இனம் – எங்கள்
அன்பு கே.பி.கே.எஸ். வாழும் இனம்!

அரசியல் ஆன்மீகம் கண்ட இனம் – பல
ஆன்மீகச் சித்தர்கள் வந்த இனம்!
வரலாறு படைத்திங்கே வாழும் இனம் – என்றும்
வாழ்வாங்கு வளர்ந்தோங்கி வாழியவே!



– விசூர் மாணிக்கம்,
பெங்களூரு.



# செங்குந்த தெரிந்த கைக்கோளப் படையும் - தலைவர்களும்

சிவனுக்கு முன்யாரும் பிறந்த தில்லை!
சிவனேதான் இவ்வுலகின் முதலி யாவான்!
சிவனுக்கோ தாய் தந்தை யாரும் இல்லை!
சிவனேதான் ஊரார்க்குத் தத்துப் பிள்ளை!
ஊராரின் பிள்ளையைநாம் ஊட்டி வாழ்ந்தால்,
உருப்படியாய்த் தன்பிள்ளை வளர்ந்து போகும்!
பாரிலுள்ள முதலிகளே "சிவகோத் ரத்தார்"!
பழக்கத்தால் "சிவாயநம" என்றே சொல்வார்!

"சிவாயநம" என்றுஓது வார்க்கு உலகில்
அபாயம்தான் எப்போதும் வருவ தில்லை!
உபாயமிது வேதான்நல் மதியே ஆகும்!
ஓதார்க்கு விதியென்றும் மதியாய்ப் போகும்!
சிவலிங்கத் தலைமீது வில்வம் போட்ட,
சிறுகவியால் முசுகுந்த மன்னர் வந்தார்!
சிவனவனும் தேவர்களைக் காப்ப தற்கு,
சிறுபிள்ளை முருகனையே தோன்றச் செய்தார்!

முருகனுக்குத் தளபதியாய் உமையும் அன்று
முழுத்துணைக்கு ஒன்பதுபேர் உருவம் செய்தாள்!
முருகனிடம் நவவீரர் வந்து சேர்ந்தார்!
முருகனுமே அவர்களுடன் படை நடத்தி,
சூரனுடன் போர்செய்து சம்க ரித்தார்!
சூரனவன் மாயங்கள் பலவும் செய்து
கரந்துநல் மாமரமாய் மாறி நின்றான்!
கைவேலால் இருகூராய்ப் பிளந்தான் கந்தன்!

சேவலாய், மயிலாக மாறச் செய்தார்!
செங்குந்தம் ஈட்டிதான் கொடிக்கம் பாச்சு!
சேவல்தான் முருகனது கொடியாய் ஆச்சு!
செம்மையுடை மயிலங்கு ஊர்தி யாச்சு!
சூரசம்கா ரவிழாவே நமக்கே சொந்தம்!
செப்புவது மிகச்சுலபம் செய்து காட்டும்!
சூரனது வேண்டுகோளே தீபா வளிதான்!
சுறுசுறுப்பு எல்லோர்க்கும் அன்று காணும்!

அரசர்கள் காலத்தில் படைவீ ரர்கள்!
அப்படையில் கைக்கோளர் முதலில் சென்றார்!
அரணாக நம்மவர்கள் இருந்த தாலே
அதனாலும் கைக்கோளர் முதலி யானார்!

கையினிலே செங்குந்தம் கண்ட தாலே,
கைக்கோளர் செங்குந்தர் என்றே ஆனோம்!
கையினிலே காசிருந்தோர் ஜவுளி விற்றார்!
காசில்லா செங்குந்தர் நெசவு நெய்தார்!

மணக்குடியில் பிறந்தநம் ஒட்டக் கூத்தர்!
மன்னர்க்கு அரசகுரு எனவே வாழ்ந்தார்!
மணக்குடியில் வாழ்ந்துவந்த நம்ம வர்கள்,
மனங்கனிந்து குந்தர்புகழ் பாடக் கேட்டார்!
ஆயிரத்து எட்டுதலைப் பிள்ளை தலையை
அரிந்தெடுத்து சிரச்சிங்கா சனம்அ மைத்தால்,
அதிலேறி பாடுவதாய் ஒப்புக் கொண்டார்!
அவ்வாறு பாடியதில் கூத்தர் ஆனார்!

குலோத்துங்கன் நிகழ்ச்சியிலே கலந்து கொண்டார்!
குந்தர்நம் கைக்கோளர் வீரம் கண்டு
குலோத்துங்கன் புலிச்சின்னம் நமக்குத் தந்தான்!
குலக்கொடியில் அச்சின்னம் வருதல் ஆச்சு!
முடிமன்னர் காலத்தில் நமது முன்னோர்,
முதலில்நின்று தெரிந்தகைக்கோ ளப்ப டையாய்
முடிமன்னர் வெற்றிக்கு உதவி னார்கள்!
முடிவில்லா புகழுக்கு உரிமை யானார்!

முடியாத காலத்தில் நமது முன்னோர்,
முடிவாகப் பலஊர்க்குச் சிதறிப் போனார்!
முடிமன்னர் காலநிலை மனதில் எண்ணி,
முழுக்குடும்பம் வறுமையுடன் புழுங்கி வாழ்ந்தார்!
திருவாரூர் நாகப்ப சபாப தியாரும்
திருத்தமுடன் வாழ்தற்குச் சங்கம் கண்டார்!
பார்மீது முதன்முதலில் உதித்த சங்கம்,
பகலவனாய் வளர்ந்தகதை கீழே பாரும்!



புலவர். மு.அருணாசலம்
துறையூர் - 621 010.
திருச்சி மாவட்டம்.

# பதின்மரைப் போற்றுவோம்
(செங்குந்தர்குல நாயன்மார்கள்)

சிவபெருமானை வழிபட்டுப் பேரருள் பெற்ற நாயன்மார்கள் அறுபத்து மூவர். அவர்களுள் பத்துப் பேர்கள் செங்குந்த மரபைச் சேர்ந்தவர்கள். அவர்களைப் பற்றி அறிவது இன்றியமையாதது.

## 1. மெய்ப்பொருள் நாயனார்.



எம்பிரான் மெய்ப்பொருள் நாயனார்
கார்த்திகை - உத்திரம் (660 - 840)

திருக்கோவலூரை ஆண்டவர் மெய்ப்பொருளார். இறைவனை அடியார்கள் வடிவில் காண்பதாக எண்ணி அவர்களை மகிழ்விப்பார். தமது தோள்வலிமையால் பகையரசர்களை வென்று அவர்களை நெறிப்படுத்துவார். அவர் மீது தீராப்பகை கொண்டவன் முத்த நாதன். பலமுறை போரிட்டுத் தோற்ற அவன் அவரைச் சூழ்ச்சியால் வெல்லக் கருதினான்.

சிவனடியார் வேடம் பூண்டு ஆகமநூல் உபதேசம் செய்பவர் போல் மெய்ப்பொருளாரின் அரண்மனைக்குள் சென்றான். சிவவேடம் கண்டு மகிழ்ந்த மெய்ப்பொருளார் மண்டியிட்டு அமர்ந்து, உபதேசம் கேட்கலானார்.

அச்சமயத்தில் புத்தகக்கட்டுக்குள் வைத்திருந்த கொடுவாளால் அவரை வெட்டி வீழ்த்தினான். இதைக் கண்ட காவலர்கள் பதறினர். ஆனால் மெய்ப்பொருளார் நிதானமாகக் காவலர்களிடம் முத்தநாதனைப் பாதுகாப்பாக அவனது எல்லையில் கொண்டு சேர்த்து வருமாறு கூறினார். அவன் ஊர் சேர்ந்ததையறிந்தபின் உயிர் விட்டார்.

கார்த்திகை மாதம் உத்திர நட்சத்திர நாளில் இவர் முக்திப்பேறு பெற்றார்.

## 2. எறிபத்த நாயனார்



எம்பிரான் எறிபத்த நாயனார்
மாசி - அத்தம் (400 - 600)

சிவகாமியாண்டார் தினமும் மலர்கள் பறித்து மாலை தொடுத்து சிவபிரானுக்குச் சூட்டி மகிழ்வார்.

ஒருநாள் பூக்கூடையோடு ஆலயம் சென்றார். அப்போது எதிரே வந்த பட்டத்து யானை மலர்க்கூடையைப் பற்றி இழுத்து காலில் மிதித்துச் சிதைத்தது. சிவகாமியாண்டார் மனம் பதைத்தார். அவ்வழியே கையில் மழுவுடன் எறிபத்தர் வந்து கொண்டிருந்தார். மிகுந்த சினம் கொண்டார். யானையை நோக்கி வேகமாகச் சென்றார். யானையையும் எதிர்த்து வந்த பாகர்களையும் மழுவால் தாக்கிக் கொன்றார்.



மன்னர் செய்தியறிந்து அதிர்ந்தார். எறிபத்தரை நோக்கி "ஐயனே ! நீர் செய்தது சரியே. என்னையும் தண்டியும்"


வாரியார்தாசன்
புலவர் ச. பாலசுப்பிரமணியன்,
திருநெல்வேலி

தம்மைத் தகவமைத்துக் கொண்டமைக்கான சான்றுகள் ஏராளம்.

அடுத்தவர்க்குத் துணை நின்றதால் அரசிழந்த வரலாறும் அதியர்க்குண்டு.

கொல்லிமலை ஓரிக்கும் கோவலூர் காரிக்கும் பகை நேர்ந்தபோது அதியன் ஓரிக்குத் துணை நின்றான். காரிக்குச்சேரமான் படையுதவி செய்தான். சேரமான் காரியொடு நின்று அதியனை வென்று, 'தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை' என்றே பட்டம் சூட்டிக் கொண்டான். அதியமான்களில் சிலர் வல்லாண்மைக்கு அடிபணிய மறுத்து நாடிழந்த வரலாறும் உண்டு. புகழ்ச் சோழர்க்குத் திரை செலுத்த மறுத்ததால் நாடிழந்த அதிகனை சேக்கிழார் குறிப்பிடுகிறார்.



காவிரி, தென்பெண்ணை, சரபங்க நதி, சரத்குமார நதி, பாம்பாறு, கம்பைநல்லூர் ஆறு போன்ற நீர் ஆதாரங்களால் இன்றும் தகடூர் தனது வளத்தையும் வருமானத்தையும் பெருக்கி வாழ்ந்து கொண்டிருக்கிறது.

'தகட்டூரின்' நீண்ட வரலாற்றின் நேற்றைய வரலாறும் கூட குறிப்பிடத்தக்க ஒன்று.

விடுதலைப்போரில் இந்த மாவட்டத்தின் பங்கு ஒப்பற்றது.

மூதறிஞர் ராஜாஜி, சுப்பிரமணிய சிவா, தியாகி தீர்த்தகிரியார் போன்ற மாபெரும் தியாகிகளின் பிறப்பிடமாகவும் இருப்பிடமாகவும் இந்த பூமி இருந்துள்ளது.

இவர்களின் தலைமையில் எண்ணற்ற பெருமக்கள் சுதந்திர வேள்வியில் வாழ்நாள் முழுதும் தம்மை ஆகுதியாக்கிக் கொண்டனர். சொத்து, சுகம், உயிர் என அனைத்தையும் இழந்தவர் ஆயிரமாயிரம்.



மரவள்ளிக் கிழங்கிலிருந்து சேமியா போன்ற பொருள் தயாரிக்கும் தொழிலகங்கள் அரூர், தர்மபுரி வட்டங்களில் அதிகமாகக் காணப்படுகின்றன. அரூர் வட்டத்தில் உமியிலிருந்து எண்ணெய் தயாரிக்கும் பணி நடைபெறுகிறது.

இவ்வூரில் உள்ள காமாட்சி ஆலயத்தில், மூன்றாம் குலோத்துங்கனின் 10-12-ஆம் ஆண்டு ஆட்சிப் பெருமைகளைச் சிறப்பித்துக் கூறும் கல்வெட்டு இருக்கிறது. தர்மபுரியிலிருந்து 6-வது மைலில் மேடூர் சாமுண்டி அம்மன் மந்து கல்வெட்டில் தகடூரில் திருமணத்திற்கு வரி வசூலித்த செய்தி காணப்படுகிறது.

ஒகெனக்கல் இம்மாவட்டதில் உள்ள தலை சிறந்த சுற்றுலாத் தலமாகும். தர்மபுரியிலிருந்து 25கி.மீ. தொலைவில் உள்ளது. தமிழகத்தில் காவிரி இங்கு தான் எட்டிப் பார்க்கிறது. இங்கு காவிரி 36 பிரிவுகளாகப் பிரிந்து அருவியாக விழும் அழகை காண்பது மனதிற்கு பெரும் மகிழ்வைத் தரும்.

தர்மபுரியிலிருந்து 4 மைல் தொலைவில் அதமன் கோட்டை இருக்கிறது. தகடூரை ஆண்ட அதியமான் பெயரை மக்கள் அதமனாக்கி விட்டனர். கோட்டை அழிந்து விட்டது. கோட்டையில் சோமேஸ்வரர் கோயில் பெரியது. விஷ்ணு, பைரவர், அங்காளம்மன் கோயில்களும் உள்ளன.

அரூருக்கு வடகிழக்கில் சுமார் 10மைல் தொலைவில் தீர்த்தமலை உள்ளது. இம்மலையில் பல தீர்த்தங்கள் இருப்பதால் தீர்த்தங்களின் மலை என்ற பொருளில் அழைக்கப்படுகிறது.

"மண்ணின் பெருமை பொன்னும் பொருளுமல்ல அதில்வாழ் மக்களின் மனவளமே மண்ணின் பெருவளம்" என்பார் அறிஞர். அவ்வகையில் தகடூர் பூமி ஆயிரமாயிரம் ஆண்டுகளாகவே தலைசிறந்த பூமி தான்.



**- P.சச்சிதானந்தம்,**
பொதுச் செயலாளர்,
தருமபுரி மாவட்ட செ.ம. சங்கம்




1942ஆம் ஆண்டில் பி. யூ. சின்னப்பா மற்றும் டி. ஆர். ராஜகுமாரி நடித்து வெளியான "மனோன்மணி" என்றத் திரைப்படம் மிகுந்த பொருட் செலவில் தயாரான முதல் தமிழ்த் திரைப்படமாகும்.

தமிழில் வெளியான முதல் வண்ணத் திரைப்படம் (கேவா கலர்) 1956ஆம் ஆண்டு இந்நிறுவனத்தின் அலிபாபாவும் நாற்பது திருடர்களும் ஆகும். இதை மலையாளத்தில் "கண்டம் வெச்ச கொட்டு" என்ற பெயரிலும் தயாரித்தார்.

1961ஆம் ஆண்டு கண்டம் வெச்ச கொட்டு என்ற மலையாளத் திரைப்படம் அம்மொழியில் எடுக்கப்பட்ட முதல் வண்ணத் திரைப்படம் ஆகும்.

1938ஆம் ஆண்டு நோடானி இயக்கிய பாலன் என்ற திரைப்படமே முதல் மலையாள பேசும் திரைப்படமாக அமைந்தது

மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரித்த படம் "சந்தனத் தேவன்". ஆங்கிலக் கதையான "ராபின்ஹுட்"டைத் தழுவி, இப்படம் தயாரிக்கப்பட்டது. படத்தின் கதாநாயகன் ஜி.எம். பஷீர். படம் வெற்றி பெற்றது.

**தமிழ்நாட்டில் எடுக்கப்பட்ட முதல் ஆங்கிலத் திரைப்படம்:**

மாடர்ன் தியேட்டர்சும் அமெரிக்க திரைப்பட நிறுவனமும் இணைந்து 1952ஆம் ஆண்டில் முதல் ஆங்கிலத் திரைப்படத்தை - தி ஜங்கிள், தயாரித்தனர்.

புகழ்பெற்ற நகைச்சுவை நடிகை மனோரமா கதாநாயகியாக நடித்த முதல் திரைப்படம் 1963ஆம் ஆண்டில் வெளியான கொஞ்சும் குமரி டி.ஆர். சுந்தரத்தின் 97ஆவது திரைப்படமாக அமைந்தது.

மூன்று தனித்தனிக் கதைகளை கொண்ட முதல் திரைப்படம்: சௌ சௌ. மூன்று கதைகள்: கலிகால மைனர், ஸ்கூல் டிராமா மற்றும் சூரப்புலி

ஜூம் லென்ஸ் கண்டறியாத காலத்திலேயே அத்தகைய ஓர் உணர்வை உருவாக்கிய பொன்முடி (1950) பட காமெராமேனுக்கு பிரெஞ்சு அரசு விருதளித்துப் பாராட்டியது.

இந்தியாவின் ஐந்து முன்னாள் முதலமைச்சர்களை தனது சம்பளப் பட்டியலில் கொண்டிருந்த தனிப்பெருமை கொண்ட நிறுவனம்.

தனது திரைப்படங்களில் தரமான தயாரிப்பு அமைய அடிக்கடி வெளியிலிருந்து இயக்குனர்களை, எல்லிசு ஆர். டங்கன், மணிலால் டண்டன், பொம்மன் டி.இரானி போன்றவர்களைப் பயன்படுத்தியது.

கவிஞர் கண்ணதாசன் போன்றவர்கள் தொடக்க காலத்தில் இங்குதான் தங்கி பாடல்கள் எழுதிவந்தனர்.

**மறைவு**

1963 இல் டி. ஆர். சுந்தரம் காலமானார். இப்போது சேலத்தில் மாடர்ன் தியேட்டர்ஸ் இருந்த இடம் சுந்தரம் கார்டன்ஸ் என்ற குடியிருப்புப் பகுதியாக மாறியிருக்கிறது. வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த அரங்கின் நுழைவு வாயில் மட்டும் தற்போது நிலைபெற்றிருக்கிறது. இன்றைக்கும் சில படப்பிடிப்புக் குழுவினர் சேலம் மாடர்ன் தியேட்டர் வளாகத்தில் தனது முதல் படப்பிடிப்பைத் தொடங்குவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

# செங்குந்தர் மண்ணில் சிவனருட் செல்வர்கள்

சோழ நாட்டு சைவத்திருத்தலங்கள் அமைந்துள்ள ஊர்களிலெல்லாம் பெரும் பகுதிகளில் செங்குந்த இனமக்கள் வாழ்ந்து வந்தனர். திருக்கோயிலில் நடைபெறும் வழிபாடுகள், திருவிழாக்களை முன் நின்று நடத்தி பக்தியையும் பண்பாட்டையும் போற்றி வந்தார்கள்.

நாள்தோறும் கோயில் குளங்களைப் பேணிப் பாதுகாத்து, நீராடிச் சிவனைத் தேவாரத் திருப்பாடல்களால் அர்ச்சித்து, பின்னரே தன்செயல்களைத் தொடங்கினர். அதனால் அந்தந்த ஊர்கள் செழிப்போடும் சீரோடும் விளங்கிற்று.

நாகை மாவட்டத்தில் அமைந்துள்ள திருமருகல் என்னும் ஊரில் பண்டுதொட்டு செங்குந்த இனமக்கள் வாழ்ந்து வந்தனர். இன்றும் வாழ்ந்து வருகின்றனர். அக்காலத்தில் தறி ஓட்டி ஆடைகளுக்கான துணிகளை உருவாக்கும் அரிய பணியையும் உழவுத்தொழிலையும் செய்தனர். இதன் இரண்டையும் இருகண்களாகப் போற்றி வாழ்ந்து வந்தனர்.

இத்தலத்திற்கு ஒருமுறை ஞானப்பால் அருந்திய ஞான சம்பந்த பெருமான் இறைவனாகிய மாணிக்க வண்ணரையும், இறைவி வண்டார் குழலியம்மையையும் வழிபட வந்தார். கோயிலின் முன்புறத்தில் ஒரு இளம்பெண் ஒரு இளைஞனைப் பார்த்து புலம்பி அழுது கொண்டிருந்தாள். அழுகுரலைக்கேட்டு யாதென வினவினார் திருஞான சம்பந்தர். அங்கிருந்தோர். "இப்பெண் தன் மாமன் மகனைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு வந்தாள். இரவில் தங்கியிருந்தபோது அரவுத் தீண்டி மணாளனின் ஆவி நீங்கிற்று அதன் அவலக் குரலின் ஒலியே இது" என நவின்றனர்.

பிறர் துயர் துடைப்பதே இம்மானுடப் பிறவியின் நோக்கம் என்பதைக் கருத்திற் கொண்டு.



"சடையாய் எனுமால் சரணநீ எனுமால்" எனும் பதிகத்தைப் பாடி இறையருளால் இழந்த உயிரை இத்தலத்தில் இந்தளம் என்னும் இசையால் எழுப்பினார் என்பது சேக்கிழாரின் பெரிய புராணம் கூறும் வரலாற்றுச் செய்தி. அங்கு வாழ்ந்த செங்குந்தப் பெருமக்கள் திருஞானசம்பந்தரைப் போற்றி வரவேற்று பெருமைக்கொண்டனர். கல்வி அறிவைப் புகட்டுவதில் அக்காலத்திலேயே செங்குந்தப் பெருமக்கள் முதன்மை பெற்றிருந்தனர்.

பிள்ளைக்கறிக் காசைக் கொண்ட கள்ளத்தவ வேடரான சிவன் சிறுத்தொண்டரிடம் ஒரு குலத்துக்கு ஒருமகனாக விளங்கும் பிள்ளையின் நரமாமிசத்தைக் கேட்டபொழுது சிறுதொண்டர் தன் ஒரே மகன் சீராளனைக்கறி சமைக்கத் துணிந்து கல்விக் கற்க சென்றவனை அழைக்க திருமருகல் சென்று அழைத்து வந்தார் என்ற குறிப்பின் மூலம் கல்வி வளர்ச்சிக்கும் செங்குந்தர்கள் சான்றாக விளங்குகின்றனர். திருமருகல் மாடக்கோயிலாக அமைந்துள்ளது. வாழைமரம் தலவிருட்சமாக விளங்குகிறது. இன்றும் இத்தலத்தில் செங்குந்த இனமக்கள் செட்டிமகனை உயிர்ப்பிக்கும் நிகழ்ச்சியை நடத்தி வருகின்றனர். காவிரித் தென்கரைத் தலத்தில் 80 வது தலம் இதுவாகும். மருகல் என்பது வாழை வகையில் ஒன்று. இங்குள்ள தீர்த்தம் இலக்குமி தீர்த்தம். இதில் நாளும் நீராடி இறைவனை வழிபட்டால் செல்வம் பெருகும், நோய் நீங்கும், திருமணத் தடை விலகும். அப்பர் சுவாமிகளும் இத்தலத்திற்கு வந்து வழிபட்டு "பெருகலாம்தவம் பேதைமை தீரலாம் எனத் தொடங்கும் பதிகத்தை அகத்துறையில் பாடியுள்ளார்".

சுந்தரமூர்த்தி சுவாமிகளும் "வாழை நன்னாட்டு மருகல் என்று குறிப்பிட்டுள்ளார்".

இத்தகைய சீரும் சிறப்புமிக்க செங்குந்தர்கள் பெருமையைத் தமிழ்கூறும் நல்லுலகம் மட்டு மல்லாது உலகந் தழீஇய சைவப் பெருமக்களும் உணர்வார்கள் என்பதில் ஐயமில்லை.

**வை.முருகையராஜேந்திரன்** M.A.B.Ed.,
தமிழ் விரிவுரையாளர் (ஓய்வு)
காரைக்கால்



# வீரபாகு தேவருக்கு வீரவாள் அளித்து அருளிய கந்த உபதேசம்



எம் நாடு எம் மக்கள் என நாடிவந்த உலகில் !
அதர்மத்தை அழித்து தர்மத்தை காக்க - எமக்கு
சக்திவேலை தந்த சிவசக்தி கால் நவரத்தின சிலம்பில் - உதித்த
நவவீரர்கள் என் தம்பிகள் என் படை தளபதிகள் !

தேவேந்திரனை வீர மகேந்திரபுரி சிறையில் மீட்ட வீரபாகு தேவரே !
கந்த சஷ்டி போரின் வீரத்தளபதி நீரே ! தர்மத்தை நிலை நாட்ட - எம்தாய்
பராசக்தி அளித்த செங்குந்தம் உலகை ஆளும் !
யாம் அளிக்கும் நவரத்தின வீரவாள் ! தர்மம் வெல்ல
தமிழ் சங்கம் கண்ட அகத்தியரை துன்புறுத்திய தாரகாசூரனை வீழ்த்தும் !

சிங்கமுகா சூரனை கொன்று கடம்பமாலை வீரசெங்குந்தர்களுக்கு விளங்கும் !
7 குதிரை தேரில் வரும் சூரியனை சிறைபடுத்திய பானுகோப்பனை அழிக்கும் !
பத்மா சூரனை கொன்று புலிக்கொடி பெற்று முசுகுந்த சோழர் குலமாக - வீர
செங்குந்தர் குலம் விளங்கும் ! மக்களை காக்கும் குலமாக விளங்கும் !
ஈசனின் தாருகாவனத்து பிரமஹத்திபழிநீங்க - தன் தலை தந்த
வீர செங்குந்தர் குலமே ! போர்களபலி படைவீரகுலமாக விளங்கும் !
வீரபாகு தேவரே ! உமக்கு வீரவாள் அளித்த நாள் - உன்
வீர செங்குந்தர் குலம் போற்றும் கந்தசஷ்டி திருநாளாக விளங்கும்
எத்தனை எத்தனை யுகமானாலும் ! உன் வீரசெங்குந்தர்குலம்
ஒவ்வொரு இல்லங்களிலும் வீரவாள் கந்தசஷ்டி விரதமிருந்து
எம் ஆலயமெல்லாம் யாம் போருக்கு செல்லும் கந்த சஷ்டி நாளில்
போரில் கலந்து கொள்ளும் வீர செங்குந்தனின் ஒவ்வொரு வீரவாளிலும்
என் தம்பி வீரபாகு தேவரின் திருமுகம் காண்பேன் !
வீரசெங்குந்தர்களுக்கு எல்லா வளம் தரும் குலக்கடவுளாவேன் !
வீரசெங்குந்தா ! தொடரட்டும் உன் கடமை ! காப்பது என்கடமை !
யாமிருக்க பயமேன் ! உலகை வெல்லும் செங்குந்தம் !




**K.S.T. கோவிந்தராஜ், M.A.,**
பொதுச்செயலாளர்,
கிருஷ்ணகிரி மாவட்ட செ. ம. சங்கம்




## திரு. க.சண்முகவேல்

அருப்புக்கோட்டை, வெள்ளைக் கோட்டை செங்குந்தர் சமுதாய மக்களால் பெரியவர் என்ற பெயர் பெற்றவர்.



### ஆற்றிய பணி விபரம்

* 1942 முதல் 1953 வரை வெள்ளைக்கோட்டை செங்குந்தர் நெசவாளர் கூட்டுறவு சங்கத் தலைவர் நிறுவனர்.
* அருப்புக்கோட்டை கூட்டுறவு நகர கூட்டுறவு வங்கி செயலாளர் (முன்னாள்)
* அருப்புக்கோட்டை, வெள்ளைக்கோட்டை செங்குந்தர் ஊர் உறவின் முறை ஸ்தாபகர்.
* அருப்புக்கோட்டை, வெள்ளைக்கோட்டை அண்ணா நகரில் சுமார் 200 வீடுகள் செங்குந்தர் சமுதாய மக்களுக்கு சொந்தமாக ஆவதற்கான நிலம் உறவின்முறை சார்பாக ஏற்பாடு செய்து கொடுத்தவர்.
* வெள்ளைக்கோட்டை செங்குந்தர் தொடக்க பள்ளி கட்டிடங்கள் 1980க்கு முன்னாள் ஏற்படுவதற்கு முன்னின்று பணியாற்றியவர்.
* 1980ல் இயற்கை எய்தியவர்க்கு இது நாள் வரை அவரின் நினைவு நாளை அவரது சமாதியில் தொடர்ந்து சமுதாய மக்களும், பள்ளி குழந்தைகளும் கொண்டாடி வருகின்றனர்.

## மொழிப்போர் தியாகத்தில் செங்குந்தன் சின்னச்சாமி

"எங்கள் வாழ்வும், எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு" எனப்பாடிய புரட்சிக் கவிஞன் தன் பாடல் வரியில் தாய்மொழியின் பால் உள்ள பற்றால் வீர ஆவேசத்துடன் குறிப்பிட்டான்.

அந்தக் காலக்கட்டத்தில்தான் நம் குலசிங்கம் இருபத்தேழு வயது நிரம்பிய இளைஞன். சிங்கத் தமிழன் கீழப்பழுவூர் சின்னசாமி வீறுகொண்டு எழுந்தான். ஆறுமுக முதலியார் - தங்கம்மாள் இருபது ஆண்டு காலம் தவமிருந்து பெற்றெடுத்த அந்தக் குலக் கொழுந்து தன் இரண்டு வயது மகனையும், மனைவியையும் துச்சமெனக்கருதி தமிழைக்காப்பாற்ற புறப்பட்டான்.

திராவிட செல்வியின் முகத்தில் தன் கண்ணில் நீர் வழிய மாறி, மாறி முத்தமிட்டான். மற்ற பிள்ளைகளுக்கும் இனிப்புகள் வாங்கிக் கொடுத்து மகிழ்ந்தான். நாளை பார்க்க முடியாத முகத்தை பரிதாப கண்ணோடு உற்று நோக்கினான்.

தன் தாயிடத்தும் மனைவியிடத்தும் அரியலூர் சென்று வருகின்றேன். குழந்தையைப் பார்த்துக் கொள்ளுங்கள் என்று விடைபெற்று சென்ற சின்னசாமி நேராகத் திருச்சி வந்தான். திருச்சியில் தன்னை புகைப்படம் எடுத்துக் கொண்டான். அந்த புகைப்பட ரசீதை இணைத்துத் தன் நண்பர் நாகராஜனுக்கு ஒரு கடிதமும், தன் மைத்துனருக்கு ஒரு கடிதமும் எழுதினான்.

நண்பருக்கு எழுதிய கடிதத்தை மட்டும் அனுப்பிவிட்டு, மைத்துனருக்கு எழுதிய கடிதத்தை தான் தீயிட்டுக் கொளுத்திக்கொண்ட இடத்திற்கும் அருகாமையில் உள்ள மின் கம்பத்தின் அடியில் வைத்திருந்தார். தன்னை யாரும் காப்பாற்றிவிடக் கூடாது என்பதற்காக தன் தேகத்தில் பெட்ரோலை ஊற்றிக் கொள்வதற்கு முன்பு தன்னைச் சுற்றி ஒரு வளையம் போல் பெட்ரோலை ஊற்றிவிட்டுத் தன் தேகத்தில் பெட்ரோலை ஊற்றி தீ வைத்துக் கொண்டார். தேக்கு மர தேகத்தை தீயிட்டு கொளுத்திக் கொண்டு தமிழ் வாழ்க அண்ணா வாழ்க என்று கத்திக் கொண்டே துடிதுடித்து மடிந்தான் அந்த மறத்தமிழன்.

திருச்சி ரயில் நிலையத்தின் முன்பு தமிழுக்காக சின்னச்சாமி மூட்டிய 'தீ' தமிழக முழுவதும் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. தமிழ் வாழ சின்னச்சாமி செய்த தியாகம், குந்த குலத்திற்கு பெருமை சேர்த்தது.





திருக்குறள், சிலப்பதிகாரம், பெரியபுராணம், கம்பராமாயணம், வில்லிபாரதம், சைவத் திருமுறைகள், திவ்ய பிரபந்தம், பிள்ளை தமிழ் நூல்கள் என்று இப்படி எத்தனை இலக்கியங்கள் உள்ளனவோ, அத்தனையையும் கற்றறிந்தவர். அருணகிரிநாதரின் அருள் நூல்களான திருப்புகழ், அலங்காரம், அநுபூதி, அந்தாதி வகுப்பு என எல்லாவற்றையும் முற்றும் பருகி, எழுத்தெண்ணி, நயம் காட்டி, தங்கு தடையின்றி சந்த பிரவாகத்தை கொட்டும் அதி அற்புத ஞானவாரி.

"திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களை பற்றி தமிழ்நாட்டில் அறியாதார் இல்லை. அவர் நாவில் திருப்புகழும், கையில் திருப்பணியுமாக நடமாடும் திருத்தொண்டர். நாயன்மார்கள் வரிசையில் வைத்து அவரை அறுபத்து நான்காவது நாயனாராக வழிபடும் சிவநேய செல்வர்களும் இருக்கிறார்கள்" என்று ஆனந்த விகடன் 3-8-1958 இதழில் எழுதியிருந்தார்கள்.

"திருப்புகழ்அமிர்தம்" என்ற மாத இதழை 1936ஆம் ஆண்டு சித்திரை மாதம் தொடங்கி 37 ஆண்டுகள் நடத்தினார். பல நூறு திருப்புகழ் பாடல்களுக்கு உரை விளக்கம் எழுதி வெளியிட்டார். பல ஆன்மீக இலக்கிய நூல்கள், கதைகளை கட்டுரைகளை எழுதி சமுதாயத்தில் ஒழுக்க நெறியை வளர்த்தவர்.

**''சொல்லால், செயலதனால், சொற்பொழிவால், கீதத்தால்**
**வல்ல அணிப்பூசை மாண்பதனால் - எல்லார்க்கும்**
**இல்லாச் சிறப்பை இசை வாரியார் சாமி**
**வல்லாண்மை மேலாகு மால்''**

– தவத்திரு சுந்தரசுவாமிகள்.

காலையானால் ஜபம், தியானம், பின்பு ஸ்நானம், பூஜை, ஓய்வு ஒழிவின்றி கட்டுரைகள் வரைதல், மாலையில் சந்தியாவந்தனம், பிறகு சொற்பொழிவு செய்யும் அறநெறி வாழ்க்கை வாரியாருடையது.

பல கோவில் திருப்பணிகள், அறப்பணிகள், கல்வி கூடங்கள் முதலியன அவரால் செழித்தன. காந்திஜி, ராஜாஜி போன்று இம் மூதறிஞரும் தமக்கு வரும் கடிதங்களுக்கு விடாது பதில் எழுதும் பழக்கமுடையவர்.

மாதம் தோறும், படிக்கும் பல குழந்தைகளுக்கு உதவி தொகை அனுப்புவதை கடமையாக கொண்டிருந்தவர்.




பள்ளிக்கூடத்தை மிதியாதவர் வாரியார். ஆனால் பெரிய கல்லூரிகள் செய்ய இயலாத அளவுக்கு அறிவு தானம் செய்தவர். காஞ்சி மாமுனிவர் அவருக்கு "சரஸ்வதி கடாக்ஷமிர்தம்" என்று பட்டம் வழங்கினார்.

மேலும், ஷட்பதநாதர், அமுதமொழி அரசு, ப்ரவசன சாம்ராட் இப்படி 30க்கும் மேற்பட்ட பட்டங்களும் பாராட்டுக்களும் பெற்ற பெருந்தகையாளர்.

லண்டன் மற்றும் ஐரோப்பிய நாடுகள் சிலவற்றில் விரிவுரை செய்ய வாரியார் சென்றார். அப்போது உடல் நலம் குன்றியதால் தாயகம் திரும்ப வேண்டியதாயிற்று. 7-11-1993 அன்று வரும் வழியில் வான் வெளியில் முருகன் திருவடிகளில் கலந்தார்.

8-11-1993 அன்று காங்கேயநல்லூர் முருகன் கோவிலுக்கு எதிரிலுள்ள சரவணப்பொய்கை அருகில், அவரது திருவுடலுக்கு சமாதி கோயில் அமைத்து வழிபட்டு வருகிறார்கள்.

20-ஆம் நூற்றாண்டின் இணையற்ற திருமுருகன் திருத்தொண்டர், திருமுருக கிருபானந்த வாரியார்.

ஔவையின் பாடல் ஒன்றின்படி,

**''சபை ஏறுவதால் நூற்றில் ஒருவர்**
**நல்ல புலவர் ஆதலின் ஆயிரத்தில் ஒருவர்**
**பேச்சு வன்மையால் பதினாயிரத்தில் ஒருவர்**
**வாரி வாரி வழங்குவதனால் கோடியில் ஒருவர்''**





# தருமபுரி: சங்ககாலம் தொட்டு சமீபகாலம் வரை ஒரு கழுகுப் பார்வை



சுமார் இரண்டாயிரம் ஆண்டுகள் பின்னோக்கிச் செல்ல வேண்டும். இன்றைய 'தருமபுரி' அப்போதெல்லாம் 'தகடூர்' என்றே அழைக்கப்பட்டது. விட்டும் தொட்டும் அதியரின் ஆட்சியில் நீண்டகாலம் இருந்த காரணத்தால் அதியமான் நாடு என்றும் தகடை, தகடூர், தகடாபுரி என்றும் அழைக்கப்பட்டது. சங்ககாலப் புலவர்களாகிய ஔவையும் பரணரும் அதியமான் நெடுமான் அஞ்சியை நாற்பதுக்கு மேற்பட்டப் பாடல்களால் பாராட்டுகின்றனர்.

தருமபுரியின் புவியியல் முக்கியத்துவம் குறிப்பிடத்தக்க ஒன்று. காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி வரை நீண்டு கிடக்கும் பெருவழிச்சாலை இந்தியத் துணைக் கண்டத்தின் வணிக முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். தகடூர் இந்த நீண்ட நெடுஞ்சாலையின் 'மையக் கண்ணணியாய்' விளங்குவதால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவே 'இச்சிறுநகர்' குறிப்பிடத்தக்க வகையில் முக்கியத்துவம் பெற்றுள்ளது.

வடமாநிலங்களோடு தென்னகத்தின் அயல் மாநிலங்கள் அனைத்தும், குமரி வரை மட்டுமல்ல - கேரள பூமி வரை - தமது வணிகப் பயணத்தை தகடூர் வழியாகத்தான் மேற்கொண்டாக வேண்டும். புவியியல் சார்ந்த இத்தகைய முதன்மைக் காரணத்தால் தான் இந்த பூமி எண்ணற்ற போர்களையும் சந்தித்துள்ளது.



தியாகி சுப்பிரமணியசிவா மணிமண்டபம் – தருமபுரி மாவட்டம்

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய அதியமான் நெடுமான் அஞ்சியே தகடூர் வரலாற்றின் முதற்கண்ணணி. தனது பெயருக்கேற்ற தோற்றப் பொலிவுடைய பெருவீரன். நெடுமான் என அழைக்கப்பட்டதற்கு அவனது உயரமும் ஒரு காரணம்.

தமிழ் மூதாட்டி ஔவையின் அணுக்கத் தோழன் 'கொஞ்சமாய் இருப்பின் வந்தவர்க்குத் தந்தும், மிகுதியாய் இருப்பின் அவரோடு பகிர்ந்துண்டும்' விருந்து புரந்த பெருவளத்தான் அவன்.

போர்க்களமும் வெற்றியும் என்றே வாழ்ந்ததால் அவனது நாட்டில் 'போர்க்கருவிகள் அனைத்தும் முனை மழுங்கியும் கூரொடிந்தும் கொல்லன் உலைக்களத்தில் செப்பனிடப்படுவதற்காகக் குவிந்துகிடந்ததாக' ஔவையார் குறிப்பிடுவார்.

வாழ்நாளை நீட்டிக்கும் ஆபூர்வக் கனி அது என்பதை அறிந்ததும், அதன் சிறப்பைச் சொல்லாமல் அவ்வைக்குத் தந்து, தனது தமிழ்ப்பற்றை நிறுவிய அதியமான் தகடூர் வரலாற்றில் மகுடமாய்த் திகழ்வது உலகறிந்த உண்மை....

சங்ககாலம் தொடங்கி கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரையிலான நீண்ட வரலாற்றில் அதிய மரபினர் குறுநில மன்னர்களாகவும், வேற்றரசர்களால் வெல்லப்பட்ட காலங்களில் அந்நாட்டுப் படைத் தலைவர்களாகவும், வேறு சில காலங்களில் வென்றவர்களின் கீழ் சிற்றரசர்களாகவும், இன்னும் சிலகாலங்களில் வேற்றரசின் அதிகாரிகளாகவும் கூட

இறைவன் கருணையால் யானையும் பாகர்களும் உயிர் பெற்றனர். கூடையில் மலர்கள் நிரம்பின. யாவரும் மகிழ்ந்தனர். எறிபத்தர் மாசி மாதம் அஸ்த நட்சத்திர நாளில் முக்திப்பேறு பெற்றார்.

## 3. பெருமிழலைக் குறும்ப நாயனார்



எம்பிரான் பெருமிழலைக் குறும்ப நாயனார்
ஆடி - சித்திரை (840 - 865)

குறுநில மன்னரான பெருமிழலைக் குறும்பர் சிவனடியார்களிடத்துப் பேரன்பு கொண்டவர். அவர்களைக் குறிப்பால் அறிந்து உபசரிக்கும் பணபினர். அவர்களுக்குத் தேவையான செல்வங்களை அள்ளிக்கொடுப்பார். நாள்தோறும் சுந்தரமூர்த்தி நாயனாரை வழிபடுவார். திருத்தொண்டர் தொகை பாடி மகிழ்வார்.

சுந்தரர் கயிலை செல்ல விரும்பியதை தம் யோகபலத்தால் முன்னரே உணர்ந்தார். அவருக்கு முன்பாகத் தாம் கயிலை செல்ல விரும்பினார். பெருமானைத் தியானித்தவாறே யோக சமாதியில் அமர்ந்தார். ஆடி மாதம் சித்திரை நட்சத்திர நாளில் முக்திப்பேறு பெற்றார்.

## 4. திருமூலநாயனார்

சிவயோகியார் என்பார் அகத்திய முனிவரைச் சந்திப்பதற்காக கயிலையிலிருந்து பொதிகை நோக்கிப் புறப்பட்டார். பல தலங்களைத் தரிசித்துத் திருவாவடுதுறை வந்தார். அங்கு பசு மேய்க்கும் மூலன் என்பவன் இறந்து கிடப்பதையும் பசுக்கூட்டம் அவனது உடலைச் சுற்றிலும் கண்ணீர் விட்டுக் கதறி அழுது கொண்டிருப்பதையும் கண்டு வேதனையடைந்தார்.

யோகியார் தம் தவ வலிமையால் தம் உடலைப் பத்திரமாக ஓர் இடத்தில் வைத்தார். தம் உயிரை மூலனின் உடலுக்குள் புகுமாறு செய்தார்.



நம்பிரான் திருமூல நாயனார்
ஐப்பசி - அசுவதி (400 - 600)

பிணமாகக் கிடந்த மூலன் உயிர்பெற்று எழுந்தான். பசுக்கூட்டம் மகிழ்ந்தது. மூலனது உடலுள் இருந்த யோகியார் பசுக்களை வீடுகளுக்குக் கொண்டு சேர்த்தார். பின்னர் உடலைக் காணாது திகைத்தார்.

அவரது சிந்தையில் தெளிபிறந்தது. அங்கிருந்த அரசமரத்தின் கீழ் யோகத்தில் அமர்ந்தார். ஆண்டுக்கு ஒன்றாக மூவாயிரம் ஆண்டுகளில் திருமந்திரம் மூவாயிரம் பாடல்களையும் அருளினார். பின் கயிலை சென்றார். ஐப்பசி மாதம் அசுவனி நட்சத்திர நாளில் முக்திப்பேறு பெற்றார்.

## 5. தண்டியடிகள் நாயனார்



எம்பிரான் தண்டி அடிகள் நாயனார்
பங்குனி - சதயம் (400 - 600)

தண்டியடிகள் பிறவியிலேயே கண்பார்வை அற்றவராக இருந்தார். தன் அகக்கண்ணால் ஆரூர்ப் பெருமானைத் தரிசித்து மகிழ்வார்.

திருவாரூரில் உள்ள திருக்குளம் பாழ்பட்டுக் கிடந்தது. அதனைச் சீர் செய்யும் பணியை மேற்கொண்டார். சமணர்கள் அவரது பணியைத் தடுக்க முயன்றனர். வருந்திய தண்டியடிகள்



# அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி

அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி சென்னைக்கு அருகிலுள்ள கூடுவாஞ்சேரி என்ற ஊரில் வரதப்ப முதலியார் - முருகம்மாள் (சின்னம்மாள்) தம்பதியருக்கு எட்டாவது குழந்தையாக 1911 ஆகஸ்ட் 14ஆம் நாள் பிறந்தார்.

இவருக்கு மூத்தவர்கள் 6 பெண் குழந்தைகளும், 1 ஆண் குழந்தையும். இந்த ஆண் குழந்தை இறந்து பல காலம் கழிந்து பெற்றோர் பல கோவில்களுக்கு விரதமிருந்து 8வது குழந்தையாக மகரிஷி பிறந்தார்.

சிறுவயது முதலே வேதாத்திரி மகரிஷி அவரது தாயார் சின்னம்மாளிடம் நிறைய பக்தி கதைகளையும், புராணக் கதைகளையும் அறிந்து கொண்டார். அவரது பெற்றோர்கள் கொடுத்த ஊக்கத்தினால் அறிவின் முழுமையை அறியும் ஆசை அவருக்கு இயல்பாகவே ஏற்பட்டது.

இவரது குடும்பசூழல் காரணமாக அதிகம் படிக்க வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. தன்னுடைய சொந்த ஊரில் மூன்றாவது வகுப்பு வரை படித்த இவர், பின்னர் தங்கள் குடும்ப தொழிலான தறி நெசவுத் தொழிலை செய்யத் தொடங்கினார்.

18வது வயதில் சென்னையில் தனியார் நிறுவனம் ஒன்றில் பணியாற்றும் வாய்ப்பு இவருக்கு ஏற்பட்டது. சென்னையில் இவருக்கு ஆயுர்வேத மருத்துவர் எஸ். கிருஷ்ணாராவின் நட்பு கிடைக்க, அவர் மூலமாக தியானம், யோகாவையும் அதனைத் தொடர்ந்து சித்த, ஆயுர்வேத மற்றும் ஹோமியோபதி போன்ற மருத்துவ முறைகளையும் கற்றுத் தேர்ந்தார்.

இரண்டாவது உலகப் போரின் போது முதலுதவிப் பயிற்சியாளராகவும் பணிபுரிந்தார்.

பின்பு பொருளாதாரத் தன்னிறைவு பெற வேண்டும் என்று, தனது சுய முயற்சியினால் பல்லாயிரம் நபர்களுக்கு வேலை அளிக்கக்கூடிய அளவிற்கு ஒரு பெரிய நெசவுத் தொழிற்சாலையை உருவாக்கினார்.

தனது சகோதரியின் மகள் லோகாம்பாளை மணந்து இல்லற வாழ்க்கையைத் தொடங்கினார். இல்லறத்திலும், நெசவுத் தொழிலிலும் ஈடுபாடு அதிகமிருந்த போதிலும் ஆன்மீகத்தேடலில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார்.

சித்தர்களின் நூல்களைக் கற்று, தியானத்தில் வெகுவாக ஈடுபட்டு தன்னை அறிதல் என்ற அகத்தாய்வு முறையில் விடாமுயற்சியுடன் ஈடுபட்டார்.

இவரது ஆழ்ந்த ஆன்மீகத் தேடலின் விளைவாக தனது 35வது வயதில் ஞானம் பெற்றார். அதிலிருந்து அடுத்த 15 ஆண்டுகளில் பல உன்னதமான ஆன்மீகக் கருத்துக்களை தனது எழுத்துக்களின் மூலமாகவும், உரைகளின் மூலமாகவும் மக்களுக்கு எடுத்துரைத்தார். பின்னர் தனது நெசவு தொழிலை முற்றிலும் விட்டு விட்டு முழுமையாக ஆன்மீகத் துறையில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். இருப்பினும் குடும்ப உறவுகளை அவர் முறித்து கொள்ளவில்லை.

வேதாத்ரி மகரிஷி அவர்கள் வள்ளலார் அவர்களின் கொள்கைகளை பின்பற்றினார்.





குன்ற மாலை - சந்திர வாணன் கோவை போன்ற இலக்கியத்தை படைத்த அந்தகக்கவி வீரராகவ முதலியார் அவர்களை ஏடாயிரங்கோடி எழுதாது தன்மனத் தெழுதிப் படித்த விரகர் என்று புகழ்வார்கள்.

தன்மை நிலையிலிருந்து நீங்காதது உயிர் குணம். அதனிலும் மேம்பட்டு பெருந்தன்மை நிலையில் செயல்படுகிற மனித குணம் தான் மானுடத்தின் விதை. அதை அனுமன் - ராமன் உறவு வழியே மானுடம் வென்றதம்மா என கம்பன் கொண்டாடினார். அப்பேறபட்ட கம்பரைக் கொண்டாட கழகம் கண்டவர் ரசிகமணி டி.கே.சிதம்பரநாத முதலியார் அவர்கள். கடித இலக்கியத்தின் முதல் அடையாளமும் ஆவார்.




இன்று வாழ்பவர் நினைவில் நீங்காது புன்னகை அருள்தரும் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் ஆன்மீகத்தை இலக்கியத்திற்குள் கொண்டு வந்த பேரருளாளர். தமிழ்க்கடவுளை முருகா முருகா என்று அவர் மேடை தோறும் உருகும்போது தமிழும் அழகும் கலையும் அறிவும் ஒருமித்து ஆனந்த முகத்தில் அருள்பொழியும். கவியும் கதையும் புராணமும் தெய்வமும் வாரியார் சுவாமிகள் பேசும்போது பழங்கால இலக்கியம் தமிழையே கூட தெய்வமாகக் கருத்தில் கொண்டிருந்தது புரியும்.



பல்லாயிரமாண்டு பழமைகொண்ட நமது தமிழ் மொழியின் விழுதுத் தொடர்ச்சி கலை இலக்கியமாகவும் தொடர்ந்து கிளை பரப்பி அதுவே ஒரு தனிமரமாக உருவெடுத்த சாதனையை நிரூபித்தவர். அறிஞர் என்று எழுத்தாளர் மாநாட்டில் கல்கியால் பட்டம் பெற்றவர். காஞ்சிபுரம் சி.என்.அண்ணாத்துரை அவர்கள். அவரின் சிவாஜி கண்ட இந்து ராஜ்யம் நாடகத்தின் மூலம்தான் ஒரு கணேசன் என்ற சிவாஜி கிடைத்தார். சிந்து சமவெளி நாகரிகம் கண்ட தமிழ்க்கிளைகளாலான திராவிட மொழியாக தமிழ்ச் செம்மொழியை பக்குவமாக நெசவு செய்தவர்கள் பேரறிஞர் அண்ணாவும், பாவேந்தர் பாரதிதாசன் அவர்களும்.



பாரதமாதாவின் பிள்ளைகளாக இந்திய தேசத்தை கனவு கண்ட தீர்க்கதரிசி மகாகவி பாரதியார். அந்தக் காலக்கட்டத்தில் பாரதியின் வழித்தோன்றலாக முகிழ்த்தவர் பாரதிதாசன் என்ற கனகசுப்புரத்தினம் அவர்கள். பிரெஞ்சுப் புரட்சியின்போது ஒவ்வொரு கவிஞனும் புரட்சியாளனாக இருந்தான். ஒவ்வொரு புரட்சியாளனும் கவிஞனாக இருந்தான் என்று சொல்வார்கள். அந்தவிதமான புரட்சிக் கனலை ஊட்டி அக்கினிக் குஞ்சுகளாக சுதந்திர யுத்தத்தை முன்னெடுத்தவர் பாவேந்தர். அவரின் வழிமொழியாக திருக்குறளையே புதுக்கவிதையில் சொன்னவர் ஈரோடு தமிழன்பன் அவர்கள்.

கதை நாடகம் கூத்து பார்க்க கூட்டம் கூடிவந்த ஆதி ரசிகர்கள் - நடிப்புக் கலைஞர்கள் பொம்மைகளாகி திரையில் தெரிவதைக் காசு கொடுத்து பார்க்க விரும்பினர். சினிமா என்ற திரைப்படம் இந்தியாவில் நுழைந்தபோது தென்னிந்தியாவில் முதல் மௌனப் படமான கீசக வதம் தயாரிக்கப்பட்டது. 1917இல் வெளியான பிறகு 1918இல் திரௌபதி வாத்ரஹரணம், 1919இல் லவகுசா, 1922இல் மாகி ராவணா, ருக்மணி, சத்யபாமா என வரிசையாக சினிமாவை வேரூன்றச் செய்தவர் ஆர்.நடராஜ முதலியார் அவர்கள், எஸ்.எம்.தர்மலிங்கம் அவர்களும் அவருடன் இணைந்து பணியாற்றியவர்.

சேலத்தில் ஸ்டூடியோ அமைத்து சினிமா நிறைய தொழிலாளர்களாக பரவ வகை செய்தவர் மாடர்ன் தியேட்டர்ஸ் திரு.டி.ஆர்.சுந்தரம் அவர்கள். அலிபாபாவும் 40 திருடர்களும் என்ற முதல் முழு நீள வண்ணப்படம் தந்தவர். உண்மையும் உழைப்பும் இருந்தால் இந்த சினிமா திறமைக்கேற்ற

## செங்குந்தர் விஜயாலயச் சோழ சக்ரவர்த்தியிடம் விருது பெற்ற விருத்தம்

வேங்கை நகமோடு வரும் எஜமகாசூரனை
வெட்டிக்கிளித்த பெரியோர் !
விழிகள் பிதுங்கவே வேலாயுதம் கொண்டு
வெஞ்சமர் கண்ட பெரியோர் !
வீராதி வீரனாம் விஜயாலயச் சோழன்
வெகுமதிகள் பெற்ற பெரியோர் !
வெஞ்சாமரை குடை விருப்பமில்லாமலே
விருதுகளை பெற்ற பெரியோர் !
சரித்திரப்புகழ் பெற்ற சோழ சாம்ராஜ்யம்
செங்குந்த ராஜ்யமாக
கள்ளர்கள், பேயர்கள், கசடர்கள் யாவரும்
மிஞ்சாமலே கழுவிலேற்றி
அஞ்சாமலே சோழ சிம்மாசனம் காத்த
ஆண்மை மிகு செங்குந்தமே !

## செங்குந்தர் விருத்தம்

நாரதர் முதலான தேவர்கள் சூரனால்
நருக்கமுற்றே மிருக்க அப்போ...
நலமான தேவேந்திரன் சீர்காழி தன்னிலே
நவகோண மூங்கிலாகி!
பூரணன் ஆகிய பூவுலக நாதனை போற்றி புகழ்ந்து நிற்க!
புண்ணிய முருகனும் அறுமாமுகவனும்
புன்முறுவல் கொண்டிருக்க!
பேரால் ஓராயிரம் தேவனை தேவர்கள் பேணிப் பணிந்து நிற்க!
பிரியமுடன் உங்களை பாதுகாப்பேன் என்று
பெருமான் மகிழ்ந்துரைக்க! அதுகாரணமாகவே
உகைபழ அளர்ந்துமே - கைலாச நாதர் வரவே!
இதைக்கண்டுதான் உமையவள் சிங்காசனம் விட்டு
கல் றென்றே குதிக்கவே!
அந்தவராணி பாதச்சிலம் பிலே
ஒன்பது மங்கையர் தோன்றி நிற்க!
அந்த மங்கையர் முன்செல்ல மகாதேவர் கண்டு
மனமகிழ்ந்து மோகிக்க!
பூரணி வாக்குனால் முப்பதாண்டு காலம்
பரிபூரணக் கெர்ப்பமாகி - பூவுலகில்
மாங்கல்ய நோம்பு விரத்தில் வரிர் பூர் வரும் வீரர்தம்மை !
தீரெனப் போர் செய்து சூரனை வென்றுமே
சேயரே வாருமென்ன!
சிவசுப்ர மண்யனும் தம்பி நவவீரரும்
தெண்டனிட்டேகினார்கள்!
பாரெனப் போர்செய்து சூரனை வென்றுமே
பரமனார் பாதம் போற்றி!
பாசமுடன் காமாட்சி பாதத்தில் வாழ்கின்ற
பரிவுள்ள செங்குந்தமே!

## சேவல் கொடி விருதுபெற்ற செங்குந்தர் விருத்தம்

அவனியில் பெரியதேவர் அவதார புருஷனாய்
அவதரித்திட்ட குந்தம்!
ஆறுமுகசாமியின் போருக்குத்துணை நின்று
அசுரனை வென்ற குந்தம்!
அன்னை காமாட்சியின் அக்னிப் பாதத்தில்
அன்பாய் பிறந்த குந்தம்!
அகலயிரும் ஏரியில் அரக்கனின் கம்பத்தை
அதிரடச் சாய்த்த குந்தம்!
பைந்தமிழ் கவிஞர்க்கு மைந்தனை அறுத்துமே
பார்புகழ் பெற்ற குந்தம்!
நெய்தொழில் செய்வதே நிகரற்ற தொழிலென்ற
நெறிதனைக் கற்ற குந்தம்!
சந்திர முடிகொண்ட மந்திரன் மைந்தனை
தமயனாய் பெற்ற குந்தம்!
சுந்தரன் கோவிலில் சிலிர்த்திடும் வெண்சேவல்
கொடிவிருது பெற்ற குந்தம்!
இந்திரன் முதலாய தேவர்கள் விலங்கினை
ஒழித்துயர் பெற்ற குந்தம்!
இமயப்புகழ் ஒட்டக்கூத்தனை உலகிற்கு
ஈந்திட்ட செங்குந்தமே!

## காமாட்சி அன்னையின் பாதத்திலே உதித்தவர் செங்குந்தர் என்பதை விளக்கும் விருத்தம்

அந்தமுள்ள காஞ்சி நகர் அம்மனுட பாதச்சிலம்பிலே...
சிதறிப் பிறந்த செங்குந்தர்!
ஆதிமுதலாகவும் சைவநெறி தழைக்கவும்
அறநெறி விளக்க வந்த செங்குந்தர்!
சந்திரமுடிச் சங்கரர் மகாதேவனைத் தழுவியே
அரிய வரங்களைப் பெற்ற செங்குந்தர்!
இமையோர்கள் பாவமும், கவலையும் தீரவே
சூரனை எங்கே எங்கே என்றெதிர்த்த செங்குந்தர்!
இந்திரகிரி சந்திரகிரி மந்திரகிரி - இப்படி
பலகிரிகளைப் படைத்த செங்குந்தர்!
சொல்லால் உயர்ந்தவன் பதினெட்டுப்பாவும், ஆடையும்
தொல் உலகினுக்கீந்த செங்குந்தர்!
துன்மதா இலட்சண சிம்மாதனத்துக்குரியவர்
தூயவன் செங்குந்தரே!
தீர்க்காயுளைப் பெற்ற மார்க்கண்டனைப் போலே
செழித்துவளர் செங்குந்தமே!





# செங்குந்தர் திருமணத்தில் புலிப்பல் தாலி

மிகப் பழமையான சமூகங்களில் ஒன்று முதலியார் சமூகம். கவுண்டர், பிள்ளை, முதலியார் ஆகிய சமூகங்கள் வேளாளர் என்கிற ஒரே வேரில் தோன்றி, இன்று வேறு வேறு கிளைகளாக வளர்ந்து, பூத்து குலுங்கி வாழ்கிறார்கள். சங்க காலத்தில் விவசாயத்தை பிரதானமாக கொண்டு மருத நிலத்தை ஆண்டவர்களே பிற்பாடு தொழில், கலாசார மாற்றங்கள், தாங்கள் வாழ்ந்த மண்டலங்களின் தன்மைகள் உள்ளிட்ட பல்வேறு காரணங்களால் ஏகப்பட்ட சாதிகளாக பிரிந்தார்கள். பரவலாக தென்னிந்தியாவில் வசிக்கக்கூடிய வேளாள சமூகம், சரித்திரக் காலத்திலேயே ஈழம் வரை தன் எல்லையை விரித்துக் கொண்டது.

கரிகால சோழன் தமிழ் மண்ணை ஆண்ட போது நிர்வாக வசதிக்காக தொண்டைமண்டலத்தை இருபத்து நான்கு கோட்டங்களாக பிரித்தார். ஒவ்வொரு கோட்டத்தின் முதல் மனிதராக (மேயர் மாதிரி வைத்துக் கொள்ளுங்களேன்) அங்கிருந்த வேளாண் சமூகத்தை சார்ந்த ஒரு பெரும்புள்ளியை நியமித்தார். அந்த முதல் மனிதரையே மக்கள் 'முதலி' என்று அழைத்து அதுவே அவர்கள் சார்ந்த சமூகத்தின் பெயராக விளங்கிவிட்டது. இன்று தேவர் சமூகத்தின் ஓர் அங்கமாக இருக்கும் அகமுடையாரும் முதலிகளாக இருந்ததுண்டு.

நாஞ்சில் முதலி, செங்குந்தர், சைவ வேளாளர், இலங்கை முதலியார், இசை வேளாளர், அகமுடையார், கேரள முதலி உள்ளிட்ட சமூகங்கள் இன்று 'முதலி' என்கிற பெயரை தங்களோடு சேர்த்துக் கொள்கிறார்கள். இவர்களில் கண்டிப்பான சைவ உணவுப்பழக்கம் கொண்டவர்களும் உண்டு. தஞ்சாவூர், கும்பகோணம் பகுதிகளில் வசிக்கக்கூடிய கார்காத்தபிள்ளை சமூகத்தினரை பிராமணர்கள் என்றே கருதக்கூடிய அளவுக்கு உணவுப் பழக்கத்திலும் மற்ற நடவடிக்கைகளும் அமைந்திருக்கின்றன.

பொதுவாக இன்று முதலியார் என்று அறியப்படுபவர்கள் வேளாளர், இலங்கை முதலியார், கட்டி முதலியார், கொண்டைகட்டி வேளாளர், கைக்கோளர், செங்குந்தர், ஆற்காடு துளுவ வேளாளர் உள்ளிட்ட உட்பிரிவுகளாக இருக்கிறார்கள்.

பிரதேச ரீதியாக, உணவுப் பழக்க வழக்க ரீதியாக இவர்கள் வேறு வேறு பெயர்களில் பிரிந்திருந்தாலும் திருமண முறை பொதுவாக ஒரே மாதிரியாகதான் இருக்கிறது (ஒவ்வொரு பிரிவுக்கும் ஓரிரு சிறு சிறு மாற்றங்கள் இருக்கலாம்.)

மற்ற தமிழ் சமூக வழக்கம் போலவே ஜாதகம், கோத்ரம் உள்ளிட்ட பொருத்தங்கள் பார்த்த பிறகு நிச்சய தார்த்தம் நடக்கிறது.

திருமணத்துக்கு நாள் குறிக்கும் லக்னப் பத்திரிகை எழுதப்பட்டு உற்றார், உறவினர் முன்பாக வாசிக்கப்படும். அந்தப் பத்திரிகையை பெண் வீட்டார், தாம்பூலத் தட்டில் வைத்து பிள்ளை வீட்டாரிடம் கொடுக்கிறார்கள். அதை வாங்கி வாசித்து அதில் ஒப்புதல் தெரிவித்து கையெழுத்திடுகிறார்கள் பிள்ளை வீட்டை சேர்ந்தவர்கள்.

தாம்பூலம் மாற்றிக் கொள்ளும் இந்த நிகழ்வில் இரு குடும்பங்களை பற்றிய விவரங்கள் (சீர் செனத்தி, சொத்து பத்து உள்ளிட்டவை) பொதுவில் தெரிவிக்கப் படுகின்றன. மணமகன் சார்பாக பெண் வீட்டுக்கு இருபத்தோரு தட்டுகளில் சீர் வைக்கப்படும். இதில் அவரவர் வசதிக்கேற்ப புடவை, நகை உள்ளிட்டவை இருக்கும். விருந்தோடு நிச்சயத் தாம்பூலம் நிறைவு பெறும்.

முகூர்த்த நாளுக்கு ஒரு வாரம் முன்பாக பந்தக்கால் நிகழ்ச்சி. நான்கு கால்கள் கொண்ட பந்தல் மணமகன் மற்றும் மணமகள் வீட்டில் தனித்தனியாக நடப்படும். கணபதி பூஜையைத் தொடர்ந்தே பந்தலுக்கு கால் நடுவார்கள். நடப்பட்ட கால்களுக்கு வயதில் மூத்த சுமங்கலிகள் ஒற்றைப்படை எண் வரும் வகையில் மஞ்சள் மற்றும் குங்குமப்பொட்டு வைப்பார்கள்.



+91 73395 31335
sales@goodwaytechsol.com
www.gudbiz.in
1-B, Kurinji Nagar Extn.
Sheriff Colony, Tirupur-641604.



BUSINESS PERFORMANCE AUTOMATION

SURESH KUMAR

GudBiz A mobile & web based SaaS system to automate the business processes and transform performance of the organization.

Distributed companies are growing rapidly. They have products customers, distributors and workforce spread across different locations, cities, states and countries. Monitoring and Managing the in-house and on-field stakeholders need to be handled strategically.

GudBiz updates all on-field activities to the management dynamically. It facilitates, forecasting, fine tuning of the Products, Processes, Workforce & Customers. GudBiz gives the business insights to get an edge over the competition.

## Return on Investment

**Average Breakeven from 4th Month Onwards**




Example : 100 user

Our Client











Know your Business Insights. Get an Edge"






Gudbiz will improve efficiency & productivity

- Opportunities
- Support Desk
- E-pettyacash
- Primary & Secondary Sales Management
- Collection Management
- Time Sheet
- Order Fullfillment
- Inventory Management
- Conveyance Calculator
- Trip Planner
- HR Performance
- Remote Attendance
- Group Attendance
- Leave Management
- Enterprise Mobility Management
- Geo Mapping & Fencing .
- Distribution Management.
- Performance Management

www.gudbiz.in

Use Referral Code #BNIDYNAMIC7AM#



திருப்பூரில் 1934ஆம் ஆண்டு மே மாதம் 20ஆம் நாள் கோவை ஜில்லா செங்குந்தர் மாநாட்டில்
தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோர் முதன்முதலாக சந்தித்த சந்திப்பினை நினைவு
கூறும் வகையில் அமைக்கப்பட்ட முழு உருவச் சிலைகள்
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
19வது மாநில மாநாடு - 31 ஜனவரி 2016
282

கல்வியில் இலங்கை முழுவதும் இவ்வூர் முன்னேறிச் செல்லுகிறது. இங்குள்ள ஒவ்வொரு வீட்டிலும் மாதச் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தர் ஒருவருக்கு மேலே இருக்கிறார்கள். இவர்களுடைய முற்காலத் தொழில் நெசவு. இப்போது நெசவுத் தொழில் இவ்விடத்தைவிட்டு ஒழிந்து போயிற்று. சுதேச வைத்தியர் பலர் இங்கே உள்ளனர். பலர் அரசினர் சேவையிலிருக்கிறார்கள். வியாபாரிகள் பலர், செல்வத்தில் உள்ளனர். இவர்கள் உச்ச நிலையில் இல்லாவிடினும், வறுமைப்படுவார் இங்கே இல்லை.

அண்மையில் தாய் நாட்டுச் செங்குந்த இளைஞர் பலர் இவ்வூரில் பெண் கொண்டிருக்கிறார்கள். இவ்விடத்து இளைஞர்கள் மிக முற்போக்குடையவர்கள். இவர் ஒற்றுமையும், கல்வியும் முன்னேற்றமும், குறிக்கோளாக வைத்து உழைக்கின்றார்கள் உத்தியோகம் கிடைக்கும் வரையிலும் ஆணும், பெண்ணும் படிக்கிறார்கள். மனைவியான பின்பும் பெண்கள் பரீட்சை எழுதுகிறார்கள். சமீபத்திலே காலஞ்சென்ற குமார் முதலியார் என்பவர் வைத்தியராய் விளங்கினார். இவர் ஒரு கவிஞர், பிராகிருதம், தமிழ் என்னும் இரு மொழிகளையும் நன்றாய் இலக்கண வரம்புறக் கற்றபுலவர். 'கந்தப்ப முதலியார்' ஆங்கிலமும் தமிழும் படித்த ஒரு சோதிடர். விகடவுரையார். இவர் தம்முடைய காலத்தில் மிகச் சன்மானிக்கப்பட்டவர்.

### 5. ஆரையம்பதி

இவ்வூர் ஆரப்பற்றை என்றும் அழைக்கப்படும். மட்டக்களப்பு நகரிலிருந்து 3 கல் தொலைவில் உள்ளது. 19-ம் நூற்றாண்டில் இப்பகுதியில் செங்குந்தர் செல்வாக்கு அதிகமாயிருந்தது. நாகப்ப முதலியார் என்னும் கனவான் இந்தியாவுக்குச் சென்று வியாபாரம் செய்து வந்தார். ஆரப்பற்றையில் முருகப் பெருமானுக்கு ஓர் ஆலயம் உருவாக்கினார். காஞ்சிபுரத்திலிருந்து பெருமான் சிலையை வடித்துக் கொண்டு வந்தார். இச்சிலை முதன்முதல் இறக்கப்பட்ட இடம் காங்கேயனோடை எனப் பெயர் பெறும். இக்கோயில் இன்று வேறு பகுதியாரிடம் கைமாறியிருக்கிறது. திருநீலகண்ட வினாயகராலயம் நடத்தப்பட்டு வருகிறது. சோதிடத்திலும், வைத்தியத்திலும் இவர்கள் பரம்பரையான திறமை படைத்தவர்கள். இன்றும் இவர்களால் ஆலய உற்சவங்களில் புராணம் படித்தல் நடைபெற்று வருகின்றது.

### 6. கல்லாறு

இவ்வூர் மட்டக்களப்பு நகரின் தெற்கே 20 கல் தொலைவில் உள்ளது. போத்துக்கீசியர் இலங்கையை ஆண்ட நாட்களில் கிழக்கு இலங்கையின் துறைமுகமாகவும், தலைநகரமாகவும் விளங்கியது. செங்குந்தர்கள் முதன்முதலாக இவ்விடத்திலேதான் குடியிருந்தனர் என்றும் பின்புதான் ஆரப்பற்றை, தாமரைக்கேணி எனும் இடங்கட்குச் சென்றார்கள் என்றும் எண்ணக்கூடிய சான்றுகள் இங்குள்ளன.

செங்குந்தர்கள் எல்லோரும் சிவநேசச் செல்வர்களாயிருந்த போதிலும் மிகச் சொற்பத் தொகையினர் கிறிஸ்துவர்களாயிருக்கின்றனர். அவர்களை மற்றவர்கள் ஒதுக்கிவிடுவதில்லை. மேலும் புத்த மதம் தழுவிய ஒருசிலரும் இவர்களிடையே இருக்கின்றார்.

### பிற இடங்களில் செங்குந்தர்

இலங்கையின் உள்நாட்டில் கண்டி முதலிய இடங்களிலும், சில தோட்டங்களிலும் செங்குந்தர் சிலர் இடையிடையே பல வருடங்களாய் வசித்து வருகின்றனர். இவர்கள் பல தொழில்களிலும் சம்பந்தப்பட்டிருக்கின்றனர். இவர்களுக்கும் முன்னே சொல்லப்பட்டவர்களுக்குமிடையே தொடர்பு மிகக் குறைவு. காரணம் இவர்கள் இலைமறை காய்போல இருப்பதேயாகும்.

கொழும்பு, யாழ்ப்பாணம், கண்டி, மட்டக்களப்பு, முதலிய பெருநகரங்களில் வியாபார நோக்கமாக வந்த செங்குந்தச் செல்வர்கள் வசித்து வருகின்றனர்.

கொழும்பிலுள்ள, கதிர்வேலாயுத சுவாமி கோயில் இவர்களாலேயே நடத்தப்பட்டு வருகிறது. வியாபார நோக்கமாக வந்தாலும் புதியர்களைத் தம் சாதியார் என அறிந்தவுடன் இங்குள்ளவர்கள் அவர்களுக்கு வேண்டிய உபகரணங்களைச் செய்து பெரு மகிழ்வுடன் வரவேற்பார்கள். சமூகத்தவர்களை உபசரிப்பதில் இலங்கைச் செங்குந்தர்களே முதன்மையானவர்கள். இலங்கையரின் வள்ளன்மைக் குணம் தாய் நாட்டிலிருந்துதான் வந்ததென்றும் இது செங்குந்தரிடையே இயல்பாக உள்ளது. இது தேச மாற்றத்தால் உண்டானதல்ல என்பதை அறிவோம்.

**பண்டிதர் ஆ.சபாபதி முதலியார், இலங்கை**
**(தெ.செ.ம.சங்க வெள்ளி விழா மலர் -1952)**











மாநாடு சிறக்க வாழ்த்தும்

திருப்பூர் தாலுக்கா

தென்னிந்திய

செங்குந்த மகாஜன சங்கம்

நாள் : 31-01-2016 ஞாயிறு இடம் : சேலம்








T.A துரைசாமி

மா.செல்வராஜ்

P.சத்தியமூர்த்தி

T.R.ராஜேந்திரன்






K.P.N.முத்துவேலாயுதம்

எம். மாரிமுத்து

தியாகச்சுடர் கார்த்தி

செ.தீபக்ராஜ்

மாநிலத் தலைவர்

K.P.K.செல்வராஜ்

தியாகச்சுடர் ஜமீன்தார்

M.A.குப்புசாமி முதலியார்

செங்குந்த சொந்தங்கள் அனைவரையும்

வருக! வருக!! என வரவேற்கிறோம்.

உயரத்தைத் தரும் என்று தன் மகனுக்கும் ஈடுபாட்டை ஏற்படுத்தியவர் சுந்தரம் அவர்கள். பல நாட்டு சினிமா நுட்பங்களும் ஏற்பட வழி செய்தார்.

பாரதி பாடல்கள் சினிமாவில் இடம்பெற்றதைத் தொடர்ந்து பாரதிதாசனும் பாட்டெழுதத் துணிந்தார். அறிவுக்கோயில் கட்டி அதில் நம்மைக் குடியேற்ற விரும்புவதால் பாவேந்தர் பேரறிஞர் என்று புதுமைப்பித்தன் புகழ்ந்துரைத்தார். இணையில்லை முப்பாலுக்கு இந்நிலத்தே என்பது பாவேந்தரின் அடிநாதம். பாரதியின் குயில்பாட்டு போன்று இவரும் ஒரு பாட்டு தந்துள்ளார்.





ஒருவரை ஒருவர் சார்ந்துகொண்டு குடும்பத்திலும் குடும்பமாக கூட்டுசேர்ந்து இயங்கும் நெசவுத்தொழிலில் குடிசையின் குடிசை வீட்டில் பிறந்தவர் அண்ணா அவர்கள். தமிழ்மொழி தமிழ் நிலம் சார்ந்த உரிமைப் போராட்டக்களமாகக் கொண்டு தமிழகத்தை சுயம்பெறச் செய்த பெருந்தகையின் வெற்றி தமிழ்க்கலை இலக்கியத்தின் வெற்றி. இயக்கம் சார்ந்த விழிப்புணர்வும் வாழ்வு சார்ந்த கொள்கைச் சிந்தனையும் அண்ணாவின் வாழ்வால் தமிழர் அடைந்த விடுதலை என்றால் மறுப்பார் இலர். வேலைக்காரி திரைப்படம் துவங்கி சமூக சினிமா தமிழில் புறப்பட்டு பயணிக்கிறது.

நடிகர் திலகம் சிவாஜிகணேசன் அவர்களை அறிமுகம் செய்துவைத்த பராசக்தி பெருமாள் முதலியார் தொடங்கி எம்.ஜி.ஆர்., சிவாஜி, ஜெய்சங்கர், ரஜினிகாந்த், கமலஹாசன், விஜயகாந்த் போன்ற முன்னணி நடிகர்களை வைத்து வெற்றிப்படங்களை இயக்கிய ஏ.ஜெகன்னாதன் அவர்கள், சமூகப் பிரச்சனைகளை முன்னிறுத்தி சவாலான சினிமாக்களைத் தந்த ஆர்.கே.செல்வமணி அவர்கள், முத்தமிழ் வித்தகராம் கலைஞரிடம் மோதிரக்குட்டு வாங்கிய கவிஞர் பா.விஜய், கவிஞர் நா.முத்துக்குமார் அவர்கள் என இன்னும் வெளிச்சம் பரவாத நிறைய கலைஞர்களும் படைப்பாளிகளும் தொடர்ந்து கலை இலக்கியத்தில் தங்கள் பங்களிப்பைச் செய்து வருகிறார்கள்.

நமது தமிழ் முன்னோர்கள் நமக்கும் வாய்ப்பு ஏற்படுத்தித் தந்துள்ள பாங்கை மதித்து அவர்களின் சிந்தனை நெறியை மேற்கொண்டு அவர்களை மறவாது போற்றுவதுதான் அவர்களுக்கு நாம் செய்யும் கண்ணியமான வணக்கம்.

ஊழித் தாண்டவம் புரிந்த தில்லை நடராஜருக்கு கூத்தர் என்று பேர் வந்ததால் ஒட்டக்கூத்தர் கூத்தர் பேர் பெற்றிருப்பார். கர்நாடக மாநிலத்தில் வாழ்ந்துவரும் நெசவாளர் கொம்பாடிப்பட்டி ராஜூ பரம்பரையாக கூத்துக் கட்டி ஆடி வருவதால் இன்றும் கூத்துக் கலையின் முன்னோடியாக வெளித்தெரியாமல் அந்தக் கலையை நிகழ் கலையாக்கி வருகிறார்.



இதுபோன்று இன்னும் நமது சமுதாயக் கலைஞர்கள் கடினம் உழைத்துச் சலித்து கட்டாயமாகக் கலை இலக்கியத்தை ஏற்றுக் கொண்டு சிரமம் பாராது தொண்டாற்றி வருகிறார்கள். அவர்கள் அனைவருமே யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பரந்த நோக்குடையவர்கள் எனப் புரிந்து கொள்ளலாம். இன்றைய காலச் சூழ்நிலை கருதி அப்படியான கலை இலக்கியவாதிகளுக்கு அன்பும் ஆதரவும் என்றும் உரித்தாகுக.



கட்டுரையாளர்:
**சிவா. அ.**
தென்காசி - 627 811.



# Nakshatra

By








For Trade Enquiries - 0421 - 2262180, 2262380, 99522 44255
e-mail : info@nationalweaves.com.
www.nationalweaves.com




# SpringS®

## Elite

MATTRESSES | PILLOWS | CUSHIONS | ACCESSORIES

CERTIFICATE OF APPRECIATION




ISO:9001-2008
CERTIFIED COMPANY

www.springsmattress.in

**SPRINGS ELITE (FACTORY OUTLET)**

51, Muthusamy Street (Gajalakshmi Theatre Road), Near Lotus Eye Hospital,
Tirupur - 641 604. Ph: 0421 4977695 / Mob: 98428 75695
Email: springselitetirupur@gmail.com





அவைகளில் முக்கியமானது அன்பு, கருணை ஆகியவை.

1958 ஆம் ஆண்டில் வேதாத்ரி மகரிஷி அவர்கள் உலக சமுதாய சேவை மையம் என்ற அமைப்பை நிறுவினார். இது இலாப நோக்கமற்ற அமைப்பு. 200க்கும் மேற்பட்ட அறக்கட்டளைகள் மற்றும் 1000 தியான மையங்கள் இந்த மையத்தின் கீழ் இயங்குகின்றன.

வேதாத்ரி மகரிஷி அவர்கள் பொள்ளாச்சிக்கு அருகிலுள்ள ஆழியாற்றில், 1984 ஆம் ஆண்டில் வேதாத்ரி யோகா மற்றும் காய கல்ப ஆராய்ச்சி அறக்கட்டளை என்ற அமைப்பை நிறுவினார்.

## வேதாத்திரியம்

தத்துவம், விஞ்ஞானம், இலக்கியம் என்ற மூன்று துறைகளும் வளர்ந்து வரும் ஒரு சமுதாயத்தின் அந்தந்த காலகட்டத்தின் வெளிப்பாடுகளாகும். இந்த மூன்று துறைகளின் உயர்வும் சிறப்பும் அந்தந்த காலகட்டத்தில் சமுதாயம் அடைந்த உயர்வின் அடையாளங்களாகும்.

நமது நாட்டில் நாம் காண்பது. சைவ வேதாந்தம், வைஷ்ணவ வேதாந்தம், சித்தாந்தம், சைவ சித்தாந்தம், ஜைனம், புத்தம், சன்மார்க்கம், வேதாத்திரியம் எனப் பலப்பல தத்துவப் பாதைகளை நாம் இன்று காண்கிறோம். உயிர் என்பது என்ன? ஆத்மா என்றால் என்ன? மரணம் என்றால் என்ன? மரணத்திற்குப் பின் என்ன? என்பன போன்ற கேள்விகளுக்கு ஒவ்வொரு தத்துவமும் ஒரு விடையைத் தருகிறது. மக்கள் எதை ஏற்பது, எதைத் தள்ளுவது என்று தெரியாமல் குழம்பிப் போயிருக்கிறார்கள். இந்தக் குழப்பத்தால் ஒவ்வொரு வீட்டிலும் தத்துவப் புத்தகங்கள் 'தலையணைகளாக' மாறிவிட்டன. குழப்பங்கள் தீர்ந்து எல்லாத் தத்துவ மார்க்கங்களின் சாரத்தைப் புரிந்து கொள்ளக்கூடிய, வல்லமையைத் தருகிற ஒரு மார்கமே 'வேதாத்திரியம்' என்பது.

இது என் அனுபவத்தில் யான் கண்ட உண்மையாகும். தர்க்கமும் (Logic) விஞ்ஞானப் பார்வையும் வேதாத்திரியத்தில் மேலோங்கி நிற்பதே அதன் வல்லமைக்கு முக்கிய காரணம்.

முந்தைய தத்துவங்களை உள்ளடக்கி, அவைகளிடமிருந்து வேறுபட்டு ஒரு புதிய தத்துவத்தை உருவாக்குவது அவ்வளவு எளிதல்ல. புதிய தத்துவத்தை உருவாக்குகிற பாக்கியமும் பக்குவமும் ஒரு சிலருக்குத்தான் அமையப்பெறுகிறது.

வேதாந்த தத்துவத்திலிருந்து முதன் முதலாக மாறுபட்டவர்... மஹாவீரர்.

சைவசித்தாந்தத்திலிருந்து முதன்முதலாக அதன் எல்லைக்கு அப்பால் வந்து ஒரு புதிய தத்துவத்தை உருவாக்கியவர்... வள்ளலார்.

விவேகானந்தர் ஒரு சிறந்த வேதாந்தி. ஆனால், 'விவேகானந்தர் தத்துவம்' என்று ஒன்றுமில்லை. திருமூலர் ஒரு சிறந்த சைவசித்தாந்தி. ஆனால், 'திருமூலர் தத்துவம்' என்று ஒன்றுமில்லை. ஒரு புதிய தத்துவத்தை உருவாக்குகிற பெருமை ஒரு சிலருக்கே அமையப் பெறுகிறது. பிறப்பில் வேதாந்திகள் என்றாலும் மஹாவீரரும் புத்தரும் புதிய தத்துவங்களை உருவாக்கினார்கள்.

வள்ளலாரும் வேதாத்திரி மகரிஷியும் பிறப்பால் சைவ சித்தாந்திகள். ஆனால் இருவருமே புதிய தத்துவங்களை உருவாக்கினார்கள். முன்னவர் உருவாக்கியது 'சன்மார்க்கம்', இதற்கு வேதம் அகவல், பின்னவர் உருவாக்கியது 'சுத்தவெளித் தத்துவம்' இதற்கு வேதம் காந்தத் தத்துவம்.

"சுத்த சன்மார்க்கமிது ஒத்துதவி வாழும் தூயகாந்தத் தத்துவமே இதற்கு வேதமாகும்" என்பார் மகரிஷி.

மூன்றாவது வகுப்பு கூட முடிக்காம ஒரு கிராமத்து வாசி, சமஸ்கிருதம் படிக்க சந்தர்ப்பமில்லாத ஒரு குடும்பத் தலைவன், வேதம், சைவ சித்தாந்தக் கருத்துக்களை உள்ளடக்கியும் அவைகளைக் கடந்தும் செல்கிற ஒரு புதிய தத்துவத்தை தந்திருப்பது ஓர் அதிசயம் தான், ஆனாலும்... அது உண்மைதான். அந்த உண்மைதான் மகரிஷியை அவர் வாழ்ந்த நூற்றாண்டின் மகானாக்குகிறது.

வேதாத்ரி மகரிஷி அவர்கள் 28 மார்ச் 2006 அன்று தனது 95 வயதில் இயற்கை எய்தினார்.

வேதாத்ரி மகரிஷி உலகம் முழுவதும் 300க்கும் மேற்பட்ட யோகா மையங்கள் நிறுவினார். வேதாத்ரி மகரிஷி அவர்கள் 80 க்கும் மேலாக புத்தகங்கள் எழுதி உள்ளார். இவரின் எழுத்துகள் பல பள்ளி, கல்லூரி பாடப் புத்தகங்களில் இடம் பெற்றுள்ளது.

தவத்தில் நிலைத்து தன்னை உணர்ந்து ஓதாது உயர்ந்த தத்துவ ஞானி இவர்.




பிறகு நல்ல நேரம் பார்த்து முளைக்கட்டுதல். வேளாண்மை செய்யும் பரம்பரையில் வந்தவர்கள் என்பதால், இந்தச் சடங்குக்கு மிகுந்த முக்கியத்துவம் உண்டு. நவதானியங்களை (ஒன்பது தானியங்களை) அலங்கரிக்கப்பட்ட பானைகளில் விதைப்பார்கள். விதை முளைத்து இவை செழித்து வளருவதற்காக பாதுகாத்து வளர்ப்பார்கள். புதிய உறவு தோன்றுவதற்கான அடையாளமாக முளைக்கட்டுதல் சடங்கு நடக்கிறது.



பெண்ணுக்கு திருஷ்டி கழிக்கும் நலங்கும் பிரதானமான அம்சம். ஒரு பலகை. அதன் மேல் அரிசி மாவு கோலம். அதற்கு மேலாக பசுமையான நுனி வாழை இலை. அதில் அரிசியை பரப்பி அதன் மேல் மணமகள் அமருவார். மூன்று முக்காலிகளில் பூ, பழம், ஆரத்தி தட்டு, வெற்றிலை பாக்கு, பன்னீர் செம்பு, குங்குமம், சந்தனம் ஆகியவை இருக்கும். இருவீட்டு சுமங்கலி பெண்கள் கன்னத்தில் சந்தனம் தடவி, நெற்றியில் குங்குமம் வைத்து, பன்னீர் தெளித்து திருஷ்டி கழிப்பார்கள்.

திருமணத்துக்கு முந்தைய நாள் வழக்கமான 'ஜானவாசம்தான்'. மேளம் தாளம் முழங்க மாப்பிள்ளை ஜம்மென்று காரில் வந்து இறங்குவார். மணப்பெண்ணின் சகோதரர் அல்லது தாய்மாமன் மாலையிட்டு மாப்பிள்ளையை வரவேற்பார். ஆரத்தியோடு வரவேற்கப்படும் மணமகனுக்கும், மணமகளுக்கும் தனித் தனியாக மண்டபத்தில் நலங்கு வைக்கப்படும்.

திருமண மண்டபத்தில் கல்யாணப் பந்தல் மூங்கிலால் கட்டப்பட்டிருக்கும். தேங்காய் குலை, வாழைமரம் போன்றவற்றால் அது அலங்கரிக்கப்பட்டிருக்கும். பூ வேலைப்பாடுகள் தனி. முகூர்த்த நாளன்று சூரியன் உதிப்பதற்கு முன்பாகவே மணமகன், மணமகள் இருவரும் தனித்தனியாக இந்தப் பந்தலுக்கு அழைத்துவரப்பட்டு தலையில் நல்லெண்ணெயும், உடலில் மஞ்சளும் பூசப்படும் மங்களஸ்நானம் நிகழ்ச்சி நடைபெறும். இந்நிகழ்வின் போது அவர்கள் அணிந்திருந்த உடைகள், வண்ணார் சமூகத்துக்கு தானமாக அளிக்கப்பட வேண்டும்.



பண்டையக் காலத்தில் முதலியார் இல்லத் திருமணங்களுக்கு அரசர்கள் நேரில் வந்து அரசன் கால் நட்டு திருமணத்தை தொடங்கி வைப்பார்கள். அதன் தொடர்ச்சியாக அரசர்கள் இல்லையென்றாலும் இன்றும் அரசன் கால் வைபவம் நடக்கிறது.

இந்துக்களால் புனிதமாக கருதப்படும் அரசமரக்கிளை ஒன்று வைக்கப்பட்டு அதற்கு முன்பாக ஒரு மூங்கில் கழி நிறுத்தப்படுகிறது. அந்த கழியை பாலால் கழுவி மஞ்சள், குங்குமம் வைத்து பட்டுத்துணியால் அலங்கரித்து ஆரத்தி எடுக்கிறார்கள். மூங்கிலுக்கு நடைபெறும் இந்த மரியாதை, அந்த காலத்தில் அரசர்களுக்கு நடந்ததாம்.

மணமகன் தன் பெற்றோருக்கு பாதபூஜை நிகழ்த்தி வணங்கியபிறகு காசியாத்திரைக்கு கிளம்புவார். இந்து மதம், பிரம்மச்சாரியாக இருக்கும் இளைஞன் ஒருவன் இல்வாழ்வை தேர்ந்தெடுப்பதா, சன்னியாசத்தை தேர்ந்தெடுப்பதா என்கிற உரிமையை அவனுக்கு தருகிறது. திருமணம் வேண்டாம் என்று முடிவெடுக்கக் கூடிய இளைஞன் குடை, விசிறி, தடியோடு காசிக்கு கிளம்புவதாகவும், பெண்ணின் சகோதரனோ அல்லது தந்தையோ தன் பெண்ணின் சிறப்புகளை அவனுக்கு எடுத்துக்கூறி, "கல்யாணம் பண்ணிக்குங்க மாப்பிள்ளை" என்று மனதைமாற்றி திருமணத்துக்கு சம்மதிக்க வைக்கும் சடங்குதான் காசியாத்திரை.

அடுத்து மணமகள் மகாலட்சுமிக்கு பூஜை செய்து தன்னுடைய மாங்கல்ய பலத்தை உறுதி செய்கிறாள். பின்னர் பெற்றோருக்கு பாதபூஜை செய்து மணமகன் வீட்டார் பரிசளித்த பட்டுத்துணியை அணிந்து கல்யாணப் பந்தலுக்கு அழைத்துவரப் படுவார்.

இதற்கிடையே கணபதி ஹோமம் நடத்தி மணமகனுக்கு பூணூல் அணிவிப்பார் அய்யர்.

மாடர்ன் தியேட்டர்ஸ் லிமிடெட் (Modern Theatres Ltd) 1935ஆம் ஆண்டில் தமிழ்நாட்டின் சேலத்தில்திருச்செங்கோடு ராமலிங்கம் சுந்தரம் (டிஆர்எஸ்) துவக்கிய திரைப்படத் தயாரிப்பு நிறுவனம். தென் இந்தியாவில் முதன்முதலாக உருவாக்கப்பட்ட பெரிய திரைப்படக் கூடம் இதுவே. சென்னை போன்ற பெரிய நகரங்களை விட்டு முதன் முதலாக சேலம் போன்ற வெளி நகரம் ஒன்றில் மாடர்ன் தியேட்டர்ஸ் உருவாக்கப்பட்டது.



# மாடர்ன் தியேட்டர் சுந்தரம்

மாடர்ன் தியேட்டர்ஸ் திரைப்படக் கூடம் ஒரு காலத்தில் ஆண்டுக்கு மூன்று படங்களையாவது உருவாக்கிக் கொண்டிருந்தது. முதன் முதலாக தென் இந்தியாவில் வண்ணப்படத்தைத் தயாரித்த பெருமையும் மாடர்ன் தியேட்டருக்கு உண்டு. இந்த நிறுவனத்தின் தயாரிப்பு அரங்கில் 1982ஆம் ஆண்டுவரை 150க்கும் மேலான தமிழ், தெலுங்கு, மலையாளம், இந்தி, சிங்களம் மற்றும் ஆங்கிலத்திலும் திரைப்படங்கள் தயாரிக்கப் பட்டுள்ளன. இவற்றில் பெரும்பாலானவை தமிழ்த் திரைப்படங்களே.

மாடர்ன் தியேட்டர்ஸ் நிறுவனத்தின் அதிபரான டி.ஆர்.சுந்தரம், சேலம் மாவட்டம், திருச்செங்கோட்டில் 1907 சூலை 16 ஆம் தியதி பிறந்தார். இவருடைய தந்தை நூற்பாலைகளில் இருந்து நூலை வாங்கி மொத்தமாக வியாபாரம் செய்து வந்த வி.வி.சி. ராமலிங்க முதலியார் ஆவார். தாயார் பெயர் கணபதி அம்மாள். இவர்களுக்கு ஐந்தாவது மகனாக டி.ஆர்.சுந்தரம் பிறந்தார். தனது தொடக்கக் கல்வியை சேலத்தில் கற்ற சுந்தரம், சென்னை மாநிலக் கல்லூரியில் சேர்ந்து, "பி.ஏ" மற்றும் "பி.எஸ்.சி" பட்டங்கள் பெற்றார். அதன் பிறகு சுந்தரம் இங்கிலாந்து சென்றார். ஜவுளித் தொழிலில் உயர் கல்வி பயின்றார். நூல்களுக்கு வண்ணம் சேர்க்கும் தொழில் நுட்பத்தை கற்றறிந்தார். அங்கு படித்த போது லண்டனில் டி.ஆர்.சுந்தரத்துக்கும், 'கிளாடிஸ்' என்ற பெண்ணுக்கும் நட்பு ஏற்பட்டது. இருவரும் பதிவுத் திருமணம் செய்து கொண்டனர்.

ஜவுளித் தொழிலில் உயர் படிப்பு படித்திருந்த சுந்தரத்துக்கு திரைப்படத் துறை இவரது கவனத்தை ஈர்த்தது. இந்தத் துறையில் காலடி வைக்க ஒரு துணை வேண்டியிருந்தது. லண்டனில் இருந்து அவர் சேலம் திரும்பியபோது (1933) சேலத்தில் "ஏஞ்சல் பிலிம்ஸ்" என்ற நிறுவனம் திரைப்படத் தயாரிப்பில் ஈடுபட்டு வந்தது. திரைப்படத் தொழிலில் ஆர்வம் கொண்ட டி.ஆர்.சுந்தரம், ஏஞ்சல் பிலிம்ஸ் அதிபர்களான வேலாயுதம் பிள்ளை, சுப்பராய முதலியார் ஆகியோருடன் கூட்டு சேர்ந்து திரைப்படங்கள் தயாரித்தார்.

**குறிப்பிடத்தக்க ஆக்கங்கள்**

மாடர்ன் தியேட்டர்ஸ் தான் தமிழ் திரைப்பட நிறுவனங்களுள் முதன் முதலில் 1960 களிலேயே 100 படங்களுக்கு மேல் எடுத்த நிறுவனம் ஆகும்.

முதல் மலையாளப் படத்தை எடுத்த நிறுவனம்

முதல் சிங்களப் படத்தை எடுத்த நிறுவனம்

தமிழ் நாட்டில் முதல் ஆங்கிலப் படத்தை எடுத்த நிறுவனம்

1940இல் பி. யூ. சின்னப்பா நடித்த உத்தமப் புத்திரன் திரைப்படத்தில் முதன்முதலாக இரட்டை வேடம் அறிமுகமானது. அலெக்ஸாண்டர் டமாஸ்(Alexandre Dumas) என்பவரின் "The Man in the Iron Mask"ஐ தழுவி எடுக்கப்பட்டதே இத்திரைப்படமாகும்.

"உடைபெயர்த் துடுத்தல்" என்றது தொல்காப்பியம்"

பண்டைக் காலத்தில் பெண்கள் நூல் நூற்றமையை நக்கீரர், கபிலர், பவணந்தி முதலியோரும் கூறியுள்ளனர். 'பருத்திப் பெண்டு' என்று புறநானூறு (125, 326)இதனைக் குறிப்பிடுகிறது.



# நெசவுக்கலை பற்றிய குறிப்புகள்

''நூலினு மயிரினு நுழைநூற் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து நறுமடி
செறிந்த வறுவை வீதியும்''

- சிலப்பதிகாரம்

என்று இளங்கோவடிகள் கூறுவதால், பண்டைத் தமிழர் நெசவின் பெருமை விளங்கும். "மயிரினும்" என்பதற்கு "எலிமயிரினாலும்" என்று பொருள் கூறியுள்ளார் அடியார்க்குநல்லார். மயிர் நிறைந்த ஒருவகை மலையெலி பண்டைத் தமிழ் நாட்டிலிருந்த தென்பதும், அதன் மயிரால் சிறந்த கம்பளம் நெய்யப்பட்ட தென்பதும்,

''புகழ்வரைச் சென்னிமேற் பூசையிற் பெரியன
பவளமே யனையன பன்மயிர்ப் பேரெலி''

''செந்நெ ருப்புணுஞ் செவ்வெ லிம்மயி
ரந்நெ ருப்பன வாய்பொற் கம்பலம்''

- சீவக சிந்தாமணி

என்று சிந்தாமணி கூறுவதாலும் அறியலாம்.

பருத்திச் செடி, நூல் நூற்றல்
பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்
கோடைப் பருத்தி வீடுநிறையப் பெய்த
வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்

### நெசவு

ஆளில் பெண்டிர் தாளின் செய்த நுணங்கு நுண்பனுவல் போலக் கணங்கொள.

பருத்திப் பெண்டின் சிறு தீ விளக்கத்து

### துணிகள்

இழை மருங்கறியா நுழை நூற்கலிங்கம்

பாம்பு உரித்தன்ன வான்பூங் கலிங்கமொடி

(புறம்: 397-15)

''பட்டினும் மயிரினும் பருத்து நூலினுங்
கட்டுநுண்வினைக் காருக ரிருக்கையும்
பாலாவி யன்ன ஆடை
கிழியினுங் கிடையினும் தொழில்பல பெருக்கியோர்

- சிலப்பதிகாரம்

### அக்கால ஆடை வகைகள்

ஆடைகளில் பல்வேறு வண்ணங்கள் மிகத்தொன்மையான காலத்திலிருந்து இடம் பெற்று வந்தது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழகத்தில் பல்வேறு வண்ண ஆடைகள் இருந்து வந்தன. மகளிர் பட்டிலும், பஞ்சிலும் நெய்த பூந்துகில்கள் பல அணிந்து வந்துள்ளனர். தமிழக மக்கள் நாற்பதிற்கு மேற்பட்ட வண்ணங்களை அறிந்திருந்தனர். சித்தன்னவாசல், தஞ்சைப் பெரிய கோவில் ஆகியவற்றில் சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன் தீட்டப்பட்ட ஓவியங்கள் பல்வேறு தாக்குதல்களுக்கு உட்பட்டும் அதன் நிறம் மாறாது, பொலிவு குன்றாது. புத்தம் புதிய வண்ணம்போல ஒளிர் விட்டுக் கொண்டிருப்பதே தக்க எடுத்துக்காட்டாகும்.

முற்காலத்தில் நமது நாட்டில் ஆடைகளின் வண்ணங்கள் மட்டுமல்ல; அதன் உடலும், விளிம்பும் முன்றானையும் பல்வேறு கொடிகளாலும் பூக்களாலும் பிறவற்றாலும் செய்யப்பட்டு அவைகளுக்குப் பல பெயர்கள் வழங்கப்பட்டன.





**1980-ல்** கோவை ஜில்லா திருப்பூர் தாலுக்கா வாய்ப்பாளையத்தில் திருமதி.இராமாயம்மாள் சென்னியப்ப முதலியாருக்கும் 5-வது மகனாகப் பிறந்தார். இவர் ஆரம்பத்தில் சென்னிமலை திண்ணைப் பள்ளிக்கூடத்தில் பயின்று, ஆங்கிலக் கல்வியை ஈரோட்டில் பயின்றார்.

1920-ல் கோவைக்கு குடியேறி பிரபல பருத்தி வியாபாரியாகவும், கோவை முனிசிபல் கவுன்சிலராகவும், கோவை பெஞ்ச் கோர்ட்டுக்கு கௌரவ நீதிபதியாகவும் இருந்தார்.

1929-ஆம் ஆண்டு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க முதல் மாநில மாநாடு ஈரோட்டில் நடைபெற்றது. அந்த மாநாட்டில் சமூக மாநாட்டு வரவேற்புத் தலைவராகவும் இருந்தார்.

1930-ல் இருந்து 1952- வரை மாநிலச் சங்கத்தில் இணைத்தலைவராக இருந்து சமுதாயப் பணியாற்றினார்.




# செங்குந்த குலச்செம்மல் கோவை V.S.செங்கோட்டையா

1931-ஆம் ஆண்டு செங்கல்பட்டு ஜில்லா காஞ்சிபுரத்தில் 2-வது செங்குந்தர் மாநில மாநாட்டில் செங்குந்தர் குலக் கொடியை ஏற்றி வைத்தார்.

1933-ஆம் ஆண்டு தஞ்சாவூர் ஜில்லா திருவாரூர் நகரில் 4-வது செங்குந்தர் மாநில மாநாட்டில் வர்த்தக மாநாட்டுத் தலைவராகவும் இருந்தார்.

1933-ஆம் ஆண்டு கோவையில் ஸ்ரீ சாரதா மில்ஸ் லிமிடெட் என்ற நூற்பாலையை நிறுவி, அந்த ஆலையில் 1000 பேருக்கு மேல் பணி கொடுத்தார். அதில் செங்குந்தர்களுக்கு முன்னுரிமை கொடுத்தார். இந்த மில்லில் 1933-1952 வரை மேனேஜிங் டைரக்டராக இருந்தார். - 1936-ஆம் ஆண்டு திருநெல்வேலி ஜில்லா அம்பாசமுத்திரம் நகரில் 6-வது மாநில மாநாட்டில் மகாநாட்டை திறந்து வைத்தார்.

1942-ஆம் ஆண்டு கோவை ஜில்லா பெருந்துறையில் காசநோய் (T.B) ஆஸ்பத்திரி கட்டுவதற்கு 100 ஏக்கர் நிலம் நன்கொடையாக வழங்கினார்.

1947-ஆம் ஆண்டு தென்னாற்காடு ஜில்லா குறிஞ்சிபாடியில் 10-வது மாநில மாநாட்டில் சமூக மாநாட்டுத் தலைவராகவும் பொறுப்பு வகித்தார்.

1952-ஆம் ஆண்டு கோவை நீலாம்பூர் அருகில் உள்ள முதலிபாளையத்தில் நடைபெற்ற கோவை ஜில்லா செங்குந்தர் மாநாட்டுத் தலைவராகவும் இருந்தார்.




தொகுப்பாசிரியர்:
**சொ.சம்பத்,**
சுந்தராபுரம், கோவை.






## காமாட்சியம்மன் விருத்தம்

பத்துவிரல் மோதிரம் எத்தனை பிரகாசமது
பாடகந் தண்டை கொலுசும்,
பச்சை வைடூரிய மிச்சையாய் இழைத்திட்ட
- பாதச் சிலம்பி னொலியும்,
முத்து மூக்குத்தியும் ரத்தினப் பதக்கமும்
மோகன மாலை யழகும் ;
முழுதும் வைடூரியம் புஷ்பரா கத்தினால்
முடிந்திட்ட தாலி யழகும் ,
சுத்தமா யிருக்கின்ற காதினிற் கம்மலுஞ்
செங்கையில் பொன்கங்கணம்,
ஜெகமெலாம் விலைபெற்ற முகமெலா மொளியுற்ற
சிறுகாது கொப்பி னழகும்,
அத்திவரதன் தங்கை சத்தி சிவரூபத்தை
அடியனாற் சொல்லத் திறமோ,
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும்
அம்மை காமாட்சி உமையே.

## கவிஞர் ஒட்டக்கூத்தனுக்கு சிரசாசனம் செய்து கொடுத்த விருத்தம்

குடிவரவு சீர் கொண்ட அண்ட பகிரண்டமும்
சொற்சிறை படைத்த பெரியோர்
சூரபத்மனையும் வல்லானையும் வென்று
பொற்குவை பெற்ற பெரியோர்
பழயகுலச் செயல் காமாட்சியம்மனின்
பாதத்தில் வந்த பெரியோர்
பாவலருக்கே சிரசு சிம்மாதனமாக
பண்போடு கொடுத்த பெரியோர்
பழதமிழ் புலவருக்கு கவிதீரவே சொர்ணம்
மழைபோல் சொரிந்த பெரியோர்
மாநிலம் தன்னிலே அபிமானங்களைக்காக்க
வெகு வலிமையது பெற்ற பெரியோர்
முடிபெற்ற நவரத்ன கிரீடம் பொருந்தவே
முருகதுணையான பெரியோர்
முத்தமிழ் துலங்கி வரும் மூவேந்தர் நாட்டிலே
முனைவீர செங்குந்தமே!



# குந்தர் விருத்தம்

## வீரமகன் அலகு குத்தி வருவதை அம்மன் மக்களோடு வீதியில் வந்து காணும் அதிக விருத்தம்

வீரசூரமாரி பரமேஸ்வரி
மெஞ்ஞான கொண்டத்து அழகாயி
உமதுடைய திருநாளிலே எமையுமது சுடலாடி
வருகிறோம் வருகிறோம் என்று சொல்லி
ஊழிய ஜனத்துடன் கொண்டத்து மாகாளி
கொடுத்தொரு மாலை வாங்கி
ஆரவாரத்துடன் கோர கம்பீரமாய்
ஆக்கிரமாய் தூக்கியுடலை
ஆதியின் முதுகிலே கொக்கிகளை ஏற்றிட்டு
அண்டஅதரத்திலே நின்று
வீரபாகு தேவரும் சுடலாடி வருகிறானென்று அம்மன்
வீதியிலே பவனிவந்து
மேதைப்பரமேஸ்வரி ஆலயம் பதிவளரும்
வீசிவரும் பஞ்சவர்ணம்
கோதையம்பதிவளரும் செங்குந்த முதலிமார்
கொண்டாட வந்த விருது!





## பண்டை காலத்தில் செங்குந்தர் புகழ் சேர்த்த விருத்தம்

பூலோக கைலாச மைசூர் தானாவதி
புனித சீரங்க பட்டணம்
புகழினா ரிதிசாலி தலையாய் மதிக்கின்ற
புகழும் அப்பாச்சிராயர்
மேலான வெங்கிட்ட ராயருட காரணிக்கு
மெதுவாய் புகழ் சோழனும்
மெய்ஞான தேரின் மேலேறியே
வீதியில் பவனி வந்து
நாவா புரத்திலும் நம்ம செங்குந்தமென்று
நன்று நன்றே புகழ!
நல்ல பரனேறிய வீரசெங்குந்தமாய்
நாகலோகத்திலேறி....
குலவைவிட்டுக் கொண்டு ....
புறங்கையினால் ஆயுதமெடுத்து
கல்லினால் அணிவிட்ட தேரின்மேலேறியே ...
இடசாரி வலசாரி வந்து
அம்மன், சத்தமிடும் சேகண்டி வீரப்புலிக்கொடி
அரசிலைப்பாவாடையும்
நீர்பெற்ற காலத்தில் எங்களுக்கோர் சோதனை வருவதுண்டோ
லட்சிய அண்ணாமலை முத்துகுமாரனே
கனக லட்சுமி மார்பனே!

## செங்குந்தர் குலோத்துங்க மாமன்னரிடம் விருது பெற்ற விருத்தம்

குற்றமில்லாமலே குலோத்துங்க சோழனின்
கொடிவிருது பெற்ற பெரியோர்!
கோபாவேசத்துடன் குமரதுணையாய் வந்து
தேவர்களை மீட்ட பெரியோர்!
விரைய மில்லாமலே வீரபாண்டியனுக்கு முன்னாளிலே!
வியாக்யானம் தந்த பெரியோர்!
விருது புடை சூழவே சங்கநாதத்துடன்,
வீதிவலம் வந்த பெரியோர்!
தேவியின் கையிலே குந்தாயுதம் பெற்று
செங்குந்தரான பெரியோர்!
முப்பெரும் படையிலும் முதலணியில் சென்று
முதலியாரான பெரியோர்!
கொள்கை பலமாகவே குமரேசப் பெருமானின்
கொடிவிருது பெற்ற பெரியோர்!
ஒத்த ரசனானவன் கொற்றவை பீடத்தில்
குடிகொண்ட செங்குந்தமே!

## செங்குந்தர் தன்னை எதிர்த்து கம்பம் நட யாரையும் அனுமதியார் என்பதை விளக்கும் விருத்தம்

காரணமதாகவே வீராணக்குளத்திலே – வல்லான்
கம்பமது கொண்டு நெட்டி
கண்களுக் கெத்தாத உயரத்திலே .....
கோட்டையும் கட்டி அதன் மேலிருக்க அப்போ...
சேரன், சோழன், பாண்டியன் மூவராஜாக்களும்
அவனை ஜெயிக்க வழியறியா மலேயிருக்க
காஞ்சி மாநகர்தனில் வீரசெங்குந்த முதலிமகன்,
நான் வெல்கிறேன் என்று சொல்லி...
எதிர்கம்பம் நட்டலானான். அங்கே...
ஏரிக்கரை தன்னிலே இருவப் பற்றியே
ஏறிநில்லும் தெப்பம் கட்டி அரை நொடியில் கம்பத்தடியில்
வந்தான்! அங்கே மூவரைப்பற்றியே முகவரி தெரியலானான்
அங்கே! மூயுகம் கண்டதொரு காளியங்கிருக்க அவனை
மூவது வரம் கேட்கவே... அப்போ
புகழ் பத்ரகாளியை கையினால் பிடித்துமே
செந்தமிழ்க்கருள்மாரி செய்யலானான் அப்போ ...
வல்லானை பிடித்துமே அவனுடன், வாள்போர், மல்போர்!
வில்போர் முதலான போர்களிலும் வென்று ..
அவன் கழுத்திலே வாள்வைத்து அறுத்தபோது
வல்லாளன் தேவியாம் அல்லாகுழலி அதுகண்டு நடுங்கியே...
அண்ணா ... மாங்கல்யப் பிச்சையாய்
மடிப்பிச்சை தாருமென்று கெஞ்சியழுகவே – மனமிறங்கி...
கொண்டாட அவனுறவு கொல்லாமல் அவன் உயிரை
கொற்றமும் குலையாமலே – சுற்றமும் கலையாமலே
சோழர் முடிகொண்ட அரசன்முன்னே நின்ற
செங்குந்தருக்கு நிகரில்லையே!

## செங்குந்தர் பெருமை பெற்ற விருத்தம்

நந்தி மகன் அசுமுகா சூரனை ஒருயுகத்திலே
சமர்புரிந்து சங்கரித்தோன்
சரவீரபத்திரனும் ஒருயுகத்திலே
தட்சனை தலையரிந்து தீயிலிட்டோன்
கந்தனும் வீரபாகு தேவரும், ஒருயுகத்திலே
சூரனை கருவே ரறுத் தெறிந்தோன்
கரியமால் தூதுவனாம் அனுமானும் ஒருயுகத்திலே
இலங்கையை தணல் காட்டி மீண்டுவந்தோன்.
இந்திரன் வழிவந்த செங்குந்தன் – ஒரு யுகத்திலே
வல்லானை எதிரிட்டு வென்றுவந்தோன்
ஈசனுட விந்துவகை யாகையால் இவர்களுக்கு
எதிரில்லை என்று மறைநூல்.
செந்தமிழ் கூத்தனும், செங்குந்தரைப் பாடவே,
தேவி சரஸ்வதி கண்பார்க்கவும்
தீர்க்கமுள்ள மார்க்கண்ட காமாட்சியைப் போலே
கலியுகத்திலும் செழித்து வளர் செங்குந்தமே!



முதல் கடை



ஸ்ரீ

# பழனி ஆண்டவர்

## டெக்ஸ்டைல்ஸ்

5, ஈஸ்வரன் கோவில் வீதி, திருப்பூர்.
போன் : 0421 - 2241013, 4244882

தென்னிந்திய செங்குந்தர் 19வது மாநில மாநாடு
செங்குந்தர் நெசவாளர் எழுச்சிப் பேரணி
வெற்றியடைய வாழ்த்துக்கள்!




*Trend • Tradition • Trust since 1950*



முத்து கோல்டு ஹவுஸ்
MUTHU GOLD HOUSE
222, J.N.Street
Pondicherry - 1.
Ph:2222338, Fax:2348970
email: muthugold11@gmail.com

 HALL MARK SHOW ROOM

*Trend • Tradition • Trust since 1950*



முத்து சில்க் பிளாசா
Muthu Silk Plaza
*90, Kosakadai Street, Puducherry - 605 001.*
*Ph:0413-234 0275/234 0276, Fax.91 413 222 9980*
*e mail: muthusilk11@gmail.com*



19வது செங்குந்தர் மாநில மாநாட்டு மலர் சிறக்க வாழ்த்துகள்!

செங்குந்தர் கல்வி மற்றும் தர்ம பரிபாலன அறக்கட்டளை

ஜெயங்கொண்டம் - 621802, அரியலூர் மாவட்டம்.



# செங்குந்தர் திருமண மண்டபம்

பேருந்து நிலையம் அருகில், ஜெயங்கொண்டம்

போன் : 04331 - 250312

- பேருந்து நிலையம் அருகில் உள்ளது.
- குறைந்த வாடகை.
- நிறைந்த வசதி உள்ளது.
- ஜெனரேட்டர் வசதி உள்ளது.
- தங்கும் அறைகள் உள்ளன.
- மணமக்கள் அறைகளுக்கு குளிர்சாதன வசதி உள்ளது.
- இருசக்கர வாகனங்கள் நிறுத்த இடவசதி உண்டு.
- தண்ணீர் வசதி உள்ளது.

வருகை தருவீர்!

ஆதரிப்பீர்.




T.E.ஆறுமுகம்
செயலாளர்

A.V.ரத்தினம் M.A.B.L.
நிர்வாக அறங்காவலர்

19-வது செங்குந்தர் மாநில மாநாடு
வெற்றி விழா வாழ்த்து மலர்

*சிறக்க வாழ்த்துகிறோம்.*



விடாமுயற்சிக்கு வெற்றி
வந்தே தீரும்.
-பேரறிஞர் அண்ணா




# ஓட்டல் அர்ச்சனா

## உயர்தர சைவ உணவகம்

# 16, அண்ணா தெரு, பழைய பஸ்நிலையம்
குடியாத்தம்-632602. வேலூர் மாவட்டம்.

*என்றும் உங்களுடன்*

**அர்ச்சனா ப.ச.நவீன்சங்கர் M.A.,**

அமைப்பாளர் : குடியாத்தம் நகர திமுக மாணவரணி
சிறப்பு உறுப்பினர் : தமிழ்நாடு ஓட்டல்கள் சங்கம்
இணைச்செயலாளர் : குடியாத்தம் ஓட்டல் உரிமையாளர் சங்கம்

99 6500 6500

hotelarchananaveen@gmail.com

hotelarchananaveen





19 வது செங்குந்தர் நெசவாளர் மாநாட்டு மலர் சிறப்புடன் வெளிவர வாழ்த்துக்கள்.

# arviga ENTERPRISES

## proudly announces to supply the following

1. School/College Addressed Note Books.
2. School Addressed Students Daily Planner Diary.
3. School Addressed Drawing Exercise Note Books.
4. School Addressed Drawing Colouring Note Books.
5. School Addressed Graph Note Books.
6. SCHOOL/COLLEGE ADDRESSED EXAMINATION SHEETS.

## QUALITY OFFSET PRINTERS OF

Trade Mark Labels
Monthly Magazines
School Note Books
College Note Books
Brochures and Leaflets
Product Catalogues



Mono Carton boxes
Self Adhesive Stickers
Advertising Notices
Wedding Cards
Daily Calenders
Monthly Calenders

**WE UNDERTAKE ALL COLLEGE/SCHOOL RELATED PRINTING JOBS.**

**arviga ENTERPRISES**
1/445 B, NGO Colony, SATCHIYAPURAM,
SIVAKASI - 626 124.
MOBILE : 8012337337
7558112800
email : arviga2012@gmail.com



Ln.G.தில்லை கோவிந்தன்
விருதுநகர் மாவட்ட
செங்குந்த மகாஜன சங்கம்.



தாமரை, முல்லை, அரும்பு, மாம்பிஞ்சு போன்ற உருவங்களையும் வியந்து பாராட்டியுள்ளார்.

பருத்தி நெசவு முதன்முதல் இந்தியாவில்தான் செய்யப்பட்டதென்றும், அங்கிருந்தே மேனாடுகளுக்குப் பரவியதென்றும் 'வயவர் சாண் மார்சல்' கூறுகிறார். பண்டைக்காலச் வரலாற்று ஆய்வாளர்கள், மேனாடுகள் இந்தியாவினின்றும் இறக்குமதி செய்த பொருள்களுள், துணியும் ஒன்றெனத் தவறாது குறிப்பிடுகின்றனர். 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதிவரை, இந்தியாவிலிருந்தே மேல் நாடுகளுக்குத் துணி ஏற்றுமதியானது என்பதை பின்வரும் குறிப்புகளால் அறியலாம்.

"தற்கால இந்தியாவின் வறுமைக்கு மற்றொரு பெருங்காரணம், ஐரோப்பாவில் பொறிவினைத் தோற்றத்தினாலும், திருந்திய முறைச் செய்பொருள் வினையின் பரவலினாலும் ஏற்பட்ட கைத்தொழில் தேவைக்குறைவே. ஐரோப்பா, இந்தியரின் சொந்தத் துறைகளில், இன்னும், எண்ணுக்கெட்டாத தொன்று தொட்டு எவற்றுக்கு அவர்களைச் சார்ந்திருந்தோமோ அவையும், அவர்களுக்கே வியப்பை ஏற்படுத்திய கைத்தொழில்களிலும் செய்பொருள் வினைகளிலும், அவர்களை வெல்லக் கற்றுக் கொண்டதினால், உண்மையில் இனியொருபோதும் எதற்கும் இந்தியாவைச் சாந்திருப்பதில்லை. உண்மையில், காரியங்கள் தலைகீழாய் மாறிவிட்டன. இவ்வெளிப்பாடு இந்தியாவை முற்றிலும் கெடுத்துவிடுவதாக அச்சுறுத்துகின்றது.

"ஐரோப்பாவிற்குத் திரும்புவதற்குச் சற்று முன்பே, கைத்தொழில் செய்யும் கூற்றங்களிற் சிலவற்றினூடு வழிச் சென்றேன். அங்குப் பரவியிருந்த பாழ்நிலைக்கு ஏதும் ஒப்பாகாது. வேலையறைகளெல்லாம் சாத்தப்பட்டிருந்தன. அங்கே வாழும் இலட்சக்கக்கணக்கான நெசவுத் தொழின் மக்கள் பசியால் மடிந்து கொண்டிருந்தனர். நாட்டிலுள்ள பாரபட்சம் (Prejudice) பற்றி, அவர்கள் அவமானப்பட்டன்றிப் பிற தொழிலையும் மேற்கொள்ள முடியாது. முந்திய காலத்தில் நூல் நூற்றுத் தங்கள் குடும்பத்தைக் காத்துவந்த, கணக்கற்ற கைம்பெண்களும் பிற பெண்டிரும் வேலையிழந்து பிழைப்பற்றிருந்ததைக் கண்டேன். யான் எங்குச் சென்றாலும் ஒரே துன்பத்தோற்றம் எனக்கு எதிரே நின்றது"

என்று 18ஆம் நூற்றாண்டில் மைசூர் நாட்டில் விடையூழியம் செய்த அப்பே டூபாய்ஸ் (Abbe Dubois) கூறுகின்றார்.

## ஆடை குறித்த பழந்தமிழ் சொல் வழக்குகள்

பலவகைத் துணிகள் பண்டைத் தமிழ்நாட்டில் நெய்யப்பட்டமை. துகில் (ஆடை):

| | | |
|---|---|---|
| கோசிகம் | பீதகம் | பச்சிலை |
| அரத்தம் | நுண்டுகில் | சுண்ணம் |
| வடகம் | பஞ்சு | இரட்ட |
| பாடகம் | கோங்கலர் | கோபம் |
| சித்திரக்கம்மி | குருதி | கரியல் |
| பேடகம் | பரியட்டக்காசு | வேதங்கம் |
| புங்கர்க்காழகம் | சில்லிகை | தூரியம் |
| பங்கம் | தத்தியம் | வண்ணடை |
| கவற்றுமடி | நூல் யாப்பு | திருக்கு |
| தேவாங்கு | பொன்னெழுத்து | குச்சரி |
| தேவகிரி | காத்தூலம் | இறஞ்சி |
| வெண்பொத்தி | செம்பொத்தி | பணிப்பொத்தி |

என 36 வகையென்று அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.

அக்காலத்தில் பாலாடைக்கும் பஞ்சாடைக்கும் ஆடை என்னும் பொதுப்பெயர் வழங்கி வந்துள்ளது. இக்காலத்திற் சூழ்ச்சியப்பொறியால் நெய்யும் சிறந்த ஆடை வகைகள் போன்றே, அக்காலத்திற் கைத்தறியால் தமிழர் நெய்து வந்தனர் என்பதை அறியலாம்.







# செங்குந்தர் திருமண மண்டபம்

A/c

குளிர்சாதன (A/c) வசதியுடன் கூடிய அறைகள்

- நகரின் மையப் பகுதியில் உள்ள மிகச் சிறப்பான திருமண மண்டபம்
- 1000 போகள் அமார்ந்து விழாவினைக் கண்டுகளிக்கும் காற்றோட்டமான திருமணக் கூடம்.
- 400 போகள் அமாந்து உணவருந்தும் காற்றோட்டமான உணவுக்கூடம் மற்றும் குளிர்சாதன அறைகள்
- உறவினர்கள், நண்பர்கள் தங்கிட பிரத்தியேக வசதி கொண்ட அறைகள்.
- அனைத்து வசதிகளுடன் கூடிய சுகாதாரமான, விசாலமான சமையற் கூடம்.

1 & 2, கமலம் நகர், (வண்டிப்பாளையம் சாலை), கடலூர் - 607 002.
போன் : 04142 234708 செல்: 93454 51137, 96298 32401

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் 19வது மாநில மாநாடு வெற்றி பெற வாழ்த்துக்கள்

# பெரியசாமி டவர்ஸ், திருச்சி



உரிமையாளர்

Lion Mjf. P.T. ராஜன் B.Sc.,

## பெரியசாமி முதலியார் திரையரங்கம் & பிரியா மூவீஸ், திட்டக்குடி

PTR ரியல் எஸ்டேட்ஸ்,
புரோமோட்டர்ஸ் & பில்டர்ஸ்,
திருச்சி – 2

Cell : 94431 44449,
Ph : 0431 - 2715534
04143 - 255339



# கலை இலக்கியத்தில் செங்குந்தர்



கற்றது கையளவு கல்லாதது கடலளவு என்ற பழமொழி நாம் அனைவருமே கற்று ஏற்றுக்கொண்டது. அதன் பொருளை தனியே பிரித்துப் பார்த்தால் அதை கனிமொழியாக அனுபவிக்க முடியும். கையளவு கற்றது மாத்திரமே அனைவரும் அருந்தும் வகையில் சுவையானது. கடலளவு கல்லாததும் கூட யாரோ சிலர் கைகொண்டு எடுத்துப் பரிமாறும்போது அடுத்தவரும் அருந்தும் சுவை கொள்கிறது. இலக்கியம் என்ற சொல்லே அந்த நோக்கத்தை முன்நிறுத்துவது அல்லவா.

மனிதன் மனிதர்களானதால் சமூகம். அதற்குமுன் மனிதன் சிந்தித்ததால் மொழியன். மொழியன் மொழியை சுவைத்து பிறருக்கும் பரிமாறுவதால் இலக்கியம். மனிதனின் சிறப்பு சமூகம் என்றால் மொழியனின் சிறப்பு இலக்கியம் தான். இலக்கியத்தின் சிறப்பே மொழியனின் வாழ்க்கை. வாழ்வின் சிறப்பே மனித சமூகத்தின் சிறப்பு.



சிறந்த உலகில்தான் சிறந்த சமூகம் உண்டாகி சிறந்த தலைமுறையும் சிறந்த இலக்கியமும் வாழ்வும் சாத்தியம் என்பது எதார்த்தம். ஏனெனில் சிறப்பு என்பது மனிதப் பொதுப்பண்பு. பிறப்பும் இறப்பும் உயர்திணைக்குப் பொருளாக வேண்டுமெனில் தோன்ற அவனுக்கு சிறப்பு வேண்டும் இல்லையா.

அறிவும் உணர்வும் கலந்து மொழியால் இலக்கியம் படைத்த படைப்பாளிகள் அதன் மூலம் உடல் உருவத்தை கதை கவிதைக்கு அபிநயித்த கலைஞர்களையும் உருவாக்கித் தந்துள்ளார்கள்.

தமிழகக் கலை இலக்கியத்தில் வரலாற்றிலிருந்து இன்றுவரை சிறப்புபெற்று வரும் நமது சமுதாயத்துச் சிற்பிகளை தொகுத்துப் பார்ப்பதிலும் நினைவு கூறுவதிலும் பூரிப்பும் பெருமிதமும் ஏற்படுகிறது.

கவிராட்சகன், காளக்கவி, கர்வக்ஞகவி என்றெல்லாம் பட்டங்கள் பெற்றவர் ஒட்டக்கூத்தர். அவர் எழுத்தாணி பிடித்த காலம் தொட்டு தொடர்ந்து பேனா பிடித்து தொல்காப்பியத்திற்கு உரையும் கம்ப ராமாயணத்திற்கு உரைப்பொழிவும் திருக்குறளுக்கு உரையும் என எழுத்தால் வேரூன்றி மரமென்று ஓங்கி வளர்ந்து செழிக்கும் சமுதாயம் நமது செங்குந்தர் சமுதாயம்.

தமிழ் இலக்கியக் களஞ்சியமான அபிதான சிந்தாமணி படைத்துத் தந்தவர் ஆ.சிங்காரவேலு முதலியார் அவர்கள். திருவாரூர் உலா - பிள்ளைக் கலம்பகம் - திருக்கழுக்





